# சங்க இலக்கியத்தில் பேரிடர் மேலாண்மைப் பதிவுகள்

பாரதியார் பல்கலைக்கழக முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்காக

அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**பெ. ராம்குமார்**

**நெறியாளர்**

**முனைவர் சி. சித்ரா**






**தமிழ்த்துறை**

**பாரதியார் பல்கலைக்கழகம்**

**கோயம்புத்தூர் - 641 046.**


**டிசம்பர் - 2016**

# நெறியாளர் சான்றிதழ்

இடம் : கோயம்புத்தூர்

நாள் :

**முனைவர் சி. சித்ரா**
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை
பாரதியார் பல்கலைக்கழகம்,
கோயம்புத்தூர் - 641 046.

**“சங்க இலக்கியத்தில் பேரிடர் மேலாண்மைப் பதிவுகள்”** என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வேடு 2012 - 2016 ஆம் கல்வியாண்டில் பாரதியார் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டத்திற்காக வழங்கப்பட்டது. இவ்வாய்வேடு எனது மேற்பார்வையில் முழுநேர ஆய்வாளரான பெ. ராம்குமார் அவர்களால் தன்னியலாக உருவாக்கப்பெற்றது எனவும் இந்த ஆய்வேடு வேறு எந்தப் பட்டத்திற்காகவும் அளிக்கப் பெறவில்லை எனவும் சான்றளிக்கிறேன்.

**மேலொப்பம்** **நெறியாளர் கையொப்பம்**

# ஆய்வாளர் உறுதிமொழி

இடம் : கோயம்புத்தூர்

நாள் :

**பெ. ராம்குமார்**
முனைவர் பட்ட ஆய்வாளர் (முழு நேரம்),
தமிழ்த்துறை,
பாரதியார் பல்கலைக்கழகம்,
கோயம்புத்தூர் - 641 046.

**“சங்க இலக்கியத்தில் பேரிடர் மேலாண்மைப் பதிவுகள்”** என்னும் தலைப்பில் 2012 – 2016 ஆம் கல்வியாண்டில் பாரதியார் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டத்திற்காக இவ்வாய்வேடு சமர்ப்பிக்கப்படுகிறது. இவ்வாய்வேடு எனது சொந்த முயற்சியால் உருவானது என்றும் இதற்கு முன் வேறெந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்காகவும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

**ஆய்வாளர் கையொப்பம்**

**(பெ. ராம்குமார்)**

## ஆய்வுக் கட்டுரை வெளியிட்டமைக்கான உறுதிச் சான்றிதழ்
## (Certificate in Genuiness of the Publications)

இடம் : கோயம்புத்தூர்
நாள் :

**முனைவர் சி. சித்ரா**
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை
பாரதியார் பல்கலைக்கழகம்,
கோயம்புத்தூர் - 641 046.

எனது நெறியாளுகையின் கீழ் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொண்ட செல்வன் பெ. ராம்குமார் **“சங்க இலக்கியத்தில் பேரிடர் மேலாண்மைப் பதிவுகள்”** என்ற ஆய்வேட்டுடன் தொடர்புடைய ஆய்வுக் கட்டுரைகளை, திருவண்ணாமலை மாவட்டம் இராஜா நந்திவர்மன் கலை, அறிவியல் கல்லூரியில் 12, 13 ஏப்ரல் 2014 அன்று நடைபெற்ற பன்னாட்டுக் கருத்தரங்கில் ISBN 978 - 81 - 923186 - 0 - 8 என்ற பதிவெண் பெற்ற ஆய்வுக்கோவையில், கட்டுரை எண் 99 - இல் **‘புறநானூற்றுப் பாடுபொருண்மையில் இயற்கையும் அழிவும்’** என்னும் தலைப்பிலும், இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர்கள் மன்றம், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூரில் மே 16, 17 - 2015 ஆகிய நாட்களில் நடைபெற்ற பன்னாட்டுக் கருத்தரங்கில் ISBN 978 - 81 - 928616 - 8 - 5 என்ற பதிவெண் பெற்ற ஆய்வுக்கோவையில், கட்டுரை எண் 64 - இல் **‘காடு கொன்று நாடாக்கி - மறுவாசிப்பு’** என்னும் தலைப்பிலும் வெளியிட்டுள்ளார் எனச் சான்றளிக்கப்படுகிறது.

**மேலொப்பம்** **நெறியாளர்**

# நன்றியுரை

எனக்கு முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ள வாய்ப்பளித்த பாரதியார் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைக்கு முதற்கண் நன்றியைக் கூறிக்கொள்கிறேன். மேலும், இதனை என் வாழ்வில் பெற்ற பெரும்பேறாகக் கருதுகிறேன்.

இவ்வாய்வுப் பணியினைச் செம்மையுற மேற்கொள்ள உதவித்தொகை அளித்துதவிய பல்கலைக்கழக மானியக்குழுவிற்கு நன்றிகூறக் கடமைப்பட்டுள்ளேன்.

இவ்வாய்வு செம்மையுற அமைய சீரிய கருத்துகளை வழங்கிய தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் வ. ஜெயா அவர்களுக்கும் மேனாள் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் சி.மா. இரவிச்சந்திரன் அவர்களுக்கும் தமிழ்த்துறைக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**'சங்க இலக்கியத்தில் பேரிடர் மேலாண்மைப் பதிவுகள்'** எனும் தலைப்பில் இவ்வாய்வினை மேற்கொள்ள அனுமதியளித்து, இவ்வாய்விற்கு நெறியாளராக இருந்து வழிகாட்டி, ஆய்வில் சிறந்தோங்க சீரிய கருத்துகளை வழங்கிய என் நெறியாளர், இணைப்பேராசிரியர் முனைவர் சி. சித்ரா அவர்களுக்கு வணக்கத்துடன் என் நன்றியைச் சமர்ப்பிக்கின்றேன்.

தமிழ்த்துறையில் ஆய்வினை மேற்கொண்ட காலகட்டத்தில் என் ஆய்விற்கு உதவிய துறைப்பேராசிரியர்களான பேராசிரியர் முனைவர் தே. ஞானசேகரன் அவர்களுக்கும் உதவிப்பேராசிரியர்கள் முனைவர் ஓ. பாலகிருஷ்ணன், முனைவர் ச. தங்கமணி அவர்களுக்கும் மற்றும் பிற பேராசிரியர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

பள்ளிப் பருவம் முதல் முனைவர் பட்டம் வரை எனக்குப் பல்துறை அறிவு புகட்டுவதோடு இவ்வாய்வு செம்மையுற பல்லாற்றானும் உதவிய என் அன்பிற்குரிய ஆசானும், அரங்கநாதன்பேட்டை அரசினர் மேல்நிலைப்பள்ளியின் முதுநிலை ஆசிரியையுமான கி.ஷண்முகவடிவு - முருகேசன் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

உயர்கல்வி பயில எனக்கு அனைத்து வகையிலும் உதவி புரிந்து வாழ்விலும் பல்வேறு வகையில் வழிகாட்டியாகத் திகழும் பாசமிகு அண்ணன் கி. பாலமணிகண்டன் - சத்யா அவர்களுக்கும் இந்தியச்சுடர் கல்வி அறக்கட்டளையின் அனைத்து நல் உள்ளங்களுக்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுத் தொடர்பாகவும் வாழ்வுத் தொடர்பாகவும் பல கருத்துக்களை வழங்கிய அன்பு ஆய்வு நண்பர்களும், பேராசிரியர்களுமான மா. அருள்மணி, ஆ. முத்தையன், பா. சிவக்குமார், ச. முத்துச்செல்வம், ப. வேலு, கோ. பெருமாள், அம்சராஜ், சிவபாலன்

ஆகியோருக்கும் சி. சங்கீதா, நித்யா, மா. அமுதா, ஜான்சிராணி, அ. ஹெலன்ரீட்டா பொருளியல் துறை நண்பரான சிவக்குமார், விஜயகுமார் மற்றும் பிற ஆய்வாளர்களுக்கும் ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வாளர்களுக்கும் முதுகலை மாணவர்களுக்கும் மனமார்ந்த நன்றி.

ஆய்வுக்குத் தேவையான நூல்களையும் இதழ்களையும் வழங்கிய கோவை பாரதியார் பல்கலைக்கழக நூலகம் மற்றும் நூலக அலுவலர்களுக்கும் ஐ.ஓ.பி காலனி நூலகத்திற்கும் கோவை ஆர்.எஸ்.புரம் நூலகத்திற்கும், கோவை பேரூர் கல்லூரி நூலகத்திற்கும் சென்னைப்பல்கலைக்கழக நூலகத்திற்கும், சென்னை கன்னிமாரா நூலகத்திற்கும், மதுரை காமராஜர் பல்கலைக்கழக நூலகத்திற்கும், பாண்டிச்சேரி பல்கலைக்கழக நூலகத்திற்கும், நூலகப் பணியாளர்களுக்கும் அலுவலக உதவியாளர் திரு. கௌதம் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

என்னைப் படைத்துக் காத்து என் வளர்ச்சியை மட்டுமே தமது வாழ்வின் நோக்காக வாழ்ந்து வரும் என் தாய் பெ. சித்ரா, தந்தை ம. பெரியசாமி அவர்களையும் என் வாழ்விற்கு உறுதுணையாக விளங்கும் மனைவி நளினி ராம்குமார் அவர்களையும் தங்கை சரண்யா – பிரகாஷ், பாட்டி பாப்பாத்தி ஆகியோரையும் மற்றும் பிற உறவுகளையும் இச்சமயத்தில் எண்ணிப்பார்க்கிறேன்.

ஆய்வேட்டினைப் பிழையின்றித் தட்டச்சு செய்து கொடுத்த தேவராஜ் அவர்களுக்கு மிகுந்த நன்றி.

நன்றியுடன்,

**பெ. ராம்குமார்**

இடம் : கோயம்புத்தூர்

நாள் :

# பொருளடக்கம்

## சுருக்கக் குறியீடுகள்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| உ.ஆ | - | உரையாசிரியர் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலி. | - | கலித்தொகை |
| காடு. | - | காடுகாண் காதை |
| குறள். | - | திருக்குறள் |
| குறி. | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலப். | - | சிலப்பதிகாரம் |
| சிறு. | - | சிறுபாணாற்றுப்படை |
| சிறுப. | - | சிறுபஞ்சமூலம் |
| தி. | - | திரட்டு |
| திணை.மா. | - | திணைமாலை நூற்றைம்பது |
| திரு. | - | திருமுருகாற்றுப்படை |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| நெடு. | - | நெடுநல்வாடை |
| பக். | - | பக்கங்கள் |
| ப. | - | பக்கம் |
| பட். | - | பட்டினப்பாலை |
| பதி. | - | பதிகம் |

| | | |
|---|---|---|
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| புறஞ். | - | புறஞ்சேரி இறுத்த காதை |
| புறம். | - | புறநானூறு |
| பெரு. | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொரு. | - | பொருநராற்றுப்படை |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மங். | - | மங்கல வாழ்த்துப்பாடல் |
| மதுரை. | - | மதுரைக்காஞ்சி |
| மர. | - | மரபியல் |
| மலை. | - | மலைப்படுகடாம் |
| முல். | - | முல்லைப்பாட்டு |
| மு.ப.ஆ | - | முதன்மைப் பதிப்பாசிரியர் |
| மொ.பெ.ஆ | - | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |

# முன்னுரை

சங்க இலக்கியம் பழமையும் பெருமையும் மிகுந்த செந்தமிழால் படைக்கப்பட்டத் தொன்மை வாய்ந்தது. இவ்விலக்கியம் உள்ளடக்கத்திற்கும், உருவத்திற்கும் ஏற்பத் தொகையாக்கம் பெற்றது. தமிழர் பண்பாட்டின் கருத்துக் கருவூலமாகத் திகழ்ந்து தான் தோன்றிய காலச்சூழலின் பின்புலத்தைத் தன்னுள் பிரதிபலிக்கும் தன்மையில் அமைந்துள்ளது. சங்ககாலம் பொற்காலம் என்றும் போரும் பூசலும் நிறைந்த காலம் என்றும் இருவேறு கருத்துகளைத் தமிழ் ஆளுமைகள் முன் வைப்பினும், சங்க இலக்கியம் ஈராயிரம் ஆண்டுகளாக நிலைத்திருப்பதற்குக் காரணம், சமூக நிகழ்வுகளை மையமிட்டிருப்பதாக அமைந்துள்ளதேயாகும். இது மனிதக் காதலையும், மானுட வீரத்தையும் பாடுபொருளாகக் கொண்டு படைப்பாக்கம் பெற்றுள்ளது.

இயற்கையும் மனிதனும் தன்னுள் பின்னிப்பிணைந்து வாழ்ந்த இன்ப வாழ்வினை, சங்க இலக்கியம் முழுவதும் காணமுடிகின்றது. இயற்கையை உள்ளுறை, உவமம், இறைச்சி, கற்பனை என பல்வேறு நிலைக்களன்களில் பயன்படுத்தி அவற்றின் உன்னதத் தன்மையை வெளிப்படுத்திய நிலை போற்றுதற்குரியது. இயற்கை நாயகனாக வாழ்ந்த மனிதன் வேளாண் தொழிலுக்கு மாறுபட்டு நிலையான வாழ்வினை மேற்கொண்டு அரசுருவாக்கத்தை ஏற்படுத்தினான். பெரு வேந்தனாகத் தன்னை நிலைநிறுத்தப் பல்வேறு வழிகளில் போராடத் துவங்கினான். இத்தகுச் சமூகச்சூழல் கொண்ட சங்ககாலத்தில் இயற்கையினாலும், அரசுருவாக்கத்தாலும் ஏற்பட்ட மாறுதல்களால் பல்வேறு நிலைகளில் மக்கள் இன்பத்தை அடைந்திருந்தாலும் மறுபக்கம் பல்வேறு விதமான பேரழிவிற்குத் தள்ளப்பட்டனர் என்பது நிதர்சனமான உண்மை. அத்தகைய காலச்சூழலில் இயற்கையினாலும் மனிதர்களாலும் நேர்ந்த பேரழிவானது மனித மற்றும் பிற உயிரினங்களை எவ்வாறு பாதிப்பிற்குட்படுத்தியது என்பதையும், அப்பாதிப்பிற்குத் தீர்வாக மனித இனத்தின் பங்களிப்பு அமைந்த தன்மையையும் சங்க இலக்கியப் பிரதிகளில் காணப்படும் பதிவுகளின் வழி முன்வைப்பதாக இவ்வாய்வு அமைகின்றது.

## ஆய்வுத்தலைப்பு

**“சங்க இலக்கியத்தில் பேரிடர் மேலாண்மைப் பதிவுகள்”** என்பது ஆய்வின் தலைப்பாக அமைகிறது.

## ஆய்வு நோக்கம்

சங்கப் பனுவலின் வழி காதலையும் வீரத்தையும் மட்டுமல்லாது அக்கால மக்களின் வாழ்வியலையும் அறியமுடிகின்றது. இயற்கையை முன்னிலைப்படுத்தி வாழ்ந்த மனிதன் பின்னாளில் இயற்கையின் மாறுபாட்டால், நிலவுடைமையின் தாக்கத்தால்

‘மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்’ என்னும் கொள்கை நடைமுறையில் இருந்தது. மன்னர்களும் ‘அறநெறி முதற்றே அரசின் கொற்றம்’ எனக் கருதினர். இத்தகுச் சூழலில் இயற்கைச் சீற்றம், மனிதர்கள் என இருநிலைகளில் மக்கள் மற்றும் பிற உயிரினங்களுக்கு நேர்ந்த பேரிடர்களை எதிர்கொண்டமை, பேரிடர் சார்ந்த மேலாண்மை நெறிகள் ஆகியவற்றை இனங்கண்டு விளக்குவதே இவ்வாய்வின் நோக்கம்.

## ஆய்வுக் கருதுகோள்

சங்க இலக்கியம் படைப்பாக்கம் பெற்ற காலம் முதல் இன்றுவரை பல்வேறு நிலைகளில் அவ்வவ்காலத்திற்கேற்ப தம்மை மறுவாசிப்பிற்கு உட்படுத்திக் கொள்ளும் தன்மையில் கருத்தாக்கம் பெற்றுள்ளது. சங்ககாலச் சூழலில் இயற்கையாலும் மனிதர்களாலும் ஏற்பட்ட பேரிடர்களிலிருந்து, தமது உடைமைகளையும், வளங்களையும் தற்காத்துச் சிறந்த மேலாண்மை வாதிகளாகச் சங்கச் சான்றோர்கள் விளங்கினார்கள்.

சங்கப் புலவர்கள் பரிசில் வாழ்வினை மேற்கொண்டு, போற்றிப்பாடும் மரபினை விடுத்து, மன்னர்களுக்கு அறிவுறுத்தும் தன்மையில் பேரிடர் மேலாண்மைச் செயல்பாடுகளில் தம்மை உட்படுத்திக் கொண்டனர் என்பனவற்றை முன்வைத்து இவ்வாய்வின் கருதுகோள் அமைகின்றது.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கியத் தொகுதிகளான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு முழுவதும் ஆய்வு எல்லையாக அமைகிறது.

## ஆய்வுச் சான்றாதாரங்கள்

இவ்வாய்வுக்குத் தேவையான சான்றுகள் இரண்டு வகைகளாகத் திரட்டப்பட்டுள்ளன. அவையாவன,

1. முதன்மைச் சான்றாதாரங்கள் (Primary Source)
2. துணைமைச் சான்றாதாரங்கள் (Secondary Source) என்பனவாகும்.

## முதன்மைச் சான்றாதாரங்கள்

சங்க இலக்கியத் தொகுப்புகளான எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் இவ்வாய்விற்கு முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

## துணைமைச் சான்றாதாரங்கள்

ஆய்வுத் தொடர்பாக வெளிவந்த நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள், இதழ்கள், இணையத்தகவல்கள் போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

## ஆய்வு முன்னோடிகள்

2011 - ஆம் ஆண்டு தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக நில அறிவியல் துறையில் நடைபெற்ற "செவ்வியல் இலக்கியங்களில் பேரிடர் மேலாண்மை" என்ற கருத்தரங்க ஆய்வுக்கட்டுரைகள் இவ்வாய்வேட்டின் முன்னோடி ஆய்வுகளாகத் திகழ்கின்றன.

## ஆய்வு அணுகுமுறை

இவ்வாய்வில் பின்வரும் ஆய்வு அணுகுமுறைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. அவை,

1. விளக்க முறை (Discriptive Method)
2. பகுப்பு முறை (Classification Method)
3. தொகுப்பு முறை (Intactive Method)
4. சமூகவியல் அணுகுமுறை (sociological approach)

## ஆய்வுப் பகுப்பு

**"சங்க இலக்கியத்தில் பேரிடர் மேலாண்மைப் பதிவுகள்"** என்னும் இவ்வாய்வு,

முன்னுரை

**இயல்: 1. மேலாண்மையும் பேரிடரும் பொருண்மை விளக்கம்**

**இயல்: 2. இயற்கை அமைவும் பேரிடரும்**

**இயல்: 3. மனித ஆளுகையும் பேரிடரும்**

**இயல்: 4. பேரிடரைப் போக்கும் மேலாண்மைப் பதிவுகள்**

**இயல்: 5. பேரிடர் மேலாண்மையில் புலவர்களின் பங்(களிப்பு)கு**

முடிவுரை

என்ற நிலையில் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## இயல் விளக்கங்கள்

## முன்னுரை

**"சங்க இலக்கியத்தில் பேரிடர் மேலாண்மைப் பதிவுகள்"** என்னும் தலைப்பில் அமைந்துள்ள இவ்வாய்வேட்டின் '**முன்னுரை**' யில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வுப் பொருள், ஆய்வு எல்லை, ஆய்வு நோக்கம், ஆய்வுத் தரவுகளான முதன்மைச் சான்றாதாரங்கள், துணைமைச் சான்றாதாரங்கள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வுப்பகுப்பு, துணைநூற்பட்டியல், பின்னிணைப்பு முதலானவை இடம்பெற்றுள்ளன.

### இயல்: 1 - மேலாண்மையும் பேரிடரும் - பொருண்மை விளக்கம்

**“மேலாண்மையும் பேரிடரும் - பொருண்மை விளக்கம்”** என்பது முதல் இயலாகும். மேலாண்மை என்னும் துறையானது இன்று பல்வேறு துறைகளில் தம்மை நிலைநிறுத்தி வருகின்றது. அத்தகு துறை பற்றித் துறை சார்ந்த வல்லுநர்கள் மற்றும் கருத்தாளர்கள் பல்வேறு வகைகளில் கருத்துருவாக்கம் செய்துள்ளனர். மேலும் இயற்கையோடு இணைந்து இன்ப வாழ்வினை வாழ்ந்த மனிதன், இயற்கையிலிருந்து அந்நியப்பட்டு செயற்கைத்தனமான அழிவை நோக்கிய வாழ்வினை வாழ்ந்து வருகின்றான். இத்தகையப் போக்கினால் மக்கள் இன்றைய காலகட்டத்தில் பல்வேறு நிலைகளில் பேரிடர்களைச் சந்தித்து வருகின்றனர். உலக சுகாதார நிறுவனம், இந்தியப் பேரிடர் மேலாண்மை வாரியம் மற்றும் பிற அறிஞர்கள் அழிவு என்பதற்கும் பேரழிவு என்பதற்கும் அழிவின் தன்மைக்கேற்ப இலக்கணம் வகுக்கின்றனர். மேற்கூறிய மேலாண்மை மற்றும் பேரிடர் எனும் இவ்விரு கருத்தாக்கங்களைப் பொருண்மை சார்ந்து ஆய்வதாக இவ்வியல் அமைகின்றது.

### இயல்: 2 - இயற்கை அமைவும் பேரிடரும்

**“இயற்கை அமைவும் பேரிடரும்”** என்பது இரண்டாம் இயலாகும். இயற்கை என்பது பல்வேறு நிலைகளில் உலகம் தோன்றிய காலம் முதல் இன்று வரை மனித வாழ்வுடன் இரண்டறக் கலந்துள்ளது. இயற்கையை விடுத்து மனிதனால் இயங்குதல் என்பது இயலாத ஒன்று. இயற்கை அமைவுகளான மலைகள், காடுகள், ஆறுகள் போன்றவை வெறும் இயற்கை அமைவாக அமைந்தது மட்டுமின்றி, மனிதனின் ஆட்சி அதிகாரத்தை அளந்தறியப் பெரிதும் பயன்படுகிறது. அத்தகைய இயற்கையானது தம்முள் நிலை திரியும் பொழுதும் அல்லது தம்மை மாற்றத்திற்கு உட்படுத்தி, அடுத்தகட்ட வளர்ச்சி நிலையை எட்டும் பொழுதும் மனித வாழ்வு பெரும் மாற்றங்களைச் சந்திக்கின்றது. அத்தகைய இயற்கையின் மாறுபாட்டால் நிலம், கடல், காற்று, தீ, ஆகாயம் போன்ற இயற்கைச் சார்ந்த கூறுகள் மனிதனுக்குப் பேரிடரை உருவாக்கிய தன்மையைச் சங்க இலக்கியத்திலிருந்து ஆய்வதாக இவ்வியல் அமைகிறது.

### இயல்: 3 - மனித ஆளுகையும் பேரிடரும்

**“மனித ஆளுகையும் பேரிடரும்”** என்பது மூன்றாம் இயலாகும். மனித சமுதாயமானது பல்வேறு சமூக இனத்தின் வளர்ச்சியில் உருவான ஒன்றாகும். வேட்டைச் சமூகம், கால்நடைச் சமூகம், வேளாண் சமூகம், வணிகச் சமூகம் என்று பல்வேறு படிநிலைகளைக் கொண்டு உருப்பெற்றுள்ளன. இவையனைத்தும் மேம்போக்கான நிலையில் உருவெடுத்தவையல்ல. ஒரு சமூகத்தின் அழிவே மற்றொரு சமூகத்தை உருக்கொள்ள வழிவகுத்தது. சங்கச் சமூகமானது, இனக்குழுச் சமூகமாகிய பெண்வழிச் சமூகம் மாற்றம்

பெற்று ஆண்களை முதன்மையாகக் கொண்டு மாற்றமடைந்த சமூகத்தின் பிரதிபலிப்பாகும். மண்ணாசையால், சங்க இனக்குழுத் தலைவர்களாகிய வேளிர்கள் போன்ற குறுநிலமன்னர்களை அடக்கித் தன்னுடைய ஆளுகையினால் ஒரே குடையின்கீழ் கொண்டு வருதல் வேண்டும் என்ற நோக்கம் மேலோங்கியது. இத்தகு மனித ஆளுகையால் ஒருவகையில் வளர்ச்சி என்பது ஏற்பட்டாலும், மற்றொரு நிலையில் பேரழிவு என்பது கட்டுப்படுத்துவதற்கு இயலாத ஒன்றாக மாறியது. மன்னனால் மக்கட்கு பல்வேறு நிலைகளில் பேரிடர் ஏற்பட்டதையும், மனிதன் தனது பொருட்சார்ந்த வேட்கையினால் ஏற்படுத்திய பேரிடரையும் சங்க இலக்கியத்தின் வழி இவ்வியல் ஆய்கின்றது.

### இயல்: 4 - பேரிடரைப் போக்கும் மேலாண்மைப் பதிவுகள்

**“பேரிடரைப் போக்கும் மேலாண்மைப் பதிவுகள்”** என்பது நான்காம் இயலாகும். இயற்கை அமைவுகளின் மாறுபட்ட நிலையில் ஏற்படும் பேரிடர்களாலும், மனிதனது அதிகார வேட்கையினால் ஏற்பட்ட பேரிடர்களாலும் மக்கள் பல்வேறு நிலைகளில் தம்முடைய இயல்பு வாழ்வினை விடுத்து வாழத்தலைப்பட்டனர். இத்தகைய காலகட்டத்தில் இயற்கை சார்ந்தும், செயற்கையாலும் அப்பேரிடர்களை மேலாண்மை செய்யும் திறத்தை மேற்கொண்டனர். பேரிடர் சார்ந்த பெரும் அழிவு ஏற்படும் முன்பு அதன் அழிவிலிருந்து தன்னை மேலாண்மை செய்து தற்காத்துக் கொண்டான் என்பதைப் பற்றியும், சில வேளைகளில் பேரிடருக்குப் பின்பு அவ்வகைப் பேரழிவுகளில் இருந்து தம்மைக் காத்து மீண்டும் இயல்பு வாழ்வினை அடைந்த மேலாண்மைத் திறத்தைப் பற்றியும் முறைசார் மேலாண்மை, முறைசார மேலாண்மை என்ற நிலைகளில் சங்க இலக்கியப் பதிவுகளை ஆய்வதாக இவ்வியல் அமைகின்றது.

### இயல்: 5 - பேரிடர் மேலாண்மையில் புலவர்களின் பங்(களிப்பு)கு

**“பேரிடர் மேலாண்மையில் புலவர்களின் பங்(களிப்பு)கு”** என்பது ஐந்தாம் இயலாகும். இலக்கியம் என்பது புலவர்கள், சமூகத்தில் நடைபெற்ற நிகழ்வுகளைத் தம் கற்பனைக்கு உட்படுத்தி, அதனைப் புறவுலகிற்கு வழங்கிய ஓர் ஒப்பற்ற புதையல். சங்ககாலத்தில் இலக்கிய உருவாக்கம் ஏற்படுவதற்குப் பாணர் மரபு எனும் பழமை மரபு முதன்மைக் காரணமாகச் செயல்பட்டது. அத்தகு பாணர் மரபினரால் வாய்வழியாகப் படைக்கப்பட்ட இலக்கியம் புலவர் மரபு என்னும் புலமைத்துவ மரபுருவாக்கத்தால் சுவடிகளில் பதியும் நிலை ஏற்பட்டது. சங்கப்புலவர்கள் பொருள் வேண்டி மன்னர்களைப் புகழ்ந்து பாடல்களை இயற்றும் தன்மையில் மட்டுமல்லாது, சில நேரங்களில் மன்னர்களுக்கு ஆலோசனை வழங்கும் முதன்மை அமைச்சர்களாகவும் திகழ்ந்துள்ளனர். புலவர்கள் என்போர்

யாவர் என்பது பற்றியும் சங்க காலத்தில் இயற்கையாலும் மனிதர்களாலும் ஏற்பட்ட பேரிடர்களை அவை ஏற்படும் முன்பும், பேரிடர் ஏற்பட்ட பின்பும் அவர்கள் மேற்கொண்ட மேலாண்மைத் திறத்தினைப் பற்றியும் சங்க இலக்கியத்தின் வழி இவ்வியல் ஆய்துள்ளது.

### முடிவுரை

'**முடிவுரை**' என்னும் பகுதியில் மேற்கண்ட இயல்களின் வாயிலாகக் கண்டறியப்பட்ட முடிவுகளை நிரல்படத் தொகுத்து அளிப்பதாக அமைந்துள்ளது.

### துணைநூற் பட்டியல்

இவ்வாய்விற்குப் பயன்படுத்திய முதன்மைச் சான்றாதாரங்கள், துணைமைச் சான்றாதாரங்கள், ஆய்வு நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள், இதழ்கள், இணையதள முகவரிகள் ஆகியன துணைநூற்பட்டியலில் தரப்பட்டுள்ளன.

### பின்னிணைப்பு

ஆய்விற்கு வலிமையூட்டும் அட்டவணைகள், நாளிதழ்களின் செய்திகள் பின்னிணைப்பாக அமையப்பெற்றுள்ளன.

## இயல் - 2

# இயற்கை அமைவும் பேரிடரும்

மனித வாழ்வின் அடிப்படை ஆதாரமாக விளங்குவது இயற்கை. அத்தகைய இயற்கையானது பல்லாயிரம் ஆண்டுகளுக்கும் முன்பாக, உலகம் தோற்றம் பெற்ற காலத்திலேயே உருக்கொள்ள ஆரம்பித்தது. இயற்கையானது அன்று முதல் இன்று வரை அதன் இயல்புத் தன்மையிலிருந்து தம்மை மாற்றத்திற்குட்படுத்திக் கொண்டே இருக்கின்றது. பெரும்பான்மையும் மழை, கடல், காற்று, தீ, காடு, மலை போன்ற தன்னிகழ்வில் தோற்றம் பெற்ற அனைத்தையும் இயற்கை என்ற ஒரு கூறுபாட்டில் அடக்குகின்றனர். இயற்கை மனித வாழ்விற்குத் தேவையான வளங்கள் அனைத்தையும் வழங்குகின்றது. இவ்வியற்கையானது சில வேளைகளில் குறிப்பிட்ட வளர்ச்சி நிலையையோ அல்லது மாற்றத்தினையோ அடைகின்றது. இம்மாற்றத்தின் காரணமாக இயற்கையின் சமச்சீர்மையும் மாற்றம் அடைய நேரிடுகின்றது. இத்தகுக் காலகட்டத்தில் உயிரினங்களின் வாழ்வும் மாற்றத்தினை அடைகின்றது. ஒன்றின் அழிவிலிருந்தே மற்றொன்றின் தோற்றம் என்ற கூறுபாட்டின் அடிப்படையில் இம்மாற்றம் என்பது வளர்ச்சிப் போக்கில் அமைந்தாலும், சில வேலைகளில் பேரிடர்களைத் தோற்றுவிக்கின்றன. இவ்வாறு சங்க காலத்தில் அமையப் பெற்ற இயற்கையைப் பற்றியும், இயற்கையின் மாறுபாட்டால் ஏற்பட்ட பேரிடர்கள் பற்றியும் சங்க இலக்கியப் பதிவுகளின் வழி விளக்குவதாக இவ்வியல் அமைகின்றது.

### இயற்கை அமைவு

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு பெருவெடிப்பின் காரணமாக ஞாயிற்றிலிருந்து சிதறி வீழ்ந்த ஒரு பெரிய தீப்பிழம்பானது குளிர்ச்சியடைந்து உயிரினங்கள் வாழ்வதற்கேற்ற தட்பவெட்பத்தினைப் பெற்று புவியாக மாற்றம் அடைந்தது. உலக உருவாக்கத்தில் தன்னிகழ்வில் தோற்றம் பெற்ற மழை, கடல், காற்று, தீ, காடு, மலை போன்றவற்றை ‘இயற்கை’ என்று பொருள் கொள்ளலாம்.

“நம் புலனறிவால் உணரக் கூடிய, மனிதனல்லாத, மனிதனால் உடனடியாக இயற்றப்படாத புற உலகம் என்று ‘இயற்கை’ வரையறுக்கப்படுகிறது”[1] என்று பல நூற்றாண்டுகளுக்கு முன்பு மனித முயற்சி ஏதுமின்றி தோற்றம் பெற்றதை ‘இயற்கை’ என்று வரையறைப்படுத்துகின்றனர். இவ்வாறு உருவான உலகம் ஒரே சமநிலையாக இல்லாமல் மேடுபள்ளங்களைக் கொண்டதாக இருந்தது. இதனை,

***“நாடா கொன்றோ காடா கொன்றோ***
***அவலா கொன்றோ மிசையா கொன்றோ”*** *(புறம்.187: 1-2)*

என்று உலகத் தோற்றத்தில் அனைத்து நிலங்களும் ஒன்றுபோல் படைப்பாக்கம் பெறவில்லை, ஒரு பகுதி மக்கள் வாழ்வதற்கு ஏற்றதாகவும், ஒரு பகுதி அடர்ந்த காடுகளாகவும், ஒரு பகுதி பள்ளமாகவும், ஒரு பகுதி மேடாகவும் பல்வேறு நிலைகளில் அமையப்பெற்றிருந்தது. உயிரினங்கள் வாழ்வதற்கு ஏற்ற வகையில் மாறிய நிலமானது காடுகளாகக் காலப்போக்கில் உருப்பெற்றது. மனிதத் தோற்றத்திற்குப் பின்பு தங்கள் வாழ்வினை நிலைநிறுத்துதலின் காரணமாக நிலத்தைச் சமன்செய்து காடுகளைத் திருத்தினர். உலகத்தின் அனைத்து பகுதிகளிலும், நிலங்களைப் போன்று நிலவளங்களும் ஒரே மாதிரியான அமைப்பைக் கொண்டிருக்கவில்லை. அந்நிலப்பகுதியின் தட்பவெட்ப சூழ்நிலைக்கேற்ப, வளங்களும் மக்களின் வாழ்க்கை முறையும் அமைந்தது என்பதனை,

***"மாயோன் மேய காடுறை உலகமும்***
***சேயோன் மேய மைவரை உலகமும்***
***வேந்தன் மேய தீம்புனல் உலகமும்***
***வருணன் மேய பெருமணல் உலகமும்***
***முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்***
***சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"*** ***(தொல்.அகம்.5: 1-6)***

எனும் நூற்பாவில், காடு, மலை, வளமான ஆறுகள், கடல் என்று உலகத்தோற்றத்தின் அடிப்படையில் நிலப்பிரிவுகள் ஏற்பட்டுள்ளதையும், புவியின் அமைப்பு மற்றும் அந்நிலத்தின் தன்மைக்கேற்ப மக்களின் வாழ்வியல் ஒழுக்கங்களும் வழிபடும் தெய்வங்களும் கட்டமைக்கப்பட்டுள்ளதைத் தொல்காப்பியரின் கூற்று வழி அறியமுடிகின்றது. இதனை மேலும் உறுதிப்படுத்தும் விதமாக,

"மக்கள் ஒன்றாக வாழாமல் தனித்தனி அரசியல் சமூகங்களாகப் பிரிந்து வாழ்ந்து வந்ததற்கு இயற்கை அமைப்பு மிகமிக முக்கியமான காரணங்களுள் ஒன்றாகும். மலைகள், குன்றுகள் போன்ற பல நில அமைப்புகள் மருதம், முல்லை, குறிஞ்சி, நெய்தல், பாலை போன்ற நிலப்பாகுபாடுகள் ஏற்படக் காரணமானதால் அங்கு வாழும் மக்களின் ஒழுக்கமும் பண்பாடுகளும் வாழ்க்கை முறைகளும் அதற்கேற்றவாறு அமைந்தன"[2] என்ற கருத்தும் இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

கடல், வளி, வான், மண் இவையனைத்தும் ஒன்றிணைந்தது உலகம் என்பதனை விளக்கும் வகையில்,

***"நளியிரு முந்நீ ரேணி யாக***
***வளியிடை வழங்கா வானஞ் சூடிய***
***மண்டிணி கிடக்கை"*** ***(புறம்.35: 1-3)***

நீர்ப் பரப்பினை உடைய பெரிய கடலினை எல்லையாகக் கொண்டும் காற்று நுழைந்து செல்லாத அகன்ற பரப்பினையுடைய வானத்துடன் பொருந்தியும் மண் செறிந்ததாகவும் இவ்வுலக அமைப்பானது உள்ளது என்று கிள்ளிவளவனை வெள்ளைக் குடிநாகனார் என்ற புலவர் பாடிய பாடலில் பதிவு செய்துள்ளார். இங்கு நீர், நிலம், காற்று, தீ, ஆகாயம் என்று உலக இயற்கைப் பொருட்கள் அனைத்தும் ஒன்று மற்றொன்றின் தொடர்பை உடையதாய் அமைந்துள்ளன.

ஒலிக்கும் அலைகளையுடைய நீரால் சூழப்பட்ட நில எல்லையில் ஓங்கும்படி நின் சீர்மை பொருந்திய சிறந்த புகழை வாழ்த்துவோம் என்று 'கடலால் சூழப்பட்ட உலகினை,

***"……… படுதிரை***
***நீர் சூழ் நிலவரை"*** ***(புறம்.160: 28-29)***

எனும் அடிகளில் உணர்த்தப்பட்டுள்ளது. மேலும்,

***"………………… வான் கவித்து***
***இருங்கட லுடுத்தவிவ் வையகத்து"*** ***(புறம்.201: 16-17)***

இவ்வுலகமானது வானத்தால் கவிக்கப்பட்டும், பெருங்கடலால் சூழப்பட்டும் உள்ளது. கடல் மற்றும் வானம் இவ்விரண்டும் இணைந்து இயற்கையானது அமையப்பெற்றது என்பதை இப்பாடலடிகள் குறிப்பிடுகின்றன. மேலும்,

***"குன்றுதலை மணந்த மலைபிணித் தியாத்தமண்"*** ***(புறம்.357: 1)***

எனும் அடியில் குன்றுகள் நெருங்கிக் கலந்த மலைகளைத் தன்பால் மிக உறுதியாகப் பிணித்துக் கட்டியுள்ள மண்ணுலகம் என்று அமைந்துள்ளது. இதில் உலக அமைவில் ஒன்றான நிலத்தின் அமைப்பைப் பற்றி விளக்கப்பட்டுள்ளது.

குன்றுகள் நெருங்கிக் கலந்து மலைகளைக் கொண்டு நிலவுலகம் அமைந்துள்ளது. இவ்வாறு மலைகள் நெருக்கமாக அமைந்துள்ளதால் பெரும்பான்மையும் நிலநடுக்கம் போன்ற இயற்கைச் சீற்றங்கள் ஏற்படாமல் தடுக்கப்படுகின்றன. இவ்வாறு இயற்கையானது பாதுகாப்பின் அடிப்படையிலே மலையும் - மண்ணும் பிணைந்து இருப்பதாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதன் மூலம் இயற்கை அமைவின் தன்மைகளைச் சங்கச் சான்றோர் அறிந்திருந்தனர் என்பது புலப்படுகிறது. இப்பாடலடிக்குப் "பெருமலைகளின் முடியிலும் அடியிலும் சிறுசிறு குன்றுகள் நிற்பது பற்றி குன்று தலை மணந்தமலை என்றும், வானில் ஒரு பற்று கோடுமின்றி நிலவுலகு தனித்துச் சுழலுமிடத்து மலையும்; குன்றும் நீங்காதவாறு பிணித்துக் கொடு நிற்றலின் 'பிணித்து யாத்தமண்' என்றும் கூறிரென்க"[3] என்ற ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை உரை விளக்கத்தின் மூலம் மலையும் மண்ணும் பிணைந்து இயற்கைக் கட்டுண்டுள்ளதை உணரமுடிகின்றது.

உலக அமைப்பில் ஞாயிறு, திங்கள், மழை, மின்னல், விசும்பு போன்றவையும் அடக்கம். இவையனைத்தும் ஒருங்கே அமையப் பெற்றதை,

***"மயங்கிருக் கருவிய விசும்புமுக னாக***
***இயங்கிய விருசுடர் கண்ணெனப் பெயரிய"*** ***(புறம்.365: 1-2)***

என்ற வரிகளில் மழை, மின்னல் முதலியவற்றின் தொகுதியை உடைய விசும்பை முகனாகவும், விசும்பின் கண் இயங்கும் ஞாயிறும், திங்களும் ஆகிய இரு சுடர்களைக் கண்ணாகவும் கொண்ட பல வகையாலும் மாட்சிமைப்பட்ட நிலமகள் என்று நிலமகளின் தன்மை விளக்கியுள்ளனர். இதில் புவியின் அமைப்பு நிலையினை நிலம், சூரியன், சந்திரன் என ஒருங்கே அமையப்பெற்றது இந்நிலவுலகெனக் குறிப்பினால் புலவர் உணர்த்தியுள்ளார்.

பஞ்சபூதங்களால் உருப்பெற்ற இயற்கை அமைப்புகள் முழுவதும் ஒன்றுடன் ஒன்று சங்கிலி போன்று (சார்ந்துள்ளன) பிணைந்துள்ளதை,

***"ஞாயிறு புகன்ற தீதுதீர் சிறப்பின்***
***அமிழ்துதிகழ் கருவிய கணமழை தலைஇக்***
***கடுங்கால கொட்கு நன்பெரும் பரப்பின்***
***விசும்பு ................"*** ***(பதிற்.17: 10-13)***

என்ற அடிகளில், சூரியன் நாள்தோறும் உலா வருவதற்கிடனான குற்றமற்ற சிறப்பினையுடையதும், நீர்நிறைந்து இடி, மின்னல் முதலிய தொகுதிகளையுடைய மேகக்கூட்டம் மழை பெய்வதற்கெனக் காற்றானது மிக்க வேகத்துடன் சுழன்று அடிப்பதற்கு ஏற்ற வகையிலான நல்ல பெரிய பரப்பினை உடையது வானம் என்று, இயற்கையில் அமைந்த ஒவ்வொன்றும் தாம் செயல்படுவதற்கு ஏற்றவாறு தம்மைத் தகவமைத்துக் கொண்டுள்ளது என்பதை மேற்குறிப்பிட்ட சங்க இலக்கியப் புலவர்களின் பாடல்கள் வழி அறியமுடிகிறது.

## பஞ்ச பூதத்து அமைப்பு

பஞ்சபூதமாகிய இயற்கையில் தோற்றம் பெற்ற நிலம் முதலிய பொருட்களின் நீட்சியாகவே இவ்வுலகம் அமைந்துள்ளது. திசைகளையுடைய ஆகாயத்துடன் நீர், நிலம், தீ, காற்று என்று ஐம்பூதத்தால் ஆனது உலகம் என்பதை,

***"நீரு நிலனுந் தீயும் வளியும்***
***மாக விசும்போ டைந்து"*** ***(மதுரை. 453-454)***

எனும் அடிகளின் வழி அறியமுடிகிறது. மேலும், கடுவன் இளவெயினார் திருமாலைப் பாடிய பரிபாடலிலும்,

***"தீவளி விசும்பு நிலன்னீ ரைந்து"*** ***(பரி.3: 4)***

இவ்வுலகம் ஐம்பெரும் பொருள்களால் உருவானது என்பதைக் காட்டுகிறது. இத்தகைய பஞ்சபூதங்கள் ஒன்றின் தோற்றத்தினால் மற்றொன்று தோற்றம் பெற்றுள்ளதை,

***"அகலிரு விசும்பி னாஅல் போல***
***வாலிதின் விரிந்த"*** ***(மலை. 100-101)***

எனும் பாடலடிகளில் விசும்பின் வழித்தோன்றலாக தீ, வளி, நீர், நிலம் போன்றவை விரிந்து உலகம் தோற்றம் பெற்றுள்ளதை அறிவியல் வளர்ச்சி இல்லாத காலக்கட்டத்தில் மிக துல்லியமாக இலக்கியத்தில் படைத்துள்ளனர். இதனை, 'தைத்ரீய உபநிஷத் (பிரம்மவல்லி: அனுவாகம். 1) பரமாத்மாவிடமிருந்து ஆகாயம் தோன்றிது, ஆகாயத்தில் இருந்து காற்று, காற்றில் இருந்து தீ, தீயில் இருந்து தண்ணீர், தண்ணீரிலிருந்து பூமி தோன்றியது' என்ற கூற்றும் பஞ்சபூதங்களின் தோற்றம் பற்றிய விளக்கத்தில் கடவுள் கொள்கையை ஏற்றி மேற்கூறியக் கருத்தினையே முன்வைக்கின்றது. சங்க இலக்கியத்தில் காலத்தால் பின் தோன்றிய பரிபாடலின் இரண்டாம் பாடல், உலகத் தோற்றத்தில் உண்டான அணுவின் காரணமாக ஒரு பொருள் தோற்றம் பெற்று, அந்தப் பொருளின் மாற்றத்தால் அல்லது அதன் வளர்ச்சியால் ஒரு ஊழிப் பேரழிவு ஏற்பட்டு மற்றொரு பொருள் தோன்றுகிறது என்பதைத் தெளிவாக விளக்குகின்றது.

## இயற்கையும் பாதுகாவல் அரணும்

மலைகள், கடல்கள், ஆறுகள், காடுகள் போன்றவை இயற்கையின் அமைப்பில் தோற்றம் பெற்றவை. அவ்வாறு இயல்பில் அமைந்த இயற்கையானது வளங்களை அளிப்பதாக மட்டும் அமையாது சங்ககாலகட்டத்தில் ஆட்சி அதிகாரத்தை அளந்தறியும் எல்லைகளாகவும் காவல் அரண்களாவும் இருந்துள்ளன. இந்தியாவின் நான்கு எல்லைகளில் மூன்று பக்கம் கடல், ஒரு பக்கம் மலை என பகைவர்களிடமிருந்து காக்கும் அரணாக இயற்கை விளங்குகின்றது. சங்ககாலத்தில் ஆட்சி புரிந்த முடிவுடை வேந்தர்கள் நிலப் பாகுபாட்டையும் நீர்நிலைகளின் இயல்பையும் கருத்தில் கொண்டு ஆட்சி அதிகார எல்லைகளை வரையறை செய்தனர். அறிவியல் வளர்ச்சியடையாத காலகட்டத்தில் இயற்கையில் அமைந்த மலைகளும் கடல்களும் காடுகளும் ஆறுகளும் மக்களையும் அரசையும் பாதுகாக்கும் அரண்களாக அமைந்திருந்தன. மலைப்படுகடாமில்,

***"மாநிழற் பட்ட மரம்பயி லிறும்பின்***
***ஞாயிறு தெறாஅ மாக நனந்தலை"*** ***(மலை. 271-272)***

என்ற பாடலில், பெரிய நிழலைக் கொண்ட மரங்கள், நெருங்கிய குறுங்காட்டில் ஆகாயத்தில் திரியும் ஞாயிற்றின் கதிர்களால் சுடப்படாத அகன்ற இடத்தையுடையதாக மலைக்குன்றுகள் விளங்குகின்றன. மலையானது அடர்ந்த மரங்கள் நிறைந்து வளமுடன்

காணப்பட்டது. மலைகள் இயற்கைப் பேரிடராகிய வறட்சி உள்ளிட்டவைகளைத் தடுப்பதோடு, அந்நியப் படையெடுப்பு எனும் செயற்கைப் பேரிடர்களைத் தடுக்கும் பாதுகாப்பு அரண்களாகவும் இருந்துள்ளன. வேங்கடமலையும், அதன் காடுகளும் பழந்தமிழகத்திற்குப் பாதுகாப்பாக அமைந்திருந்தன. வேங்கடத்தைத் தாண்டி வடநாட்டு அரசர்களாலும் தெற்கு நோக்கிப் படையெடுத்து வர இயலாததற்கு இம்மலையே காரணமாக இருந்துள்ளது என்பதை வரலாறு பிரதிபலிக்கின்றது. ஒரு நாட்டிற்குரிய பாதுகாப்பு அரண்கள் பற்றி பின் வந்த திருவள்ளுவரும்,

***"மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்***
***காடும் உடையது அரண்"*** ***(குறள்.742)***

என்று குறிப்பிடுகிறார். இதன் மூலம் வற்றாத நீர்நிலைகளும், நிலம், மலை, காடு போன்றவை ஒரு நாட்டின் பாதுகாப்பு அரண்களாகும் என்பது விளங்குகின்றது. "கோடுறழ்ந் தெடுத்த கொடுங்கன் இஞ்சியென்றது, மலையுள்ள இடங்களிலே அம்மலை தானே மதிலாகவும், மலையில்லாத இடங்களில் மதிலே அரணாகவும், இவ்வாறு மலையோடு மாறாட எடுத்த வளைந்த இடத்தையுடைய புறமதில் என்பர் பழைய உரைகாரர். அவரே 'கோடு புறந்தெடுக்க' என்பது பாடமொன்று உளதாதல் கண்டு "கோடு புரந்தெடுத்த என்பது பாடமாயின் மதிலில்லாத இடங்களை மலை காவலாய்ப் புரக்க எடுத்த என்று உரைத்த என்பர்"[4] என்று சு. ஔவை துரைசாமிப்பிள்ளை தம் உரையில் குறிப்பிடுகின்றார். இதன் வாயிலாக, மலைகளே மதில்களாக அமைந்து பகைவர்களிடமிருந்து நாட்டைக் காக்கும் பாதுகாவல் அரண்களாக அமைந்திருந்தன என்பது தெளிவாகின்றது.

## நான்கு எல்லைகளாக இயற்கையைக் கொண்டு ஆட்சி செய்தல்

சங்ககாலத்தில் நாட்டின் எல்லைகளை இயற்கையில் அமைந்த கடல்கள், மலைகள் போன்றவற்றைக் கொண்டே நிர்ணயித்தனர். பண்டைத் தமிழகத்தின் நில எல்லையை தென்திசையில் குமரியை எல்லையாகவும், வடதிசையில் பெரிய மேருமலையை எல்லையாகவும் கீழ் திசையிலும், மேல் திசையிலும் கடலை எல்லையாகவும் கொண்டு இவற்றிற்கு இடைப்பட்ட நிலப்பரப்பு என்று வரையறை செய்கின்றனர். இதனை,

***"தென்குமரி வடபெருங்கல்***
***குணகுடகட லாவெல்லை"*** ***(மதுரை.70-71)***

என்ற அடிகள் விளக்குகின்றது. இதிலிருந்து பண்டைத் தமிழர்கள் கடல்களையும், மலைகளையும் ஒரு நாட்டின் எல்லையாகக் கொண்டு அரசாண்டனர் என்பது தெளிவாகின்றது. "தமிழகம் பல நூற்றாண்டுகளுக்கு முன்பு சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு எனப் பல

பிரிவுகளாகப் பிரிந்திருந்தமைக்கு இயற்கையமைப்பும் ஒரு காரணமாகும். மேற்குமலைத் தொடரும், கிழக்கு மலைத் தொடரும் நீலகிரியில் இணைகின்றன. இவற்றின் இடையே உள்ள சமவெளிகளிலும், மேற்குமலைத் தொடருக்குக் கிழக்கிலும் அமைந்த பல சமவெளிகளிலும் மக்கள் தனித்தனி நாடுகளாகப் பிரிந்து அவற்றில் வாழ்ந்து வந்தனர். பாண்டியநாடு, சேரநாடு, சோழநாடு, கொங்கு நாடு, தொண்டை நாடு இவ்வாறு அமைந்தனவாகும். இவை மட்டுமின்றிச் சிறு நாடுகளாக காட்டு நாடு, கோணாடு, வேங்கநாடு போன்ற பல நாடுகளும் இருந்தன"[5] என்று நாடுகளின் எல்லைகளாக மலைகள், சமவெளிகள் இருந்ததற்கு மேற்கூறிய விளக்கம் சான்று பகர்கின்றது. ஆரியர்கள் நிறைந்து வாழும் இமயமலைக்கும், தென்திசையில் விளங்கும் அழகிய குமரிக்கும் இடைப்பட்ட நிலத்தை ஆளும் மன்னர்களுள் செருக்கால் தம்மை உயர்த்திக் கூறிக்கொள்பவர்களுடைய வீரம் அழியுமாறு அவர்களோடு எதிர்நின்று பொருது வென்றாய் என்று வேந்தர்களின் புகழ்பாடும் புலவோர்கள்,

***"ஆரியர் துவன்றிய பேரிசை யிமயம்***
***தென்னங் குமரியொ டாயிடை***
***மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே"*** ***(பதிற்.11: 23-25)***

எனும் பாடலில் சங்க காலத்தில் மலைகள், கடல்கள், ஆறுகள் போன்றவை இயற்கை அரண்களாகவும், நில வரையறை அமைத்து மன்னர்களின் ஆட்சி அதிகாரம் செலுத்தும் எல்லைகளாகவும் வரையறுப்பதாகவும் விளங்கியுள்ளது என்று பதிவுசெய்துள்ளனர்.

"மலைகள், ஆறுகள் போன்ற இயற்கை அமைப்புகள் மிகத் தெளிவாக எல்லை வகுக்கும் தென்னிந்திய நிலத்தோற்றத்தின் பௌதிக அமைப்பு, தென்னிந்தியாவின் சிறிய அரசுகள், இன்னும் சிறிய குறுநிலத் தலைவர்கள் ஆண்ட சிறு பகுதிகள் ஆகியவற்றிற்கு இடம் தந்தது."[6] இவ்வாறு இயற்கையமைப்பானது எல்லைகளாக அமைந்து நிலத்தலைவர்களை உருக்கொளச் செய்தது. பெருவேந்தர்கள், சிறு அரசுகள், குறுநிலமன்னர் தோற்றம் கொள்வதற்கும் ஆட்சி அதிகாரம் செலுத்துவதற்கும் தோற்றுவாயாக அமைந்திருந்தது என்பது தெளிவாகின்றது.

## நால்வகை நிலத்தின் வளங்கள்

சங்ககால இயற்கை அமைப்பில் மலை, காடு, ஆறு, கடல் என்ற நால்வகை கூறுகளும் மக்கள் வாழ்வதற்கு அடித்தளமிட்டது. மலையிலே தோன்றும் பொருளும், ஆறு பாய்கின்ற முல்லை, மருதநிலப் பொருளும் கடலிலே தோன்றும் பொருளும் என்று நால்வகை நிலமும் அந்நிலத்தின் விளைபொருள்களும் மனித வாழ்விற்கு முதன்மையாக விளங்கின. நிலத்தின் வளத்தினை அடிப்படையாகக் கொண்டே அக்கால மக்களின் வாழ்வியல் தீர்மானிக்கப்பட்டது.

“தமிழகத்தின் ஏற்றத்தாழ்வான புவிசார் இயற்கை வளத்தின் மீதே தமிழக மக்களின் சமூக வாழ்க்கை அமைந்தது. அதனாலேதான், புவி சார்ந்த பிரதேசங்களின் அடிப்படையில் தமிழகத்தை நான்கு பிரதேசங்களாகச் சங்ககாலத் தமிழர்கள் பிரித்திருந்தனர்”[7] என்று நால்வகை நிலப்பிரிவுகளைப் பற்றி தேவ. பேரின்பன் தம்முடைய நூலில் கூறுகிறார்.

முத்து, பவளம், மீன், உப்பு என்று கடலிலிருந்து பெறப்படும் நெய்தல் நிலவளம் பற்றியும் தேன், இறைச்சி, திணை என்று மலையிலிருந்து கிடைக்கக் கூடிய குறிஞ்சி நிலவளம் பற்றியும் காட்டாற்றின் காரணமாக ஆநிரைகள் மூலம் பெறப்படும் முல்லை நிலவளம் பற்றியும் ஆற்றுநீரின் செழிப்பால் வயல்கள் நிறைந்து வளம் பெற்றிருக்கும் மருத நிலவளம் பற்றியும் விளக்கும் வகையில்,

> ***“கடலவுங் கல்லவும் யாற்றவும் பிறவும்***
> ***வளம்பல நிகழ்தரு”*** ***(பதிற்.15: 16-17)***

எனும், இப்பாடலடிகள் நால்வகை நிலங்களும் மக்கள் வாழ்வதற்கேற்ப வளங்களை அளித்திருந்ததை உணர்த்துகின்றன. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு வீடுபேற்றின் நிமித்தம் குறித்து மாங்குடி மருதனார் பாடிய பாடலடிகளில் இயற்கை தன் இயல்பில் மக்களுக்குச் செய்கின்ற நன்மை குறித்து,

> ***“ஓங்குதிரை வியன்பரப்பி***
> ………………………………
> ……………………………..
> ***நோயிகந்து நோக்குவிளங்க”*** ***(மதுரை. 1-13)***

எனும் பாடலடிகளில், அகன்ற நீர்ப்பரப்பில் உயர்ந்த அலைகள் எழுந்து ஒலிக்கும் கடலை எல்லையாகக் கொண்டு, தேன் அடைகள் தொங்குகின்ற உயர்ந்த சிகரங்களைக் கொண்ட மலைகள் தோன்றிய இவ்வுலகத்தில், ஆகாயத்தின்கண் காற்று வலமாகச் சுழன்று வீசிற்று. அகன்று விளங்கும் நாள் மீன்கள் தாம் இயங்குவதற்குரிய பாதைகளில் பிறழாது விளங்கின. பகற்பொழுதை உண்டாக்கும், சிவந்த கதிர்களையுடைய ஞாயிறும், இரவுப் பொழுதை உண்டாக்கும் வெண்ணிறக் கதிர்களையுடைய திங்களும் குற்றமில்லாமல் விளங்கித் தோன்றின. மேகங்கள், மழை வேண்டும் காலத்துப் பிழையாது தம்முடைய பெய்தல் தொழிலால் உதவி புரிந்தன. அதனால் எல்லா திசைகளிலும் விளையுள் பெருகி வளம் கொழித்தன. ஒன்றாக விதைத்த விதை ஆயிரமாய்ப் பெருகி விளைந்தது, விளைநிலங்களும், மரங்களும், பல்லுயிர்க்கும் தாம், பயன் கொடுக்கும் தொழிலை ஏற்றுக் கொண்டு தவறாமல் வழங்கின. மக்களின் பசியும், பிணியும் நீங்கினமையால் அவர்கள் அழகினால் பொலிவுற்று விளங்கினர் என்று பதிவு செய்துள்ளார்.

உலக அமைப்பான கடல், மலை, காற்று, சூரியன், சந்திரன், மழை, நாள்மீன்கள் இவை இயல்பான நிலையில் தம்முடைய செயலினை ஆற்றும் பொழுது விளைநிலங்களும், மரங்களும், மண்ணில் பல்வேறு நிலைகளில் வளம் பெருகி, பல்லுயிர்க்கும் பயனைத் தந்தது. உணவு, நீா் போன்ற அடிப்படைத் தேவைகள் பூா்த்தியுற்றதன் காரணமாக மக்கள் பசி, பிணியாகிய நோய் இல்லாமல் நலமுடன் காணப்பட்டனா் என்ற பதிவின் மூலம் இயற்கையின் உன்னதத்தினையும் அது தன் இயல்பில் இருக்கும் பொழுது மக்களுக்கு வேண்டிய வளங்களை அளித்து மக்களுக்கும், பிற உயிரினங்களுக்கும் நன்மையை ஏற்படுத்தும் என்பதையும் இதன் மூலம் அறியலாம்.

“மனித குலத்தின் வாழ்விற்கும் தேய்விற்கும் இயற்கையே காரணம். இயற்கை மட்டுமே காரணம். மனிதன் குழுவாக கூட்டமாக, சமூகமாக வளா்ந்த காலத்தில் மனிதனின் வாழ்விற்கும் தேய்விற்கும் மனிதனே காரணம்”[8] என்று மனித வாழ்வியலின் வளா்ச்சி நிலை இயற்கையோடு இயைந்தது என்பதை க.ப. அறவாணன் உணா்த்துகிறாா். “ஒரு சூழ்நிலையின் முக்கிய அங்கங்களான தாவரங்கள், தாவர உண்ணிகள், மாமிசவுண்ணிகள் மற்றும் உயிரற்ற காரணிகளான ஒளி, வெப்பம், மழை சீதோஷ்ணநிலை போன்றவைகள் ஒன்றுக்கொன்று தாமாகவே சூழ்நிலையுடன் சமநிலையினைப் பெற்றுக் காணப்படும். இவ்வாறு ஒரு சூழ்நிலையில் காணப்படும் உயிா்க்காரணிகளும், உயிரற்ற காரணிகளும் சமநிலையில் காணப்படுவதையே இயற்கையின் சமநிலை (Balance in Nature) என்று அழைக்கப்படுகிறது.”[9] இவ்வாறு இயற்கையோடு இயைந்த சங்ககால வாழ்வானது இயற்கைச் சமநிலைபேண வழிவகுத்தது. மேற்கூறிய விளக்கங்களின் மூலம் இயற்கை தன் இயல்பு நிலையில் பஞ்சபூதமாகத் தோற்றம் பெற்று ஒன்றுடன் ஒன்று பின்னிப்பிணைந்து பல்வேறு வளங்களை வழங்கியுள்ளது. மேலும் இயற்கை அரணாக அமைந்ததோடு எல்லைகளையும் கட்டமைத்து மனித வாழ்விற்கு வளமளித்து இயற்கைச் சமநிலை பேணப்பட்டது.

இயற்கையின் சமநிலையானது இயல்பிலிருந்து மாறுபட்டு சில சமயங்களில் புயல், வெள்ளம், தீ, நிலநடுக்கம், மண்சரிவு, அதிகவெப்பம், காட்டுத்தீ, கடுங்குளிா் போன்ற இடையூறுகளை ஏற்படுத்துகின்றன. இயற்கையின் மீது மனிதா்கள் செலுத்தும் ஆதிக்கத்தால் காடுகள் அழிக்கப்படுதல், தாவரங்கள் மற்றும் விலங்குகளை அதிக அளவில் பயன்படுத்துதல், அதிக அளவில் நீா் ஆதாரங்களை மாசுபடுத்துதல் போன்றவை இயற்கையின் சமநிலையைப் பாதிப்புறச் செய்கின்றன. இவ்வாறு இயற்கையானது இயல்பு நிலையிலிருந்து மாற்றத்திற்கு உட்படும் நிலையில்,

- **கண்ட நகர்வு (நில மாறுபாடு) - நிலநடுக்கம்**
- **மழையால் - வெள்ளம்**
- **கடல் அலைகளின் மாறுபாட்டால் - சுனாமி**
- **காற்றால் - சூறாவளி**
- **சூரியனால் - வறட்சி, காட்டுத்தீ**
- **மழையின்மையால் - வறட்சி, செழுமை அழிந்தல்**
- **நாள், கோள் மீன்களால் - மழையின்றி வறட்சி**

என்று மேற்கூறியவாறு பேரிடர்களை ஏற்படுத்துகின்றன. இதனை பின்வரும் பகுதிகளில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

## உலக அழிவு

இயற்கையில் அமைந்த நிலம், நீர், தீ, வளி, விசும்பு போன்ற உறுதிப் பொருட்களின் மாறுபாட்டால் ஏற்படும் நிகழ்வாகிய உலக அழிவினை ‘ஊழி’ என்ற சொல்லால் சங்கச் சமூகத்தில் அழைக்கப்பட்டது. விழாக்காலங்களில் வேடமிட்டு ஆடும் கூத்தர் வேறு வேறான ஒப்பனையுடன் திகழும் காட்சி போன்று உலகமும் வேறு வேறாக (மாறும்) அழியும் இயல்புடையது. இதை,

***“ஆடுநர் கழியுமிவ் வுலகத்து”*** ***(புறம்.29: 24)***

எனும் அடிகளால் அறியலாம். சங்க காலத்தில் ஏற்பட்ட இயற்கைப் பேரழிவினைப் பற்றி,

“வறட்சி மற்றும் இயற்கைச் சீற்றம் முதலிய உற்பாதங்களால் தாவரங்களுக்கு அழிவு நேரிட்ட காலங்களிலும் வேட்டை மற்றும் நோய் முதலிய காரணங்களால் விலங்குகள் அழிய நேரிட்ட காலங்களிலும் மனிதர்கள் உணவுக்காக வேறு மூலாதாரங்களை நாட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது”[10] என்று வெ. பெருமாள்சாமி குறிப்பிடுகின்றார். மேலும், நக்கீரர் திருமுருகாற்றுப்படையில்,

***“தாமரை பயந்த தாவில் ஊழி”*** ***(திரு. 164)***

அளவில்லாத மிகப்பல ஊழிக்காலத்தைத் தன் ஆயுளாகக் கொண்டவன் நான்முகன் என்று நான்முகனின் செயலைக் குறிப்பிடுகின்றார். கடவுளின் செயலைக் குறிப்பிடுதல் மட்டுமன்றி உலகம் தோற்றம் பெற்ற காலம் முதல் பல்வேறு வகையான ஊழிகள் ஏற்பட்டுள்ளதை இப்பதிவானது மறைமுகமாக விளக்குகின்றது.

## இயற்கையின் மாறுபாடு பேரிடர்

நிலம், நீர், காற்று, தீ, ஆகாயம் என்று ஐம்பூதங்களால் ஆனது இவ்வுலகம். அளவிடற்கரிய பேராற்றல் வாய்ந்த இவ்வைந்தும் தத்தம் நிலையில் மாற்றம் ஏற்படும் பொழுது இயற்கைச் சீற்றமாகிறது. இச்சீற்றத்தைத் தடுப்பதோ, நம் கட்டுப்பாட்டிற்குள் அடக்கி வைப்பதோ இயலாது. இதனை ஐயூர் முடவனார் என்ற புலவர் தம் பாடலில்,

*"நீர்மிகிற் சிறையு மில்லை தீமிகின்*
*மன்னுயிர் நிழற்று நிழலு மில்லை*
*வளிமிகின் வலியு மில்லை"* *(புறம்.51: 1-3)*

என்று பதிவு செய்துள்ளார். நீர் பெருக்கெடுத்து மிகுமானால் அதனைத் தடுத்து நிறுத்தும் வலிய அறனும் இல்லை. தீ பெருகி எரிக்குமானால் உலகில் நிலைப்பெற்ற உயிர்களைக் காக்கின்ற நிழலும் இல்லை. காற்று மிகுமானால் அதனைப் பொறுக்கும் வலிமையும் இல்லை என்ற உரை பொருளிலிருந்து நீர் பெருகினால் வெள்ளம் ஏற்படும். தீ பெருகினால் பெருந்தீ ஏற்படும். காற்று அதிகமானால் புயலாக உருவெடுக்கும் இத்தகு தன்மையில் இயற்கைத் தனது இயல்பில் மாற்றம் கொள்ளும் பொழுது இயற்கைப் பேரிடர்கள் ஏற்படும் என்பதை சங்காலத்தில் ஏற்பட்ட பாதிப்புகளை பதிவு செய்துள்ளதன் வாயிலாக அறியலாம். "இடியும் மின்னலும் (மனிதனை) அவனை அச்சுறுத்தின. காட்டு மரங்களின் உரசலில் ஏற்பட்ட பயங்கர நெருப்பும், அடைமழையால் தோன்றிய வெள்ளமும், பேரழிவுகளை ஏற்படுத்திய நிகழ்ச்சிகளும் அவனை அச்சத்திலும், நடுக்கத்திலும் ஆழ்த்தின"[11] என்ற கருத்தின் வாயிலாகவும் சங்க காலத்தில் காற்றாலும், நீராலும், தீயாலும் பேரழிவுகள் நிகழ்ந்திருக்கக்கூடும் என்பதை அவதானிக்க முடிகிறது. மேலும்,

*"நெருப்பெனச் சிவந்த உருப்பவிர் மண்டிலம்*
*புலங்கடை மடங்கத் தெறுதலின் ஞொள்கி*
*நிலம்புடை பெயர்வ தன்றுகொல் இன்றெனை*
*மன்னுயிர் மடிந்த மழைமா றமையத்"* *(அகம்.31: 1-4)*

நெருப்பைப் போன்ற சிவந்த வெம்மை விளங்கும் ஞாயிறு விளைநிலத்துப் பயிர்களெல்லாம் தீயுமாறு அழித்தது. ஆதலின் இன்று நிலவகம் குறைவுபட்டுக் கீழ் மேலாக நிலை பெயரும் காலம் அன்றோ என்று சொல்லும்படி இங்கு வாழும் நிலைபெற்ற உயிர்கள் மடிவதற்கு ஏதுவாக மழை பெய்யாது ஒழிந்தது என்று பதிவாகியுள்ளது. இதில் 'நிலம் புடை பெயர்வது' - என்றதனால் நிலமானது தன் நிலையிலிருந்து கீழ் மேலாக தம்நிலை பெயர்த்தல் என்பது நிலநடுக்கம் ஏற்படும் காலம். மழையானது தனது பொய்த்தல் தொழிலில் இருந்து மாறுபடுமாயின் இவ்வுலகில் மழையினால் வறட்சி ஏற்படும். மேலும் நெருப்பு போல் சிவந்த ஞாயிறு பயிர்களை அழிக்கும் என்பதனால், ஞாயிறு தன் இயல்பிலிருந்து மாற்றம் கொண்டு அதிக வெப்பத்தை உமிழ்வதால் மண்ணுலகில் உள்ள பயிர்களெல்லாம் தீப்பற்றி எறியும். இதில் இயற்கையானது தம் இயல்பிலிருந்து மாற்றம் கொள்ளும்போது பேரழிவினை ஏற்படுத்தும் என்பதனைத் இப்பாடலடிகளிலிருந்து உணரமுடிகிறது.

"குமரிக்கண்டத்துத் தோன்றிய மாந்தன் எதற்கும் போராடி உயிர் வாழவேண்டிய நில இயற்கையில் இருந்திருக்கிறான். ஒருபக்கமன்று, முப்பக்கங்களில் கடலின் சீற்றமும் ஊழிப் பெருவெள்ளங்களும், காடும் மலையும் வெளியுமே உறைவிடமாயிருந்த நிலையில் இயற்கையின் ஒவ்வொரு கூறும் அவனுக்கு எதிராக அமைய அவற்றோடு சேர்ந்த அஞ்சத்தகு விலங்கினங்களும், மழையும் புயலும் முதலானவை பேரளவில் பெருகிய நிலைகளும் அவன் போராடிப் போராடி வாழ வேண்டிய நிலையில் இருந்தான்"[12] என்ற கு.வெ. பாலசுப்பிரமணியனின் கூற்றின் மூலம் மேற்கூறிய கூற்று உறுதிபடுத்துகிறது.

மழை என்பது நிலத்திற்கு முதன்மை ஆதாரமாகும். மழை பொய்த்துப் போயின் நிலத்தில் வளங்கள் குன்றி வறட்சி ஏற்படும். மக்கள் வளங்களின் மூலம் இயற்கை வாழ்வை விடுத்து, செயற்கைத் தொழிலால் தோன்றிடுவர் ஆகையால் மண்ணிற்கு மழைநீர் முதன்மை ஆதாரம் என்பதை,

***"மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்***
***இயற்கை யல்லன செயற்கையிற் றோன்றினும்"*** ***(புறம்.35: 27-28)***

எனும் பாடலடியில், மழையில்லை என்றால் நிலம் இயல்பு திரிந்து வறட்சி ஏற்பட்டுச் செயற்கையாகத் தோன்றும் என்று வறட்சியின் தன்மையைச் சங்கப் புலவர் பதிவுசெய்துள்ளார்.

மேற்கூறியவாறு சூரியன், மண்ணாகிய நிலம், மழை முதலியவை தன் இயல்பில் மாறுபடும் நிலையில் இந்நிலவுலகில் வாழும் உயிர்கள் பேரழிவினைச் சந்திக்கும் என்று குறிப்பிட்டிருப்பதால், சங்ககாலத்தில் இதுபோன்ற இயற்கையின் மாற்றத்தினால் பேரழிவுகள் ஏற்பட்டிருக்கக்கூடும் என்பதை அவதானிக்க முடிகின்றது.

## நிலத்தினால் பேரிடர் (நிலநடுக்கம்)

பூமியானது பஞ்சபூதங்களான நிலம், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம் ஆகியவற்றால் சூழப்பட்டுள்ளது. பஞ்சபூதங்களின் சீற்றங்கள் நிலநடுக்கம், எரிமலைச் சீற்றம், இடி, மின்னல், மழை, வெள்ளம், நிலச்சரிவு, சூறாவளி, கடல் சீற்றம், காட்டுத்தீ என்று இயற்கைப் பேரழிவுகளாக உருவெடுக்கின்றன. இத்தகைய இயற்கைப் பேரிடர்களில் ஒன்றான நிலநடுக்கம் நிலத்தையே பிளவுபடுத்தும் தன்மையுடையது என்பதைப் பின்வரும் பாடலடிகள்,

***"நிலம் புடை பெயர்வதாயினும்"*** ***(நற்.289: 2)***

***"இருநில மிளர்ந்திசி னாஅங் கொருநாள்***
***அருஞ்சமம் வருகுவ தாயின்***
***வருந்தலு முண்டென் பைதலங் கடும்பே"*** ***(புறம்.139: 13-15)***

இந்நிலவுலகமாகிய பெரியநிலம் பிறழ்தல் போல ஒருநாள் பொறுத்தற்கரிய போர் வருமாயின், போர் செய்யப் புறப்பட்டு விடுவாய் அதனால் பசித்துன்பத்தையுடைய என் சுற்றும் வருந்தநேரிடுமே என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பாடலடிகளில் போரின் தன்மையை இயற்கையில் நிகழும் நிலநடுக்கத்திற்கு ஒப்பாகப் படைத்துள்ளார் புலவர். இதன் மூலம் போரினால் மனித மற்றும் பிற உயிரினங்களுக்குப் பேரழிவுகள் ஏற்படுவதைப் போன்று, பெரிய நிலம் இரண்டாகப் பிறழ்ந்து நிலநடுக்கம் போன்ற பேரழிவுகள் ஏற்படும் காலங்களில் மனிதன் மற்றும் பிற உயிரினங்கள் மிகப்பெரிய அழிவுகளுக்கு ஆட்பட்டிருக்கக் கூடும் என்பதை அறிய முடிகிறது.

***"நிலம் பெயரினும் நின்சொற் பெயரல்"*** ***(புறம்.3: 14)***

மேற்கூறிய பாடலடியானது செவியறிவுறூஉ எனும் துறையால் அமைந்தது. இதில், பாண்டிய மன்னனின் ஈகைத் தன்மையைக் கூறி நிலம் பிறழ்ந்து பெயர நேர்ந்தாலும் நின் ஆணையாகிய சொல் தவறாது நிலைக்க வேண்டும் என்று அறிவுறுத்துவதாக அமைந்துள்ளது. பதிற்றுப்பத்திலும்,

***"நிலம்திறம் பெயருங் காலை யாயினும்***
***கிளந்த சொன்னீ பொய்ப்பறி யலையே"*** ***(பதிற்.63: 6-7)***

என்று அமைந்துள்ளது.

நன்றி மறத்தல் பற்றி அறம் கூறும் தன்மையில் அமைந்துள்ள புறநானூற்று அடியில், பசுவின் மடியினை அறுத்தவர்க்கும், மகளிர் கருச்சிதைத்தவருக்கும், பார்ப்பனருக்குத் தீமை புரிந்த கொடுமையானவருக்கும் அவர்கள் செய்த தீமை போக்கும் வழிகள் உள்ளன. நிலம் கீழ் மேலாகப் பெயர்ந்தாலும் ஒருவன் செய்த நன்றியைச் சிதைப்பவர்க்குத் தீவினையிலிருந்து உய்வது என்றில்லை என்பதனை,

***"ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கும்***
***மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்***
***குறவத் தப்பிய கொடுமை யோர்க்கும்***
***வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென***
***நிலம்புடை பெயர்வ தாயினும் மொருவன்***
***செய்தி கொன்றோர்க் குய்தி யிலென"*** ***(புறம்.34: 1-6)***

மேற்கூறியவாறு பதிவுசெய்துள்ளது. இப்பாடல் ஒருவன் செய்த நன்றியை இந்த உலகம் கீழ் மேலாகப் பெயர்ந்தாலும் அதனை மறத்தல் கூடாது என்று, நன்றியின் தன்மையை உணர்த்த இவ்வுலகமே அழிந்தாலும் என்பது புலப்பட 'நிலம் புடை பெயர்வது' என்ற

வரிகளைப் பயன்படுத்தியுள்ளார். நிலம் புடைபெயர்தல் என்பது நிலம் தனது இயல்புத் தன்மையில் மாற்றம் பெற்று மேலும் கீழுமாக மாறி அமைவது ஆகும்.

"பண்டைத் தமிழிலக்கியத்தில் குறிக்கப்படும் கடல்கோள்கள் உண்மை நிகழ்வுகள் என்ற கருத்தேற்றத்தின் அடிப்படையில் நாவலந்தீவு பல மாறுதலுக்குட்பட்டு அழிந்தும் பரிந்தும் போயிருப்பதாகக் கருதுகின்றனர்"[13] மேலும் "இயற்கையின் சீற்றங்களால் நிலப்பகுதி நீர்ப்பகுதியாவோ நீர்ப்பகுதி நிலப்பகுதியாகவோ மாறுவது தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருக்கக் காண்கிறோம். இதனை உலகப் புகழ்பெற்ற இமயமலை முற்காலத்தில் கடலாக இருந்தமையினை அப்பனிப்பாறைகளில் கடல்வாழ் உயிரினங்களின் எச்சங்கள் தென்படுவது உணர்த்தும்"[14] இக்கூற்றுகளையும் பாடல்வரிகளையும் வரலாற்றுச் சான்றுகளின் வழியாகவும் ஒப்பு நோக்கிப் பார்க்கும் பொழுது இமயமலையில் கடல்வாழ் உயிரினங்களின் எச்சங்கள் தென்படுவதன் அடிப்படையில் சங்ககாலத்தில் நிலநடுக்கம் போன்ற இயற்கைப் பேரிடர்கள் நிகழ்ந்துள்ளதை மெய்பிக்கமுடிகிறது. மேற்கூறிய பாடலடியில் 'நிலம் புடைபெயர்தல்' என நிலமானது அழிந்தாலும் என்று பொருள்பட இவ்வரிகளைக் கையாண்டுள்ளார் ஆலந்தூர் கிழார். இதன் மூலம் சங்க காலத்தில் நிலநடுக்கம் அல்லது நில மாறுபாடு என்ற சொல்லுக்கு 'நிலம் புடை பெயர்தல்' என்ற சொல்லை,

| | |
|---|---|
| நிலம் பெயர்தல் | - நிலம் பிறழ்தல் |
| பிறழ்தல் | - மாறுபடுதல், நீக்குதல் என்ற பயன்படுத்தியுள்ளனர். |

"நிலங்கீழ் மேலாங் காலமாவது நிலநடுக்கத்தால் மேடு, பள்ளம் ஆதலும், பள்ளம் மேடாதலுமாகிய காலம். இமயம் கடலாகவும், அரபிக்கடல் நிலமாகவும் இருந்தகாலமும் உண்டென்ப. மண்ணுலகம் விண்ணுலக மென்பன தலைகீழாக மாறும் காலமாகிய பேரூழிக் காலம்"[15] இத்தகைய நிலநடுக்கங்கள் ஏற்படும் ஊழிக்காலத்தில், இயற்கையால் அமைந்த நிலத்தில் வளங்கள் பல பெற்று, வாழ்க்கை நடத்தும் மனிதன் அதன் இயல்பு நிலை மாறும் பொழுது பேரிடரைச் சந்திக்க விளைகின்றான். இதன் காரணமாக சங்ககாலத்தில் இயற்கைப் பேரிடர்களுள் ஒன்றான நிலநடுக்கம் என்ற பேரழிவு ஏற்பட்டிருக்கலாம் என்பதை உணரமுடிகிறது. அவ்வாறு ஏற்பட்டுள்ள காரணத்தினாலேயே இலக்கியத்திலும் அத்தன்மை பதிவாகியுள்ளது என்பதனை அவதானிக்க முடிகின்றது.

## மழை வெள்ளத்தால் பேரிடர்

### மழையின் தன்மையும் இன்றியமையாமையும்

இயற்கை மனித வாழ்வின் அடிப்படை. இயற்கையை விடுத்து மனிதனால் தனித்து இயங்க இயலாது. ஒரு நாட்டின் வளமைக்கு மிகவும் இன்றியமையாத ஒன்று நீர்.

மழையின் காரணமாகவே நீர் என்பது நமக்குக் கிடைக்கின்றது. அத்தகைய மழையே ஒரு நாட்டைச் சிறப்பாகவும் வளமுள்ளதாகவும் மாற்றும் இயல்புடையது. சங்ககாலத்தில் மழையின் தன்மையும், அதன் இன்றியமையாமையையும் இலக்கியத்தில் பதிவுசெய்தனர்.

***"அறுகுளத் துகுத்து மகல்வயற் பொழிந்தும்***
***உறுமிடத் துதவா துவர்நில மூட்டியும்***
***வரையா மரபின் மாரி"*** ***(புறம்.142: 1-3)***

என்ற பாடலில் மழையானது வற்றிய குளத்திலும் பெய்தது, அகன்ற விளைநிலத்திலும் பெய்தது, விளைநிலம் அல்லாத களர் நிலத்திலும் பெய்து அந்நிலங்களை வளப்படுத்தும் தன்மையுடையது. மழையாகிய நீர்வளம் இல்லையேல் மண்ணுலகில் உயிரினங்கள் வறட்சி, பசி, வறுமை, பட்டினி ஆகியவற்றால் பெருந்துன்பத்திற்கு உள்ளாக்கப்படுவர். ஆதலால், அத்துன்பத்திலிருந்து மீட்கும் உயர்தன்மைக் கொண்டது மழையே என்பதனை,

***"மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே"*** ***(புறம்.107: 4)***

என்று பாரியின் கொடைச் சிறப்பைக் கபிலர் மழையின் தன்மைக்கு உவமையாகக் கூறியுள்ளார். இந்த விரிந்த உலகத்தினைப் பாதுகாக்க மழை உள்ளது என்று மழையின் அவசியத்தை ஒரே அடியில் குறிப்பால் உணர்த்தியுள்ளார். மேலும், புலவர்கள் தாங்கள் கூறக் கருதும் பொருளுக்கு உவமைக் கூறுவதற்கு இயற்கையைப் பயன்படுத்தியமை சங்ககால மக்கள் இயற்கையோடு ஒன்றிணைந்திருந்ததை உணர்த்துகின்றது. மேலும், மழை எவ்வாறு மனிதனுக்குத் தேவை என்பதை,

***"முறைவேண்டு பொழுதிற் பதனெளி யோரீண்***
***டுறைவேண்டு பொழுதிற் பெயல்பெற் றோரே"*** ***(புறம்.35: 15-16)***

என்ற பாடலில் ஒருவனுக்கு நீதி என்பது எவ்வளவு முதன்மையானது என்பதை மழை வேண்டும் பொழுது மழை பெறுவோரின் இயல்பைக் கண்டு உணர முடியும் என்று உதாரணம் கூறுகின்றார்.

***"கார்ப்பெய றலைஇய காண்பின் காலைக்"*** ***(புறம்.119: 1)***

நாட்டில் நீரின்மையால் உயிரினங்கள் வாடி வதங்கிப் பொலிவிழந்திருக்குங் காட்டுப் பகுதியில் கார்கால மழைப் பொழிவினால், அவ்வனம் மீண்டும் புத்துயிர் பெற்று காண்பதற்கு இனிய காட்சியாக இருந்தது என்று கூறுகிறார். ஒருநாட்டில் அங்கு வாழும் உயிரினங்கள் இன்புற்று வாழ, மழையானது இன்றியமையாதது என்பதனை இதன் மூலம் அறியலாம். மேலும்,

***"............................. வானத்து***
***வயங்கித் தோன்று மீனினு மிம்மென***
***பரந்தியங்கு மாமழை"*** ***(புறம்.367: 15-17)***

இப்பாடலடியில், வானத்தின்கண் விளங்கித் தோன்றும் விண்மீன்களிலும் இம்மென முழங்கிப் பெய்யும் பெரிய மழைத்துளியினும் வாழ்க என்று மாமழையால் உலகம் உயிர்ப்பெறும் அதுபோல நீயும் உலகம் உயிர் பெற வாழ்வாயாக எனும் பொருள்படக் கூறியுள்ளார். சங்கச் சான்றோர் இத்தகைய இயற்கைச் சார்ந்த மழையின் அவசியத்தை உணர்ந்திருந்ததை இதன் மூலம் உணர முடிகிறது.

## மழை - 'புயல்'

மழையானது தோற்றம் கொள்வதற்குப் 'புயல்' என்பது முதன்மையிடம் பெறுகின்றது. காற்றழுத்த தாழ்வுநிலையானது மற்ற இடங்களில் உள்ள காற்றினைத் தன்பால் ஈர்த்து உயர் அழுத்தம் ஏற்பட்டு புயலாக மாற்றம் கொள்கின்றது. புயலின் காரணமாக மழை மட்டும் ஏற்படும். சில வேளைகளில் அதன் இயல்புத் தன்மை நீங்கி காற்றின் தன்மை அதிகரித்து பெரும் மழை ஏற்படுகின்றது.

*"புயற்புனிறு போகிய பூமலி புறவின்"* *(மலை. 120)*

பூக்கள் நிறைந்த நாட்டின்கண் பெய்த மழையால் ஈன்றணிமை தீர்ந்து, அழகிய இலையையுடைய மூங்கில் நெல், அவல் இடிப்பதற்கு ஏற்றவாறு செவ்வியைப் பெற்றது என்பதன் மூலம் சங்க காலத்தில் 'புயல்' என்ற சொல் மழை எனும் பொருளால் கையாளப்பட்டுள்ளது என்பதை,

*"புய(ன்)ல்"* *(பட். 4)*

புயல் = மேகம் - மழை (மலை.120) என்ற அடிகள் மூலம் புலப்படும். 'புயல்' என்பது அதிகமான மழையைத் தரக் கூடிய காற்றழுத்தத் தாழ்வு மண்டலத்தினால் உருவாவது. அப்புயலானது அதிக மழையைப் பெய்விக்கும் என்ற காரணத்தினால் தீவிரமான மழையைப் 'புயல்' என்று அக்காலத்தில் அழைத்திருக்கலாம் என்று கருதுவதற்கு சங்க இலக்கியப் பாடல்கள் இடம் தருகின்றது.

## மழையின் கொடியத் தன்மை

முதிர்ந்த சூலை உடைய மேகம் தொடர்ச்சியாக அமைந்த மலையைச் சூழ்ந்து சினம் மிகுந்த இடியானது ஆர்ப்பரிக்க, நெடுங்கடலும் தன் நீரளவில் குறைபடும்படியாக முகந்து கொண்டு வந்த நீரைப் பெய்தது. அது கடிய விசையுடன் பெய்தமையால், மலையின் பாறைகள் வெடித்துச் சிதறின என்று மழையின் கொடியத் தன்மையை,

*"கடல்குறை படுத்தநீர் கல்குறை படவெறிந்*
*துடலே றுருமின மார்ப்ப மலைமாலை*
*முற்றுபு முற்றுபு பெய்துசூழ் முதிர்முகில்"* *(பரி.20: 1-3)*

என்று கூறியிருப்பதால், இயல்பான மழையானது மக்களுக்கு வளங்களை அளிக்கும். அதே வேளையில் தன்நிலை திரிந்து ஆர்ப்பரித்து மழையைக் கொட்டும் பொழுது பல்வேறு நிலைகளில் பேரழிவுகள் ஏற்படும் என்பது தெளிவாகின்றது. இங்கு பதிவுசெய்துள்ளார். அகநானூற்றில்,

*"கடல்முகந்து கொண்ட கமஞ்சூழ் மாமழை*
*சுடர்நிமிர் மின்னொடு வலனேர் பிரங்கி*
*என்றூழ் உழந்த புன்றலை மடப்பிடி*
*கைமாய் நீத்தங் களிற்றொடு படீஇய*
*நிலனும் விசும்பும் நீரியைந் தொன்றிக்*
*குறுநீர் கன்னல் எண்ணுநர் அல்லது*
*கதிர்மருங் கறியா தஞ்சுவரப் பாஅய்த்"* *(அகம்.43: 1-7)*

என்ற பாடலடிகளில் கடல் நீரினை முகந்து கொண்ட நிறைந்த சூலினையுடைய கரிய மேகங்கள் ஒளிமிக்க மின்னலுடன் வலப்பக்கமாக எழுந்து சென்று முழங்கின. ஞாயிற்றின் வெப்ப மிகுதியைத் தாங்காது வருந்திய புல்லிய தலையினையுடைய இளைய பெண் யானை, மேலே உயர்த்திய தன் துதிக்கையை மறைக்கும் அளவுக்குப் பெருகி விடும் ஆழமான வெள்ளத்தினால் களிற்றுடன் படிந்து விளையாடும்படி, நிலனும் வானும் பொருந்துமாறு கால் இறங்கிப் பெருமழை பெய்தது. சிறிது நீரையுடைய நாழிகை வட்டில் கொண்டு நாழிகையைச் சான்று கூறுவார். கூறுவதல்லாமல், பிற வகையில் ஞாயிறு உள்ள இடம் இதுவென்று அறியப்படாததால் உலகம் அச்சம் கொள்ளுமாறு முழங்கும் குளிர்ந்த மேகங்கள் எங்கும் பரவி மழை பொழியும் கார்கால மழை மிகுதியால், பெருவெள்ளம் உருவானதை இப்பாடல் குறிக்கின்றது. இதன் மூலம் மழை தம்மியல்பு மீறும் பொழுது பேரழிவினை ஏற்படுத்தும் என்பதையும் இவ்வாறான பேரழிவுகள் சங்க காலத்தில் நிகழ்ந்திருக்கக்கூடும் என்பதையும் மேற்கூறிய பதிவுகளின் வழி உணரமுடிகின்றது.

## மழையின் மிகுதியால் பேரிடர் (வெள்ளம்)

மழையானது தேவையான அளவிற்குப் பெய்யும் பொழுது மனித மற்றும் பிற உயிரினங்களுக்கு நன்மை தரும் வகையில் அமைகின்றது. அதன் இயல்புத் தன்மை மாறுபடும் நிலையில் அதீத மழையினால் வெள்ளம் ஏற்பட்டுப் பேரழிவினை ஏற்படுத்துகின்றது. அதே வேளையில் குறைவாக அல்லது மழையின்மையால் பஞ்சம், பசி, பட்டினி போன்றவை ஏற்பட்டு அனைத்து உயிரினங்களுக்கும் பேரழிவினை ஏற்படுத்தும். சங்ககாலத்தில் மக்கள் இயற்கையினால் நிகழும் பேரழிவு போன்ற செயல்களுக்கு கடவுள் (தெய்வீக) செயலென எண்ணி அதனை (இயற்கையை) வழிபட்டு,

நம்பிக்கைச் சார்ந்த சில சடங்காச்சாரங்களை மேற்கொண்டனர். இதன் விளைவாக 'வழிபாடு' தோற்றம் பெற்றிருக்கக்கூடும். இவ்வாறு மழையினால் ஏற்படும் பாதிப்பு நீங்க வழிபாடு நடத்திய நிகழ்வினை பரணர்,

***"மலைவான் கொள்கென வுயிர்பலி தூஉய்***
***மாரி யான்று மழைமேக் குயிர்கெனக்***
***கடவுட் பேணிய குறவர் மாக்கள்"*** *(புறம்.143: 1-3)*

இப்பாடலில், உயிரினங்கள் வாழ்வதற்குத் தேவையான உணவுப்பொருட்களை விளைவிப்பதற்கு மழையானது முதன்மையாக விளங்குகின்றது. குறவர் மக்கள் தாங்கள் வாழும் மலைப்பகுதியில் மழை வந்து சூழ வேண்டும் என்று தெய்வத்திற்குப் பலியிட்டு வழிபாடு நடத்தினர். அவர்கள் வேண்டியது போலவே மழைப் பெய்தது. மழையின் இயல்பு அதிகமான காரணத்தினால் அதன் தன்மை மாறி வெள்ளம் போன்ற பல பேரழிவுகள் ஏற்படும் என்பதை உணர்ந்து மழை மேகம் மேலே செல்ல வேண்டும் என்று எண்ணி வழிபாடு செய்ததாக பதிவு செய்துள்ளார்.

"பண்டைய மக்கள் சடங்காச்சாரங்களை வாழ்க்கையில் நலன்களைப் பெற மிக அவசியமெனக் கருதினர். மழை பெய்யவும், பயிர் வளரவும், காய், கிழங்குகள் கிடைக்கவும், நோய் நொடிகள் வராமல் இருக்கவும், வேட்டையில் விலங்குகள் கிடைக்கவும், புயல் போன்ற இயற்கை விபத்துக்கள் நேராமல் இருக்கவும் நிகழ்த்தினர்"[16] இவ்விளக்கத்தினை அடிப்படையாகக் கொண்டு காணும் பொழுது சங்க காலத்தில் மழையின் அதீத தன்மையினால் அழிவு ஏற்பட்டிருக்கலாம் என்பது குறிப்பால் உணரப்படுகின்றது. மழையானது இயல்பாக இருக்கும் பொழுது மக்களுக்கு வளங்களை வழங்கி நன்மையை ஏற்படுத்துகின்றது. அதே மழை தன் இயல்பை மீறும் பொழுது, அதன் தன்மைப் பெருகி அழிவை ஏற்படுத்தும் என்பது இப்பதிவின் மூலம் தெளிவாகின்றது. இதனையே பிற்காலத்தில் ஆண்டாள் பாடலில்,

***"தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து"*** *(திரு.3: 3)*

என்று உயிரினங்களுக்குத் **'தீங்கின்றி'** நாளெல்லாம் நல்ல மழை பெய்ய வேண்டி நின்றதன் காரணமாய் அன்றைய நாட்களில் மழையின் காரணமாகப் பேரழிவுகள் நிகழ்ந்திருக்கக்கூடும் என்பது தெளிவாகின்றது.

## வெள்ளத்தினால் உயிரினங்களுக்கு ஏற்படும் பேரழிவு

வெள்ளத்தினால் மனிதர்கள் மற்றும் பிற உயிரினங்கள் அழியக் கூடிய சூழல் நிகழ்ந்துள்ளது. இதனை,

*“நுரையுடைக் கலுழி பாய்தலி னுரவுத்திரை*
*யடுங்கரை வாழையி னடுங்கப்”* *(குறிஞ். 178-179)*

எனும் பாடலில் நுரையையுடைய ஆற்றின் பெருக்கில் குதித்தோம். அதனிடத்துப் பரந்து ஓடிவரும் வெள்ள நீரினால் மோதப்பட்டு இடிந்த கரைகளில் நின்ற வாழைமரம் போல நாங்கள் கால் தளர்ந்து நீர்ப் பெருக்கின் வழியே ஈர்த்துச் செல்லப்பட்டோம் என்பதன் மூலம் ஆற்றில் வரும் வெள்ளத்தினால் அதன் பெருக்கினைத் தாங்காது கரைகளில் மரங்கள் நீரில் அடித்துச் செல்லப்படுகின்றன. மேலும் வெள்ளத்தினால் மண் அரிப்பு ஏற்படுவதையும், நீரில் இருப்பவரை வெள்ள நீரானது அடித்துச் சென்றுவிடுவதையும் வெள்ளத்தினால் ஏற்பட்ட பேரழிவுகளாகப் பதிவுசெய்துள்ளனர்.

மழை மேகங்கள் படிகின்ற மலையிடத்திலுள்ள மிளகோடும், சந்தன மரத்தோடும், வெண்ணெய் பெறத் தயிர் போன்ற நுரையோடும், மலர், கனி, பொன், மணி முதலான பிற பொருள்களோடும் நீர் பெருகி வந்தது. அந்நீர் தான் கொண்டு வந்த பொருள்களை வாரி, வாரித் தன் அலைக் கைகளால் கரைகளில் வீசி அக்கரை இடங்கள் அழியுமாறு செய்தது. இவ்வாறு ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து வந்து ஆற்றின் கரைகளில் உள்ள வாழ்விடங்கள் பாழ்படுமாறு பேரழிவை உயிரினங்கட்கு ஏற்படுத்தியுள்ளதை,

*“மைபடு சிலம்பிற் கறியொடுஞ் சாந்தொடும்*
*நெய்குடை தயிரி னுரையொடும் பிறவொடும்*
*எவ்வியி னானும் மீதுமீ தழியும்*
*துறையே ............”* *(பரி.16: 2-5)*

எனும் அடிகள் உணர்த்துகின்றன. மழை அதிகம் பெய்தமையால் நறிய பூக்களை உடைய சுரபுன்னை மரத்தினையும், அகில் மரத்தினையும், சந்தன மரத்தினையும் வெள்ளமானது கொண்டு வந்து, நீராடும் துறையிலே குவிக்கும் மகளிருடைய தோள்களுக்குத் தெப்பமாகும்படி கரையைக் குத்துகின்ற நீர் கொணர்ந்த வெள்ளத்தால் வளங்கள் அழிந்ததை,

*“நறுவீ நாகமும் அகிலும் ஆரமும்*
*துறையாடு மகளிர்க்குத் தோட்புனை யாகிய*
*பொருபுனல் தரூஉம்”* *(சிறு.116-118)*

என்ற பதிவின் வழியும் அறியமுடிகிறது. பரிபாடலில் வையையாற்றில் வெள்ளம் வந்தக் காட்சியை, ஒளிவிளங்குகின்ற படப்பொறியினையும், கண்டார் அஞ்சும் இயல்பும் கொண்ட பாம்பினது பெயரையுடைய சாரலிலுள்ள நாகமரம், அகல், சுரபுன்னை, ஏமை, சந்தனம் ஆகிய மரங்களும் வருந்துமாறு வந்தது. மேலும், தகரம், ஞாழல், தேவதாரம் என்னும்

மரங்களையும் சாய்த்து அடித்துக் கொண்டு காற்றினைப் போல் விரைந்து வருகின்ற வையை நீரின் வருகையானது 'பெரிய கடல் பொங்கி வருவதைப் போன்று இருந்தது' என்று வெள்ளத்தின் சீற்றத்தினால் ஏற்பட்ட பேரழிவினை,

*"ஒளிதிக முத்தி உருகெழு நாகம்*
*அகரு வழைஞெமை ஆரம் இனையத்*
*தகரமு ஞாழலுந் தாரமுந் தாங்கி*
*நளிகடன் முன்னி யதுபோலும் தீநீர்*
*வளிவரல் வையை வரவு"* *(பரி.12: 4-8)*

என்ற பாடல் பதிவுசெய்துள்ளது. மேலும், வெள்ளத்தின் தன்மை மிகும் பொழுது, பெரிய கல்லையும் நகர்த்தும் ஆற்றல் கொண்டது என்பதை,

*"........................... மின்னொடு*
*வானந் தண்டுளி தலைஇ யானது*
*கல்பொரு திரங்கு மல்லற் பேர்யாற்று*
*நீர்வழிப் படூஉம் புணை"* *(புறம்.192: 6-9)*

எனும் அடிகள் உணர்த்துகின்றன. இதன் மூலம் மழை வெள்ளமானது தன் இயல்பு நிலையில் மாறுபட்டு, அதீத தீவிரமடையும்போது பலவித இன்னல்களை விளைவிக்கின்றது என்பதை அறிய முடிகின்றது.

## மழை வெள்ளத்தால் மண் அரிப்பு

நிலப்பரப்பின் மேலுள்ள மண் காற்றாலோ, நீராலோ பெயர்க்கப்படுதல், நிலச்சரிவின் விளைவாக அகற்றப்படுதல் மண் அரிப்பு எனப்படும். மனித உயிர்கள் அழிவது மட்டுமன்றி மண், நிலம், மரம், விலங்குகள், தாவரங்கள், வாழ்விடங்கள் என அனைத்தும் ஒரு கட்டத்திற்கு மேல் அழிவைச் சந்திப்பது உயிரினங்களிடையே பேரழிவாக மாற்றம் கொள்கிறது.

*"புனிறுதீர் குழவிக் கிலிற்றுமுலை போலச்*
*சுரந்த காவிரி மரங்கொன் மலிநீர்"* *(புறம்.68: 8-9)*

இப்பாடலில் காவிரி நீரின் வெள்ளப் பெருக்கின் தன்மையைக் கூறுவதற்கு ஈன்ற குழவிக்குப் பலநாள் செல்லினும் பால் சுரக்கும் தாயின் மார்பு போல மிகுதியான நீர் கரையின் மரங்களைச் சாய்க்குமளவு பெருகிய வெள்ளத்தையுடைய காவிரி என்று உவமைப்படுத்தப்பட்டுள்ளது. தாயினைப் போல் காவிரி மக்களைக் காத்தது, அக்காவிரியின் அதீத தன்மையினால் வெள்ளமானது கரையில் உள்ள மரங்களைச் சாய்க்குமளவு

பெருகி ஓடியது. இவ்வாறு காவிரியின் வெள்ளம் கரைபுரண்டு ஓடுவதால் மண் அரிப்பு ஏற்பட்டு மரங்கள் சாய்ந்து விழுந்தது. இவ்வாறு ஆற்று வெள்ளத்தின் தன்மையால் மண், மரம் போன்றவை பேரழிவுகளைச் சந்தித்தன. மழை பெய்து நீர்பெருகி வரும் போதெல்லாம் படிப்படியாகக் கரைந்து தேய்ந்த கரையினில் நின்ற சந்தன மரத்தை முறித்து கொண்டு வையை நீர் சென்றதை,

***"ஊழாரத் தேய்கரை நூக்கிப் புனல்தந்த***
***காழாரத் தம்புகை"*** ***(பரி.9: 27-28)***

என்ற அடிகள் மூலம், வையையின் நீரானது தொடர்ந்து மண்ணரிப்பை ஏற்படுத்தி மண்வளம் குன்றி பிற்காலத்தில் அங்குள்ள மரங்கள் மற்றும் பிற வளங்கள் பேரழிவிற்கு உள்ளாக்கப்பட்டதை உணரமுடிகிறது.

வையையாற்றில் வெள்ளத்தினால் ஏற்பட்ட பேரழிவினைப் பின்வரும் பாடல்,

***"இறுவரை புரையுமா றிருகரை யேமத்து***
***வரைபுரை யுருவி னுரைபல சுமந்து"*** ***(பரி.7: 40-41)***

நீரால் அரிக்கப்பட்டு அடிப்பக்கம் இற்றுப்போன மலைபோல, நீரால் அரிக்கப்பட்டுக் குத்துண்டு நிற்கும், இரு கரைகளாகிய காவலுக்குள் அடக்கி, வெள்ளிப் பனிமலையின் சிகரங்களைப் போன்ற வடிவம் உடைய நுரைகள் பலவற்றையும் சுமந்து கொண்டு வையை ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியதை இப்பாடல் காட்சிப்படுத்துகின்றது. இதில் வையையில் ஏற்பட்ட வெள்ளத்தினால் மண்ணரிப்பு ஏற்பட்டு மலையானது இற்றுப்போன மலை போல காட்சி தந்ததாகப் பதிவு செய்துள்ளதால், நீரினால் மண்ணரிப்பு ஏற்பட்டு மண்ணின் வளம் கெட்டழியும். நீரினால் மண்ணரிப்பு என்பது பேரிடராக மாற்றம் கொள்ளும் என்பதை, "நீர் மண்ணை அரித்துச் செல்லும்போது அந்த நீரும் கூட நமக்கு இழப்புதான். ஏனெனில் அந்த நீர் நிலத்தில் இருந்திருக்குமானால் அது பயிர் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியாக இருந்திருக்கும். நீரால் அரித்துச் செல்லப்படும் மண், அது படிகின்ற வேற்று நிலத்தில் பயிர் விளைவதற்குத் தடையாக உள்ளது. எஞ்சியுள்ள மண் விளைதிறன் குறைந்ததாகும். பெயர்த்துச் செல்லப்படும் மண் அது படியும் இடம் வேற்று நிலமானாலும் சரி அருவிகள், ஓடைகள் ஆகியவற்றில் படியும் போது விளைத்திறனைக் குறைக்கிறது. ஓடும் நீர்நிலைகளாக இல்லாமல் ஏரிகள், குளங்கள் போன்ற நீர்த்தேக்கங்களில் இம்மண்படியும் போது நீர்த்தேக்கத்தின் கொள்ளளவைக் குறைத்து மதகுகளில் அடைப்பை ஏற்படுத்துகிறது. பெயர்த்துச் செல்லும் நீர் பாயுமிடங்களில் வாய்க்கால் குழிவுகளை ஏற்படுத்தி நிலங்களைத் துண்டித்து ஆங்காங்கே படிந்து உழுதலுக்கு தடையாக உள்ளது எனும் கருத்தும் மண் அரிப்பின் விளைவினை எடுத்துரைப்பதாக உள்ளது."[17] இவ்வாறு

இயற்கை பேரிடர்களில் வெள்ளமானது மண் அரிப்பு முதலானவற்றை உற்பத்தி செய்து பல பகுதிகளிலும், மீட்க முடியாத விளைவுகளை ஏற்படுத்தியது என்பதை மேற்கண்ட சங்கப் பாடல்கள் மூலம் புலப்படுகிறது. மேலும் சங்கச் சான்றோர், இயற்கையோடு இயைந்து வாழ்ந்ததால் மட்டுமே இவை போன்ற சிறு நிகழ்வுகளையும் கூட தம் பாடலில் பதிவு செய்துள்ளனர் என்பது தெளிவாகின்றது.

## மழை பொய்த்தலால் மக்களுக்கு ஏற்பட்ட பேரிடர்

வறட்சி, பசிப்பிணி போன்ற பேரிடர்களால் ஏற்படும் (வேளாண்மைப்) பாதிப்புகளைத் தடுப்பதற்கு மழையானது உதவுகின்றது. ஓங்கி உயர்ந்து நிற்கும் மலைகள் மழை மேகத்தைத் தடுத்து நிறுத்திப் பருவமழைப் பொய்க்காமல் பொழியச் செய்கின்றன. சில வேளைகளில் மேகங்களின் வகைப்பாடுகளில் ஒன்றான அடி அடுக்கில் ஏற்படும் மழைமேகங்களை மலைச் சரிவுகள் தடுத்து அம்மேகங்களைச் சிதறச்செய்கின்றன என்பதை,

*"ஒளிறுமழை தவிர்க்குங் குன்றம்"* *(புறம்.368: 2)*

இப்பாடல் அடிகளில் மழை முகிலைத் தடுக்கும் குன்றுகளைப் பற்றி கழாத்தலையார் மழையை உருவாக்கி வரும் மழை மேகங்கள் சில வேலைகளில் குன்றின் மேல் பட்டு சிதறும் பொழுது, மலைப் பகுதியை அடுத்து அமைந்துள்ள பீடபூமிப் பகுதியில் மழை பெய்யாது போகும் இதனால் வறண்ட காலநிலையே நிலவும் என்பதைப் பதிவு செய்துள்ளார். இதன் வாயிலாக உயந்தோங்கி நிற்கும் மலைகள், மழை மேகங்களைத் தடுப்பதால் வறட்சி ஏற்பட்டு பேரிடராக மாற்றம் கொள்ளும் என்பதை அறியமுடிகின்றது.

மழையானது அதிகம் பெய்து வெள்ளம் போன்ற பேரிடர்களைத் தோற்றுவிக்கின்றன. இதற்கு மாறாக பருவநிலை மாற்றத்தினாலும் குன்றுகளின் தடுப்பினாலும் குறித்த காலத்தில் மழை பெய்யாமையால் வறட்சியான காலநிலைத் தோன்றுகிறது. அனைத்து வளங்களுக்கும் ஆதாரமாக விளங்கும் மழையானது பொய்த்தக் காலங்களில் உலக உயிரினங்கள் வாழ்வாதாரமின்றி பசிப்பிணியால் பேரழிவுகளைச் சந்தித்தன. ஒவ்வோர் ஆண்டும் குறிப்பிட்ட பருவ காலத்தில் மழைப் பெய்ய வேண்டும். தொடர்ந்து பல ஆண்டுகள் மழையின் அளவு குறையும் போதும், மழையே பொழியாத போதும் வறட்சி நிலை உண்டாகிறது. குறைந்த பட்ச தேவைகளுக்கும் நீர்வளம் இல்லாமல் நிலம் காய்ந்து பயிர்கள் விளைவது தடைப்படுகின்றது. ஆடு, மாடுகளுக்கான மேய்ச்சல் புல்வெளியும் பசுமை இல்லாமல் அழிவினைச் சந்திக்கின்றன. மனித மற்றும் பிற உயிரினங்களுக்கும் குடிநீர் தட்டுப்பாடு ஏற்பட்டு உயிர் வாழ முடியாத நிலை ஏற்படுகின்றது. மழைநீரின் முக்கியத்துவத்தை விளக்கும் விதமாக,

*"வானின்று றுலகம் வழங்கி வருதலால்*
*தானமிழ்தம் என்றுணரற் பாற்று"* *(குறள். 11)*

என்று சங்ககாலத்திற்குப் பின்வந்த வள்ளுவர் ‘அமிழ்தம்’ என்று கூறுவதைக் காணும்பொழுது, மழையின் சிறப்பினை உணரமுடிகிறது.

மழையானது கடந்த காலத்தில் பெய்தேன் எனக் கருதி பெய்யாது விட்டாலும், முன்பு விளைந்து விட்டேன் எனக் கூறி நிலம் விளையாது போயினும், இவ்வுலகில் உள்ள அனைத்து உயிர்களுக்கும் உயிர் வாழ்க்கை இல்லை. மழையே மண்ணிலுள்ள உயிர்களுக்கு ஆதாரமாகும் என்பதை,

***“கழிந்தது பொழிந்தென வான்கண் மாறினும்***
***தொல்லது விளைந்தென நிலம்வளங் கரப்பினும்***
***எல்லா வுயிர்க்கு மில்லால் வாழ்க்கை”*** *(புறம்.203: 1-3)*

எனும் அடிகள் புலப்படுத்துகின்றது. இப்பாடலடிகளில் மழையும், அதனால் வளம் பெரும் நிலமும் மக்களுக்கு வாழ்க்கையை அளிக்கும் முதன்மைப் பொருட்கள். அத்தகைய மழையும், நிலமும் பொய்ப்பின் நிலவுலகில் வாழும் எந்த உயிர்களும் வாழ்வதறியாது இறந்துபடும் என்பதைக் கூறி மழையின் சிறப்பினை வெளிப்படுத்தியுள்ளார். மற்றொரு புறப்பாடலிலும்,

***“பயங்கெழு மாமழை பெய்யாது மாறிக்***
***கயங்களி முளியுங் கோடை யாயினும்”*** *(புறம்.266: 1-2)*

என்று, பயன்மிக்க வான்மேகம் மழையைப் பொழியாது நீங்குதலால் நீர்நிலைகள் கோடைக்காலமாக மாறும்நிலை ஏற்படும். இதன் மூலம் மழையின் இன்றியமையாமையும், மழையின்மையால் வறட்சி ஏற்படும் நிலையும் உணர்த்தப்பட்டுள்ளது.

மண்ணுயிர்களை வாழ்விக்கும் மழையானது தன்னிலை மாற்றத்தால் அதீத மழையான புயலாக உருவெடுத்து பெருமழை, வெள்ளம் என்ற நிலைகளில் உயிரினங்களுக்குப் பேரிடரை ஏற்படுத்துகின்றது. மேலும் மண்ணரிப்பு போன்ற செயல்பாடுகளால் இயற்கையின் வளத்தினை மாற்றத்திற்கு உட்படுத்தி பேரழிவினை உண்டாக்குகின்றது. இதற்கு நேரெதிராக மலைகளின் தடுப்பினாலும் பருவநிலை மாற்றத்தினாலும் மழையானது பொய்த்து வறட்சி போன்ற நிலைகளில் பேரிடரை ஏற்படுத்தியதைச் சங்க இலக்கியப் பாடல்களின் வழி அறியமுடிகிறது.

## கடலலையினால் பேரிடர்

### கடலின் தோற்றம் பற்றியக் கொள்கை

உலகத்தோற்றத்தின் போது நிலம், நீர் போன்றவைத் தோற்றம் பெற்றது பற்றி பல்வேறு விளக்கங்கள் அளிக்கப்படினும் சங்க இலக்கியத்தில் அது பற்றிய பதிவுகள் காணப்படுகின்றன.

*"பார்முதிர் பனிக்கடல்"* *(திரு. 45)*

என்ற பாடலடியானது, மண் தோற்றம் பெறாத காலத்திற்கு முன்பே கடல் தோன்றியது என்ற கருத்தினை முன்வைக்கின்றது. இதன் மூலம் உலகத் தோற்றத்தின் ஆரம்ப காலகட்டத்தின் இயல்பினை நன்குணர்ந்து தெளிந்துள்ளனர் சங்கச் சான்றோர் என்பது புலப்படும். உலகில் முதல் உயிரினம் தோன்றியது கடலிலே என்ற அறிவியல் பூர்வமான நிர்ணயத்தை அக்காலத்திலே அறிந்திருந்தினர் என்பதன் மூலம் அக்கால மக்களின் விஞ்ஞான அறிவினை உணரலாம்.

## ஆழி சூழ் உலகும் அதன் இயல்பும்

இயற்கையின் சூழல் அமைப்பில் உருப்பெற்ற உலகம் நிலம், நீர், மலைகளாகத் தோற்றம் பெற்றிருந்தன. இவ்வுலகமானது பெரும்பான்மையாக நான்கில் மூன்று பங்கு நீராகிய கடலால் சூழப்பட்டுள்ளது. இதை,

*"…… முந்நீர் வளைஇய வுலகத்து"* *(பதிற்.31: 21)*

*"……. நீரக விருக்கை"* *(புறம்.99: 3)*

எனும் சங்கப் பாடலடிகள் உலகத் தோற்றத்தின் இயல்பை உணர்த்துவதாக அமைந்துள்ளது. கடல் நீரானது மேகம் முகப்பதால் குறைவுபடாமலும் ஆறுகள் பாய்வதால் மிகுதலைச் செய்யாமலும் கரையை மோதி ஒலிக்கும் கடல் என்று கடலின் தன்மையை,

*"மழை கொளக் குறையாது புனல்புக மிகாது*
*கரைபொரு திரங்கு முந்நீர்"* *(மது. 424-425)*

எனும் அடிகள் கடலின் இயல்புத் தன்மையை உணர்த்துகின்றது. கடலால் சூழப்பட்டுள்ள இவ்வுலகம் தண்ணீர்மை குன்றாது இருப்பினும் கடல் நீரானது பருகுவதற்கும் உணவிற்கும் உரியதன்று என்பதை,

*"திரைபொரு முந்நீர்க் கரைநணிச் செலினும்*
*அறியுநர்க் காணின் வேட்கை நீக்கும்*
*சின்னீர் வினவுவர்…………………………"* *(புறம்.154: 1-3)*

இப்பாடலில், திரை அலைக்கும் கடலின் கரைபக்கத்தே செல்லினும் உண்ணும்நீர் இருக்கும் இடத்தை அறிந்த அறிவாரைக் கண்டால், உலகத்து மக்கள் நீர் வேட்கையைத் தணிக்கும் சிறிய நீரைக் கேட்பர் என்று பதிவுசெய்யப்பட்டுள்ளது. கடல் நீரின் தன்மையையும், நன்னீரின் தன்மையும் ஒப்புமைப்படுத்துவதாக அமைந்துள்ளது. உலகில் மூன்றில் ஒரு பங்கு நிலமும், மூன்று பங்கு கடல் நீராலும் சூழப்பட்டிருப்பினும் அதனை குடிநீராகப் பயன்படுத்துவதில்லை. மேலும் அதனைக் கொண்டு பயிர் விளைவிப்பும் செய்ய இயலாது என்பதை உணரமுடிகிறது.

### *கடற்கோளும் சங்க அழிவும்*

சங்ககாலத்தில் கடற்கோளினால் சங்கங்கள் அழிந்த நிகழ்வை இலக்கியத்தில் பதிவுசெய்யப்பட்டுள்ளன. முச்சங்கங்கள் பற்றியச் செய்திகளை இறையனார் களவியல் உரை, முதற்சங்கம் கடல்கொண்ட மதுரையிலும், இடைச்சங்கம் கபாடபுரத்திலும், முன்றாம் சங்கமாகிய கடைச்சங்கம் தற்கால மதுரையிலும் இருந்ததை விளக்குகின்றது. முதல் இரண்டு சங்கங்கள் கடற்கோள்களால் பேரழிவினைச் சந்தித்தன. இதனை சங்ககாலத்திற்குப் பின் வந்த சிலப்பதிகாரம்,

***"ப.்றுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்துக்***
***குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள"*** ***(சிலப்.காடு. 19-20)***

என்று ப.்றுளி ஆறு, மலை, குமரிக்கண்டம் என்னும் நிலப்பரப்பு ஆகியன ஆழிப்பேரலை என்னும் இயற்கைப் பேரிடரால் அழிந்ததைக் காட்டுகின்றது. சிலப்பதிகார உரையில் அடியார்க்குநல்லார், 'முதல் ஊழி இறுதிக்கண், தென்மதுரை யகத்துத் தலைச்சங்கம்' 'இரண்டாம் ஊழியதாகிய கபாடபுரத்தில் இடைச்சங்கம்' என்று கடற்கோளால் இருபெரும் ஊழிகள் சங்க காலத்தில் ஏற்பட்டதை விளக்கியுள்ளார். இதன் வாயிலாக சங்காலத்தில் கடற்கோளால் அழிவு நிகழ்ந்திருக்கக்கூடும் என்பது தெளிவாகின்றது. மேலும் அறிவியல் முறைப்படி இதனை உறுதிப்படுத்தும் விதமாக,

"ப.்றுளி ஆற்றையும் அடுக்கடுக்கான மலைத் தொடர்களால் ஆன குமரி மலையையும் உடைய தென்தமிழ்நாட்டின் நிலப்பகுதியைக் கடல் கொண்டது என்று கூறுவர். இயற்கைப் பேரிடர்கள் பற்றிய மக்களின் வியாக்கியானங்கள் எப்படி இருந்தாலும், இயற்கைப் பேரழிவுகள் ஏற்பட்டன என்பதையே அவை உணர்த்துகின்றன"[18] என்று சங்ககாலத்தில் கடற்கோளால் இயற்கைப் பேரழிவு ஏற்பட்டதை ஆ.தனஞ்செயனும், "இவ்வுலகம் பண்டையக் காலத்தில் செங்குத்தாகவே சுழன்று கொண்டிருந்தது. சற்றே சாய்ந்து 26 பாகையில் இருந்து சுழன்று கொண்டிருந்தது. விண்வெளியில் ஏற்பட்டத் தவறான கோளாறினால் மண்ணுலகோடு சார்புபெற்றிராத இருபெரும் விண்மீன் பூமிக்கோளத்தின் அருகேவர புவி ஈர்ப்பால் இழுக்கப்பட்ட அந்த உருண்டை நமது பூமியின்மீது வீழ்ந்தது. இந்தப் பேரதிர்ச்சியால் பூமி அதிர்ந்து குழுங்கியது. 23 பாகைக் கோணத்தில் சாய்வுற்றது. இதன் காரணமாகக் குமரிக்கண்டம் கடல்வாய்ப்பட ஆரம்பித்தது. அக்காலத்திலேதான் அதுவரைக் கடலாய் இருந்த சிந்து, கங்கைச் சமவெளி, இமயமலை, மத்திய ஆசியா முதலிய நிலப்பகுதிகள் கடலில் இருந்து மேலெழுந்தன"[19] என்று வி. ஆனந்தகுமாரும் உறுதிப்படுத்துகின்றனர்.

கடலுக்கடியில் ஏற்படும் நிலநடுக்கம், கடல் மலைத்தொடர் நிலச்சரிவு, கடல் எரிமலை வெடிப்பு, கடலில் பெரிய விண்கல் விழுதல் போன்ற காரணங்களால் ஆழிப்பேரலை ஏற்பட்டு இவ்வலைகள் உருவாகிய சில மணி நேரங்களிலேயே உயிர்களுக்கும், உடைமைகளுக்கும் பெரும் சேதத்தினை விளைவித்து விடுகின்றன என்று வல்லுநர்கள் குறிப்பிடுகின்றனர். சங்ககாலத்தில் இதுபோன்ற ஆழிப்பேரலைகள் ஏற்பட்டுள்ள நிலையில் புறநானூறு,

***"வேந்துடைத் தானை முனைகெட நெரிதர***
***ஏந்துவாள் வலத்த னொருவ னாகித்***
***தன்னிறந்து வாராமை விலக்கலிற் பெருங்கடற்***
***காழி யானையன்"*** ***(புறம்.330: 1-4)***

பேரரசனுடைய படைகள், போர்க்களத்தில் பகைவரை அழிக்க முற்பட்டு நெருங்கி வந்த போது, வாள் ஏந்திய வெற்றியையுடைய தான் ஒருவனேயாகி, அப்படை தன்னைக் கடந்து வராதபடி தடுத்தலால், பெரியகடல், நிலப்பகுதிக்கு வராமல் காக்கின்ற கரைபோல் விளங்கினான் என்று மதுரைக்கணக்காயனார் மன்னனொருவனைக் குறித்து பாடியுள்ளார். இப்பாடலில் கடலின் தன்மைப்பற்றி படைவீரர்கள் எவ்வாறு அழிக்கும் நோக்கில் வருவரோ, அதுபோல, கடலின் அலை வருவதைப் 'பெருங்கடல் ஆழி' என்று ஆழிப் பேரலைப் பற்றி பதிவு செய்யப்பட்டுள்ளது. மேலும்,

***"வருவிசைப் புனலை கற்சிறை போல***
***ஒருவன் தாங்கிய பெருமை யானும்"*** ***(தொல்.புறம்.7-8)***
***"வருபுனல் நெரிதரு மிகுகரை பேரியாற்று"*** ***(அகம்.137: 7)***
***"ஊழி பெயரினும்"*** ***(குறள். 989)***

என்ற குறிப்புகளின் மூலம் சங்ககாலத்தில் தற்போது நடந்த ஆழிப்பேரலைப் போல பேரழிவுகள் ஏற்பட்டிருக்கலாம் என்பதை உய்த்துணர முடிகிறது.

## *சீற்றம் கொண்ட கடலலையும் பேரழிவும்*

உலகத் தோற்றத்தில் பெரும்பான்மையும் கடல் நீரால் சூழப்பட்ட இந்நில உலகில் கடலின் இயல்புத் தன்மையில் பல்வேறு நன்மைகளை அடைந்திருப்பினும் அதன் இயல்புத் தன்மை மாற்றத்தால் கடல் சீற்றம் போன்ற ஆழிப்பேரலைகள் ஏற்படுகின்றன. இப்பேரலைகள் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன.

கடலிலே மலை போல அலைகள் பெரியனவாய் எழுகின்றன. இவ்வலைகள் சிறுசிறு துளிகளாக சிதறும் வகையில் காற்றுப் பாய்ந்து அடிக்கிறது என்று கடலானது தன்னிலை மாறும் பொழுது சீற்றம் கொண்டு மலை போல பெரிய அலைகளாக உருவெடுக்கின்றது. என்பதனை,

*“வரைமருள் புணரி வான்பிசி ருடைய*
*வளிபாய்ந் தட்ட துளங்கிருங் கமஞ்சூழ்*
*நளியிரும் பரப்பின் மாக்கடன் முன்னி”* *(பதிற்.11: 1-3)*

என்று கூறுவதன் மூலம் சங்ககாலத்தில் சுனாமி போன்ற ஆழிப் பேரலைகள் தோன்றி அழிவை ஏற்படுத்தியுள்ளது தெளிவாகின்றது. கடலின் சீற்றத்தினால் கரையோரங்களில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த படகுகள் அனைத்தும் பாழாயின. இதனால் கடல்சார்ந்த பகுதிகளில் வாழ்வினை மேற்கொள்ளும் பரதவ மக்களின் வாழ்க்கை பெரிதும் பாதிக்கப்பட்ட நிலையினையும்,

*“.............................. கொண்டலொடு*
*குரூஉத்திரைப் புணரி உடைதரும் எக்கர்ப்*
*பழந்திமில் கொன்ற”* *(அகம்.10: 8-10)*

என்ற அகப்பாடலில், கீழ்க் காற்றினால் நிறம் மிக்க கடல் அலைகள் மோதி உடைக்கும் மணல் மேட்டில் கிடக்கும் படகானது அடித்துச் செல்லப்பட்டு பாழானது. கடலின் மூலம் வாழ்வாதாரம் பெரும் பரதவர் வாழ்க்கை பொருளாதாரத்தினால் பெரிதும் பாதிக்கப்படும். கடல் தன் இயல்பு மீறும் பொழுது அப்பகுதியில் வாழ்வினை மேற்கொள்ளும் மக்களின் வாழ்வாதாரத்தையும், மக்களையும் பேரழிவிற்கு ஆட்ப்படுத்தி இருக்கும் என்பதை குறிப்பால் உணரலாம். மேலும்,

*“எறிதிரைப் பெருங்கட லிறுதிக்கட் செலினும்*
*தெறுகதிர்க் கனலி தென்றிசைத் தோன்றினும்”* *(புறம்.397: 23-24)*

எனும் பாடலில், வீசுகின்ற அலைகளையுடைய பெரியகடல் முடிவெய்தும் ஊழிக்காலம் வரினும், வெதும்புகின்ற கதிர்களையுடைய சூரியன் மாறித் தென்திசையிற் தோன்றும் காலம் வரினும் என்று மன்னனின் புகழைப் இப்பாடல் வெளிப்படுத்துமாறு அமைந்துள்ளது. உலகம் அழியும் காலமாகிய ஊழிக்காலம் என்பது பெரிய கடல் முடிவெய்துவது என்று கடலின் மிகப் பெரிய அழிவை இங்குப் பதிவு செய்துள்ளார். ஆதலால் சங்கம் இருந்ததாகச் சொல்லப்பட்ட மதுரை நகரங்கள் அழிந்துள்ளது என்பதும், நாவலந்தீவு கடலால் கொள்ளப்பட்டது என்ற குறிப்புகளின் மூலமும் சங்ககாலத்தில் கடல்கோளால் பேரழிவுகள் நடந்திருக்க வேண்டும் என்பது உறுதிபடுகின்றது.

## கடும் வெப்பத்தினால் பேரிடர்

### ஞாயிற்றின் தோற்றமும் அதன் இயல்பும்

பால்வளி அண்டத்தில் உள்ள பொருள்களில் முதன்மையானது ஞாயிறு. நமது சூரியக் குடும்பத்தின் மையமாகிய ஞாயிறு உலகில் உள்ள உயிர்கள் அனைத்தும்

உயிர்ப் பெறுவதற்குக் காரணமாகின்றது. இயல்புத் தன்மையில் ஞாயிரானது அனைத்து வளங்களையும் அளிக்கின்றது. ஞாயிற்றின் இயல்புத் தம்மைப் பற்றி சங்க இலக்கியங்களில் பெருவாரியான பாடல்களில் காணப்படுகின்றன. மன்னர்களின் புகழ்பாடுவதற்கும் உவமைப்படுத்தலுக்கும் சிறப்பாக ஞாயிறைக் கையாண்டுள்ளனர்.

*"பருதி சூழ்ந்தவிப் பயங்கெழு மாநிலம்"* *(புறம்.358: 1)*

என்ற பாடலில், சூரியனால் சூழப்பெற்ற பயன் பொருந்திய நிலவுலகம் என சூரியனின் அமைப்பினைப் பாடியுள்ளார். மேலும்,

*"ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்"* *(சிலம்பு.மங்: 4)*

என்பதன் மூலம், பண்டையத் தமிழ் மக்கள் இயற்கையால் உருப்பெற்ற ஞாயிற்றை வழிபாடு செய்து வாழ்ந்து வந்துள்ளனர் என்பது புலப்படுகிறது. சங்ககால மக்கள் இயற்கையின் தன்மைகளாகிய தட்பவெப்ப நிலைகளை அறிந்தவர்களாகவும், அதன் இயல்புகளுக்கு ஏற்ப வாழ்க்கையைத் தகவமைத்தச் சூழலையும், இயற்கை மாற்றங்களால் ஏற்பட்ட விளைவுகளையும், பூமி வெப்பமாதலின் காரணத்தால் மக்கள் சந்தித்த துன்பங்களையும் சங்க இலக்கியப் பாடல்களில் காணமுடிகிறது.

*"நெடுங்கரைக் கான்யாற்றுக் கடும்புனல் சாஅய்*
*அவிரறல் கொண்ட விரவுமணல் அகன்துறைத்"* *(அகம்.25: 1-2)*

என்ற பாடலில், நெடியக் கரைகளைக் கொண்ட காட்டாற்றின் வேகம் மிக்க பெருவெள்ளம் அற்றுப் போயிற்று. அகன்ற நீர்த்துறைகள் விளங்கும் அறல் ஆகும் தன்மையினைக் கொண்ட பரந்த மணலையுடையனவாயின என்று கோடை காலத்தில் வெப்பத்தின் நிலைமாறி கடுமையான வெப்பத்தினால் உலகில் உள்ள நீர்த்துறைகள் வற்றி மக்களும், பிற உயிரினங்களும் நீரின்றி பெரும் அழிவிற்கு உள்ளாவர் என்பது வெளிபடுகிறது. மேலும்,

*"அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப்*
*பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பருதி*
*காய்சினத் திருகிய கடுந்திரல் வேனிற்"* *(பெரு. 1-3)*

என்ற பெரும்பாணாற்றுப்படையின் பாடலடியில், எல்லாப் பொருளும் அகன்று விரிதற்குக் காரணமானது வானம். அவ்வானிடத்தே, பரந்த இருளை விழுங்கிப் பகற்பொழுதைத் தோற்றுவித்து காய்சினத்தால் முறுகிய முதுவேனிற் பருவம் என்று, ஞாயிறு என்பது இயல்பில் இருக்கும் பொழுது உலகில் வாழும் பல்வேறு உயிரினங்கள் வாழ வழி செய்கிறது. அதே ஞாயிறு 'கடுந்திரல்' என்பதனால் தன் இயல்பிலிருந்து மாறும் பொழுது தன் கதிர்களைப் பூமியில் அதிகப் படியாக விழச் செய்கிறது. (கடுஞ்சினத்தால்) இதனால், புவி வெப்பமடைந்து அனைத்து உயிர்களும் பேரழிவுகளைச் சந்திக்கும் என்ற பொருள்பட அமைந்துள்ளது.

“அக்கால (சங்ககால) இயற்கையின்படி ஆதவனின் கதிர்கள், அதிகவெப்பக் கதிர்களாகவே, வீசிக்கொண்டிருந்தது. காற்று மண்டலமும், நீராவி கொண்டதாகவே இருந்ததால் அக்கால அந்நில மக்கள் கடும்வெப்பத்தைத் தாங்கியே வாழ்ந்தனர்”[20] என்று சங்ககால நிலவியலில் சூரிய வெப்பத்தின் தாக்கத்தைப் பற்றி வி.ஆனந்தகுமார் குறிப்பிடுகின்றனர்.

ஞாயிற்றின் கதிர்கள் நிலத்தைப் பிளக்குமாறு பசுமையறச் சுடுவதால், நிழல் சுருங்கி மரங்கள் வாடியது. பாறைகள் கொதித்து நீரற்ற பைஞ்சுனைகளில் ஈரம் இல்லாமற் போகும்படிக் காய்ந்தது. ஞாயிற்றின் தன்மை மிகுவதால் நிலங்கள் வெம்மையடைந்து வறட்சி ஏற்பட்டு உயிரினங்கட்குப் பேரிடர் ஏற்படும் என்பதை,

*“…………………………………… நிலம்பக*
*அழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலின்*
*நிழல்தேய்ந் துலறிய மரத்த அறைகாய்*
*பறுநீர்ப் பைஞ்சுனை ஆமறப் புலர்தலின்”* *(அகம்.1: 9-12)*

எனும் அடிகள் உணர்த்துகின்றது.

*“வெம்பா தாக வியனில வரைப்பென”* *(பரி.11: 80)*

எனும் அடிகளில், ஒரு நாட்டினை அகன்ற பரந்த இம்மண்ணுலகம் கதிரவன் காய்தலால் வெப்பமுடையதாகாமல் மழையினால் குளிர்ச்சிப் பெறுவதாக என்று புலவர் வாழ்த்துகின்றார். இதில், வெம்மையின்றி, மழை பெருக வேண்டும் என்பதின் மூலம் வெப்பத்தினால் நாடு பேரழிவைச் சந்திக்கும் என்பதைக் குறிப்பால் உணர்த்தியுள்ளார். இதன் காரணமாக,

*“மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்”* *(சிலப்.மங். 7)*

என்று மழையினை வாழ்த்தினர். அக்காலத் தமிழர்களின் வாழ்க்கைச் சூழலில், பூமி வெப்பம் குறித்து தாங்கள் அனுபவித்த அனுபவத்தின் வெளிப்பாடாகச் சங்கப் புலவர்கள் தம் பாடலில் பதிவு செய்துள்ளனர்.

## வெப்பத்தினால் ஏற்பட்ட பேரழிவு

மண்ணுலகிற்கு வளங்களை ஏற்படுத்தும் ஞாயிறானது, தன் இயல்புத் தன்மையில் மாற்றம் கொள்ளும் போது உலக உயிர்கள் வாழ்வாதாரமின்றி வறட்சி, பசி, பட்டினியால் பேரழிவினைச் சந்திக்க நேரிடும். இத்தகு வறட்சியான சூழல் சங்ககாலத்தில் நிலவியதை அக்காலப் புலவர்களின் பாடல்கள் வழி அறியலாம். வெப்ப மிகுதியால் நிலமானது பிளக்கும் அளவிற்குக் கடும் வறட்சி ஏற்பட்டது என்பதை,

*"................................. இருளற*
*விசும்புடன் விளங்கும் விரைசெலல் திகிரிக்*
*கடுங்கதிர் எறித்த விடுவாய் நிறைய*
*நெடுங்கால் முருங்கை வெண்பூத் தாஅய்*
*நீரற வறந்த நிரம்பா நீளிடை"* *(அகம்:53: 1-5)*

என்ற பாடல் அடிகளில், விரைந்த செலவினையுடைய ஞாயிறு இருள் விலகுமாறு வானிடத்தே விளங்கிற்று. அதன் சுடுகின்ற கதிர்கள் காய்ந்தமையால் நிலங்கள் எங்கும் பிளந்தன. அப்புள்ளிகள் நிறையும்படி நீண்ட அடியினையுடைய முருங்கை மரத்தின் வெண்மையான பூக்கள் பரந்து கிடந்தன. செல்லத் தொலையாத யானையின் நெடிய வழி நீரிலாது வறட்சியுடன் காணப்பட்டது. மற்றொரு அகப்பாடலில் மழையின்மையால் ஏற்பட்ட வறட்சி குறித்து,

*"நாடுவறங் கூர நாஞ்சில் துஞ்சக்*
*கோடை நீடிய பைதறு காலைக்*
*குன்றுகண் டன்ன கோட்ட யாவையுஞ்*
*சென்றுசேக் கல்லாப் புள்ள உள்ளில்*
*என்றூழ் வியன்குளம்"* *(அகம்.42: 5-9)*

கோடைகாலம் நீட்டித்து நின்ற பசுமையற்ற காலம். மழை பெய்யாது பொய்த்தமையால் நாட்டில் வறுமை மிகுந்தது. கலப்பைகள் யாவும் தொழிலற்றுக் கிடந்தன. குன்றுகளைக் கண்டால் ஒத்த பெரிய கரைகளையுடைய குளங்களில் வெயில் காய உள்ளே நீரின்மையால் பறவைகள் வந்து தங்குதல் ஒழிந்தன என்று வெப்பம் நீடித்தலால் வறட்சி ஏற்பட்டு மண்ணுயிர்கள் வருந்துகின்ற நிலையினை அறியமுடிகின்றது.

"வறுமைச் சூழலுக்கான காரணங்களில் முதன்மையானதாக நீர்வளமின்மையே காட்டப்பட்டுள்ளது. நீர்வற்றிப்போன குளத்தின் நிலையும் வறுமை எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. வறிது சிறிதாகும் என்பது தொல்காப்பியம். எனவே வறுமை என்பது நீரோ உணவுப் பொருளோ இல்லாது போகும் நிலையையே குறிப்பிடுவதற்கு ஆளப்பட்டுள்ளதை அறியலாம்."[21] என்ற பெ. மாதையனின் கருத்தின் வாயிலாகவும் வறட்சி என்பது நீரின்மையால் ஏற்படும் தன்மையே என்பதைத் தெளிவாக உணரமுடிகிறது.

சங்ககாலத்தில் தீயைப் போன்ற வெப்பம் நிறைந்த நாட்களும், அனல் காற்று வீசிய சூழலும், வெப்பம் மிகுதியாகிப் போவதால் ஆறு, கிணறு, கூவம், சுனை, அருவி போன்ற நீர்நிலைகள் நீரின்றியும் இருந்தன. கடும் வெப்பம் பரவியதால் நடை வெளிப்பாதைகளில் கிடக்கும் குறுங்கற்கள் தீயில் காய்ச்சிய இரும்பு போல் பாதம் சுட்ட நிகழ்வுகளையும், கனிதேடிச் சென்ற பறவைகளுக்குக் கனி கிடைக்கப் பெறாமையால்

வெப்பக்காற்றால் சிக்கி முயன்று மீண்ட நிகழ்வை எண்ணிக் கவலை கொண்டது. மரங்கள் ஒன்றுடன் ஒன்று உரசியதால் வெப்பமிக்க காடுகளில் தீப்பற்றியச் சூழலும் பாலைக் கிணற்றின் தன்மையையும், வெப்பம் மிகுதியால் சுற்றுச்சூழல் மாற்றம் கொண்டது. இவ்வாறு இயற்கையாகிய ஞாயிறு தம் இயல்பிலிருந்து மாறுபடும் பொழுது பேரிடர்கள் ஏற்படும், அப்பேரிடரால் மக்கள் மற்றும் பிற உயிரினங்கள் தம் உயிர், உடைமை மற்றும் வளங்களையும் இழக்கும் நிலை ஏற்படும் என்பதைச் சங்கப்பாடல்களில் காணப்படும் குறிப்பினால் அறியமுடிகின்றது.

## குறிஞ்சி, முல்லை நிலங்கள் தன்நிலை திரிந்து பாலையாதல்

வளமிக்க சங்ககால வாழ்நிலங்கள் வெப்ப மிகுதியால் தம் இயல்பில் திரிந்து உயிரினங்களின் வாழ்வியலைப் பாதிப்பிற்குட்படுத்தும் நிலை ஏற்பட்டிருந்தது. குறிஞ்சி நிலமானது தன் இயல்பில் திரிந்து பாலையாதல் பற்றி,

> ***"மணிமலைப் பணைத்தோள் மாநில மடந்தை***
> ......................................................
> ......................................................
> ***சுரன்முதன் மாரஅத்த வரிநிழல் அசைஇ"*** *(சிறு.1-12)*

என்ற பாடலில், மூங்கில் ஆகிய தோளை உடைய நில மடந்தையில் மணிமலை ஆகிய முலையின் மேல் கிடந்து அசையும் முத்துமாலை போன்ற ஆறு. அதன் ஓடுகின்ற நீர் வற்றியதால், வருந்தி நிற்க, சேய்மைக்கண் நின்று வருதலையுடைய காட்டாற்றின் கரையில் நறுமணம் கமழும் ஒரு பூம்பொழில் விளங்குகிறது. அப்பொழிலிடத்து குயில் அலகால் குடைந்து உதிர்த்த பூவின் வாடலைச் சூடி, தன் இரு கரைகளும் கருநிற மயிரை விரித்தாற் போன்று கருநிறத்தைத் தம்மிடத்தே கொண்ட நுண்ணிய கருமணல், கரும்பொன் வெப்பம் ஏற்ற தன்மை போன்ற வெம்மையுற்று நிற்கின்றது. அம்மணற் பரப்பில் மெல்ல நடந்து மேலும் வெயிலால் வெப்பம் ஏற்பட்ட கூறிய பரற்கற்கள் கிழித்து வருத்தும் இளவேனில் பருவம் நிலைபெற்று வெம்மை செய்த பருவத்தின் வழித்தாகிய முதுவேனில் நாட்கள் நிகழும் பருவம்; ஞாயிற்றினது கதிர்கள் காலை நேரத்திலே மிகுந்த வெப்பத்தைத் தருவதாகிய பாலைத் தன்மை நிலைபெற்ற பாலையாகிய நீண்ட காட்டு வழியிடத்தே நின்ற வேப்பமரத்தினது நிழலில் தங்கியிருந்த பாணர்கள் என்று குறித்துள்ளார். இவ்வாறு முல்லை, குறிஞ்சி நிலங்கள் தம்மியல்பு திரிந்து மக்களின் வாழ்வியலைப் பாதிப்பதைக் காணமுடிகின்றது.

"தமிழர்கள் பாலை என்ற சொல்லால் குறித்தது, பிற நிலப்பகுதிகளைக் - குறிப்பாக மலைப்பகுதிகள், மேய்ச்சல் நிலங்களைத்தான். பருவமழை தப்பியோ, இயற்கையாக நீர் வறண்டதாலோ கோடைக்காலத்தில் அவை பாலைவனம் போன்ற

தோற்றத்தைப் பெற்றன. நிலநடுக்கோட்டுத் தட்பவெப்பத்தில் இத்தற்காலிகப் பாலை நிலம் மலைப்பகுதிகளிலும் தோன்றலாம். மலைப் பகுதிகள் வறட்சிக்கு ஆளாகும் போது, வெப்பமும் உலர்ந்த, பசுமையற்ற இயற்கை நிலத்தோற்றமும் சமவெளிப்பகுதியை விடக் கூடுதலாகவே புலப்படும்”[22] என்று பாலை நிலத்தின் இயல்புத் தன்மையை தனிநாயக அடிகள் விளக்கியுள்ளார். இதன் மூலம் ஞாயிற்றின் இயல்புத் தன்மை மாற்றம் பெற்று அதிகப்படியான கதிர்களை உமிழ்வதால் வெம்மை அதிகரிக்கும். அத்தகைய காலகட்டத்தில் நீர்நிலைகள் கெட்டு, வளம் பொருந்திய உயிரினங்கள் வாழ்வதற்கேற்ற நிலங்கள் மாற்றம் பெற்று வறட்சி மிகுந்த பாலை நிலத்தை உருவாக்கும் என்பதை உணரமுடிகிறது. இவ்வாறாகவே சங்க காலத்தில் பாலையெனக் குறிப்பிடப்பட்ட நிலம் உருப்பெற்றது. இதனையே பிற்கால சிலப்பதிகாரமும்,

> ***“முல்லையுங் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து***
> ***நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்***
> ***பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்”*** ***(சிலப்.காடு: 64-66)***

முல்லை - குறிஞ்சி ஆகிய நிலங்கள் தத்தம் இயல்பு திரிந்து பாலை ஆவது இயல்பாகும் என்று குறிப்பிட்டுள்ளது. நச்சினார்க்கினியர்,

“காலையும் மாலையும் நண்பகலன்ன கடுமை கூரச் சோலைத் தேம்பிக் கூவல் மாறி, நீரும், நிழலுமின்றி நிலம்பயம் துறந்த புள்ளும், மாவும் புலம்புற்று இன்பமின்றித் துன்பம் பெறுவது”[23] என்று உரைசெய்துள்ளார்.

> ***“பைந்நனை அவரை பவழங் கோப்பவும்***
> ..............................................
> ..............................................
> ***ஆமான் சூட்டின் அமைவரப் பெறுகுவீர்”*** ***(சிறு.164-177)***

என்ற பாடலில், அவரையானது பவளம் கோத்தாற்போன்று பூத்திருக்கும். கருநிறக் காயாவின் அரும்பு, மயிலின் கழுத்துப் போன்று மலர்ந்திருக்கும். கொழுவிய கொடியை உடைய முசுண்டை, கொட்டம் போன்ற பூக்களைத் தன்பால் கொண்டிருக்கும். செழித்த காந்தள் கைவிரல் போன்று பூத்திருக்கும். கொள்ளை நிலத்தே கிடந்த நெடிய வழிகளில் இந்திரக்கோபப் பூச்சிகள் ஊர்ந்து செல்லும். முல்லைக்கொடி படர்ந்து நிற்கும் அழகிய காட்டிடத்தே, அருவிகள் வீழும் மலையின் பின்னே ஞாயிறு மறையும் அந்திப் பொழுதின்கண், வேலினது நுனி போலப் பூத்த கேணியையுடைய, வெற்றியையுடைய வேலுரைச் சேருவீர். அங்குள்ள உள்ளுறைவோர் வருந்துவதற்குக் காரணமான வெப்பமிக்க குடிலின்கண் உறையும் எயினர் குலத்தில் பிறந்த மகளிர் சமைத்த இனிய புளி இட்ட சோற்றினைச் சமமான ஆட்டிறைச்சியுடன் நும் பசி தணியுமாறு நிரம்பிப் பெறுவீர் என்று பாணனின் வறுமைக்கு ஆற்றுப்படுத்துகிறார்.

'உறுவெயிற்கு உலைஇய உருப்பு அவர் குரம்பை' என்ற அடிகளால் மிக்க வெயிலால் உள்ளுறைவோர் வருந்துவதற்கு இயன்ற வெப்பம் மிக்குடைய சிறுகுடிலைக் குறித்தது. முல்லை நிலமானது இயல்புத் தன்மையில் வளமுடையதாக காட்சிப் படுத்தப்பட்டு ஞாயிற்றின் வெப்ப மிகுதியால் முல்லைநிலம் தன் இயல்பினை இழந்து பாலை நிலமாக மாற்றம் கொண்டது. முல்லை நிலத்தின் மக்களாகிய ஆயர், ஆய்ச்சியர் நிலத்தின் மாறுபாட்டால், வறட்சி மிகுந்த பாலை நிலத்தில் வாழும் மக்களான எயினர், எயிற்றியர் என்று நிலவளங்களுக்கேற்ப மக்களும் மாறுபாடு அடைதலை நல்லூர் நத்தத்தனார் தெளிவாக விளக்கியுள்ளார்.

***"நீர் நுங்கின் கண்வலிப்பக்***
***கானவேம்பின் காய்திரங்கக்***
***கயங்களியுங் கோடையாயினும்***
***ஏலா வெண்பொன் போகுறு காலை"*** ***(புறம்.389: 1-4)***

எனும் அடிகளில், கோடையின் கொடுமையினை, நீரை உடைய பனநுங்கின் கண் நீரின்றி வற்ற காட்டிலுள்ள வேம்பினுடைய காய்கள் முற்றாதே உலர, ஆழமான நீர்நிலை வற்றி களிமயமாதற்குரிய கோடைக்காலமாயினும் பொருந்தா வண்ணம் வெள்ளிக் கோள் மற்றைக் கோள்களோடு போர் செய்யும் காலம் என்று கோடைகாலத்தின் வெம்மையைப் பாடலில் பிரதிபலித்துள்ளார். கோடையில் வளமான நிலப்பகுதிகள் தம் நிலைதிரிந்து மாற்றம் கொள்வதால் பாலை நிலமெனக் கொண்டனர். இவ்வாறு ஏற்பட்ட வறட்சியினால் மக்கள் வாழ்வதற்குத் தகுதியற்ற நிலமாகவே பாலை நிலம் சங்க இலக்கியத்தில் பதிவாகியுள்ளது. இதிலிருந்து வெப்பத்தினால் சங்ககாலத்தில் உயிரினங்கள் சந்தித்த பேரிடர்களைத் தெளிவாக உணரமுடிகிறது.

## காட்டுத்தீ பேரிடர்

காய்ந்த மரங்களும், செடிகளும் அதிக வேகத்தில் உராய்வதாலும், எரிமலை வெடிப்பு, பாறைகள் விழுவதினால் ஏற்படும் தீப்பொறியினாலும் காட்டுத்தீ ஏற்படுகிறது. கோடைக்காலம் மற்றும் அதிக வெப்ப மிகுதியான காலங்களில் காட்டுத்தீயானது உண்டாகின்றது. காட்டுத்தீ பற்றிய குறிப்பினை,

***"............................................ ஒலிதலை***
***அலங்குகழை நரலத் தாக்கி விலங்கெழுந்து***
***கடுவளி உருத்திய கொடுவிடு கூஎரி***
***விடர்முகை அடுக்கம் பாய்தலின் உடனியைந்து***
***அமைக்கண் விடுநொடி கணக்கலை அகற்றும்"*** ***(அகம்.47: 3-7)***

என்ற அகப்பாடலில், சூறைக் காற்றானது தழைத்து வளர்ந்து அசைந்தாடும் மூங்கிலை ஒலியுண்டாகும்படித் தாக்கி வெப்பமுறச் செய்தமையால் தீயானது கொழுந்துவிட்டு எரிந்தது. வெடிப்பையுடைய குகைகளைக் கொண்ட மலைப்பக்கங்களில் பரவியது. மிக்க தீயில் மூங்கிலின் அணுக்கள் வெடித்தமையால் எழுந்த ஒலி, கூட்டமான கலைமான்களைத் துரத்தியது என்று புலவர் இயல்பு நவிற்சியில் கற்பனையை ஏற்றிக் கூறினாலும் சூறைக் காற்றினால் மூங்கிலில் காட்டுத் தீ பரவி அக்காட்டினையே அழித்தது என்பது வெளிப்படையாகின்றது. மூங்கில் காற்றில் தீ பரவுதல் பற்றி,

"குறிஞ்சி வாழ் மக்கள் கடுமையான புயற்காற்று வீசுங்கால் மூங்கிற்கழிகள் ஒன்றோடொன்று கடுமையாக உராய்த்துக் கொள்ளும் போது, தீப்பொறிகள் எழக்கண்டு, இரண்டு மரத்துண்டுகளை ஒன்றோடொன்று தேய்ப்பதன் மூலம் நெருப்பை உண்டாக்கலாம் என்பதைக் கண்டு கொண்டனர்."[24] என்று அ.மார்க்ஸ் விளக்குகின்றார். காட்டுத்தீயினால் ஏற்பட்ட பேரழிவு குறித்தும் காட்டுத் தீ உருவாகும் விதம் குறித்தும் நன்னனை பெருங்கௌசிகனார் பாடிய பாடலில்,

***'முளிகழை யிழைந்த காடுபடு தீயின்'*** ***(மலை.248)***

உலர்ந்த மூங்கில் தம்மில் உராய்ந்ததால் காடெங்கும் தீ பிறந்தது என்பதன் மூலம் காட்டுத் தீ பரவும் தன்மைப் பற்றி, காய்ந்த மூங்கில் ஒன்றுடன் ஒன்று உராய்வதால் தீ உண்டாகும் அது மிகப்பெரிய தீயாகி காடு முழுவதும் பரவி அங்கு வாழும் தாவரங்கள், விலங்குகளுக்குப் பேரழிவினை ஏற்படுத்தும் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டுள்ளது. மேலும்,

***"ஒலிகழை பிசைந்த ஞெலிசொரி யொண்பொறி***
***படுஞெமல் புதையப் பொத்தி நெடுநிலை***
***முளிபுல் மீமிசை வளிசுழற் றுறாஅக்***
***காடுகவர் பொருந்தீ யோடுவயின் ஓடலின்***
***அதர்கெடுத் தலரிய சாத்தொ டொரங்கு"*** ***(அகம்.39: 6-10)***

என்ற அகப்பாடலில், தழைத்த மூங்கில் ஒன்றோடொன்று உராய்வதால் அம்மூங்கில் சொரியும் ஒளி பொருந்திய தீப்பொறி மிகுதியான சருகுகள் மறையும்படி மூண்டெழுந்தது. செங்குத்தாய் நிற்கும் உலர்ந்த புல் மீது காற்றுச் சுழன்றடித்துப் பரவச் செய்யக் காட்டைத் தன் கையகப்படுத்தி எரியும் பெரிய தீயானது, காற்று வீசும் இடமெல்லாம் சென்று பரவியதால் அந்தச் சுரவழிச் சென்ற வாணிகச் சாத்தர் அவ்வழியினைத் தவறவிட்டு அலறி ஓடினர். காட்டுத்தீயினால் காட்டில் உள்ள இயற்கை வளங்களான மரங்கள் மற்றும் பல்வேறு உயிரினங்கள் பேரழிவைச் சந்தித்தன. மேலும், காட்டுத்தீயினால் மனிதர்களும் பேரழிவிற்கு உட்பட்டதை சங்கப் புலவர் இங்கு குறிப்பிட்டுள்ளார். மேலும்,

*"மரம்படு சிறுதீப் போல*
*அணங்கா யினடான் பிறந்த வூர்க்கே"* (புறம்.349: 6-7)

எனும் பாடலடியிலும், மரங்கள் செறிந்த காட்டகத்தே தோன்றிய சிறிய தீப்பொறியானது தான் தோன்றிய காட்டினையே அழிக்கும் தன்மை கொண்ட காட்டுத்தீயாக மாற்றம் கொண்டு அங்குள்ள தாவர, விலங்கினங்களுக்குப் பேரழிவினை ஏற்படுத்தியுள்ளது. இவ்வாறு சங்ககாலத்தில் காட்டுத்தீயானது அக்காட்டுப்பகுதியில் உயிர் வாழும் தாவர விலங்கினங்கள் மட்டுமன்றி மனிதர்களுக்கும் பெருமளவில் பேரழிவினை ஏற்படுத்தி இருக்கலாம் என்பது தெளிவாகின்றது.

### காற்றினால் ஏற்படும் பேரிடர்

### காற்றின் தன்மை

இயல்புநிலையில் காற்றின் தன்மை என்பது உயிரினங்களுக்குப் பல்வேறு நிலைகளில் வளத்தையளிப்பதாக உள்ளது. உயிர்கள் நிலைப்பெற்று வாழ்வதற்கு உயிர்க்காற்றான பிராணவாயு (ஆக்ஸிஜன்), கார்பன்-டை-ஆக்ஸைடு போன்ற வாயுப்பொருட்களை வழங்குகின்றது. மற்ற பூதங்களுடன் இணைந்து செயல்பட்டு உயிரிகளின் வாழ்வாதாரத்திற்கு அடிப்படையாக விளங்குகின்றது.

*"திண்கா ழேற்ற வியலிரு விலோதந்*
*தெண்கடற் றிரையி னசைவளி புடைப்ப"* (மதுரை. 449-450)

என்று, திண்ணிய கொடிக்கம்பங்களில் கட்டப்பட்டுள்ள, அகன்ற பெரிய கொடிகளை அசைகின்ற காற்று, தெளிந்த கடல் அலைகள் எழுந்து வீசுவது போல அடித்தது என்று காற்று, கடலலைப் போன்று வீசும் என்று காற்றின் இயல்புத் தன்மை கூறப்படுகின்றது.

### காற்றின் நிலை மாறுதலால் ஏற்படும் பேரழிவு

இயல்பு நிலையில் உள்ள காற்றானது தன்னிலைத் திரியும்போது உயிரினங்களுக்கு அழிவினை ஏற்படுத்துகின்றது. மலையின் முழைஞ்சுப் பகுதிகள் நிறைந்த சூறாவளிக் காற்றினை முகந்து கொள்வதால் காற்று மிகுந்த கடல் போல ஆரவாரத்துடன் விளங்கும் என்பதின் மூலம், சூறைக்காற்று மலை முழைஞ்சுகளில் புகுந்து வெளிப்படும் போது வேகமும், வன்மையும் பெற்று வெளிப்படும். சூறைக்காற்றினை, கடலலையுடன் ஒப்பிட்டு நோக்கும் தன்மையில் கடலலையின் தன்மைபோல் பேரழிவினை ஏற்படுத்தும் என்பதனை,

*"கமஞ்சூழ் கோடை விடரக முகந்து*
*காலுறு கடலி னொலிக்குஞ் சும்மை"* (மதுரை. 308-309)

இப்பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன. இனிய கோலாகிய கரும்பு, தோடுகள் மூடி நிற்றலால் தண்டு திரண்டு முற்றின. அவை நடப்பட்ட பாத்தியில் குறையிடமின்றி நன்கு வளர்ச்சியுற்றன. வேற்படையுடன் திரண்டெழுந்த படை தோற்றுப் போயிற்று என்று கூறும் வண்ணம், காற்று மிகுதியாக வீசுதலால் அவை சாய்ந்தன என்ற பதிவின் மூலம் காற்று தன் இயல்பிலிருந்து மீறும் பொழுது அது உயிரினங்களுக்குப் பேரழிவினை ஏற்படுத்தும் என்பதை,

> ***"வேலீண்டு தொகுதி யிரிவுற் றென்னக்***
> ***காலுறு துவைப்பிற் கவிழ்க்கனைத் திறைஞ்சிக்***
> ***குறையறை வாரா நிவப்பி னறையுற்று"*** ***(மலை. 116-118)***

இப்பாடல் பதிவின் மூலம் உணரலாம். காற்றினால் மரங்களுக்கு ஏற்பட்ட பேரழிவு குறித்து,

> ***"வளிவாங்கு சினைய மாமரம் வேர்கீண்டு***
> ***உயர்ந்துழி யுள்ளன பயம்பிடைப் பரப்பி"*** ***(பரி.7: 14-15)***

எனும் அடிகளில் பதிவுசெய்யப்பட்டுள்ளது. காற்றின் மிகுதியால் அலைக்கப்பட்டு முறிந்த கிளைகளையுடைய பெரிய மரங்களை வேருடன் பறித்துத் தள்ளி உருட்டிக் கொண்டு, மேட்டில் உள்ளவற்றைப் பள்ளத்தில் கொண்டு வந்து பரப்பியது. இதன்மூலம் காற்றின் நிலை மாறும் பொழுது, அது உயிரினங்களுக்குப் பேரழிவை ஏற்படுத்தும் என்பதை உணரமுடிகிறது.

## காற்று - சூறாவளி

இயல்பான காற்றின் தன்மையிலிருந்து மாறுபட்டு மிகுந்த வலிமையுடன் வீசும் காற்றினைச் 'சூறாவளி' என்ற பெயரில் தற்காலத்தில் வழங்கி வருகின்றனர். 'வளி' என்னும் சொல் இயல்பாக வீசும் காற்றையும், தென்றலையும் குறித்தது. தென்றலாக வீசும் போது இனிமையையும், மென்மையான, இதமான இன்பத்தையும் கொடுக்கக் கூடிய காற்றானது, புயலாக உருவெடுக்கும் போது பேரழிவினை ஏற்படுத்துகின்றது. மதுரைக்காஞ்சியில் கடலில் வீசும் சூறாவளியால் ஏற்படும் பாதிப்புகள் குறித்து,

> ***"பனைமீன் வழங்கும் விளைமேய் பரப்பின்***
> ***வீங்குபிணி நோன்கயிறு றரீஇ யிதைப்புடையூக்***
> ***கூம்புமுதல் முருங்க ஏற்றிக் காய்ந்துடன்***
> ***கடுங்காற் றெடுப்பக் கல்பொரு துரைஇ***
> ***நெடுஞ்சுழிப் பட்ட நாவாய் போல"*** ***(மதுரை. 375-379)***

எனும் அடிகளில் பனைமீன் என்ற வகை சார்ந்த மீன்கள் உலவும் கடற்பரப்பில் பெருங்காற்று வீசியது. மரக்கலங்களின் மேலே கட்டப் பெற்றிருந்த பாய்மரச் சீலைகள் கிழிந்து வீழ்ந்தன. காற்று நான்கு பக்கங்களிலும் பெருமளவில் வீசியதால் பாய்கள்

கட்டப் பெற்றிருந்த மரங்கள் கூட முறிந்து வீழ்ந்தன. நங்கூரங்கள் கயிற்றுடன் மோதிப் பெருஞ்சேதத்தை ஏற்படுத்தின. கடலில் சென்ற கலங்கள் அசைந்து ஆழிச் சுழியில் அகப்பட்டு அழிந்தொழிந்தது தெளிவாகின்றது. மேலும்,

***"கடுவளி தொகுப்ப வீண்டிய***
***வடுவா ழெக்கர் மணல்"*** *(புறம்.55: 20-21)*

என்ற வரிகளில் சூறாவளி என்பது ஓரிடத்தில் உள்ள பொருள்களை அப்படியே பெயர்த்து, மற்றொரு இடத்திற்குக் கொண்டு செல்லும் வலிமையுடையது. இங்கு 'கடுவளி' என்றதனால் சூறாவளி போன்ற கடுமையான காற்று வீசியதால் மணல் திட்டு உருவானது என்பது புலனாகும். இதனால் சங்ககாலத்தில் சூறாவளி அல்லது புயல் போன்ற கடுமையான காற்று வீசியது நிருபனமாகிறது. இவ்வாறு இயற்கை தன் இயல்பு மீறும் போது அதன் கொடுமை பெரும் துன்பத்தினையும், ஆபத்துகளையும் விளைவித்துப் பேரிடராக உருப்பெற்றதைச் சங்க இலக்கியத்தின் வழி உணரமுடிகின்றது.

## புழுதிப் புயலால் பேரிடர்

காற்றின் அதீதத் தன்மையினால் ஏற்படும் பாதிப்புகளுள் புழுதிப் புயலும் ஒன்றாகும். இப்புயலானது உருவாகும் இடத்தில் உள்ள அனைத்துப் பொருட்களையும் மேலெழும்பச் செய்து உயிரினங்களுக்குப் பேரிழப்பை ஏற்படுத்தும். அகநானூற்றில் வாடைக்காற்று கொண்டுவந்து குவித்த உயர்ந்த மேடுகளைக் கொண்ட பரந்த கடற்கரைப் பகுதியைப் பற்றி,

***"ஊதை ஈட்டிய உயர்மணல் அடைகரை"*** ***(அகம்.60: 9)***

மேற்கண்ட பாடலடியின் மூலம், காற்றானது பல்வேறு இடங்களில் இருந்து மண்ணைக் கொண்டு வந்து ஓரிடத்தில் சேர்த்துள்ளது என்பதன் மூலம் காற்றால் ஏற்பட்ட மண் அரிப்பினை அறியமுடிகிறது. மற்றொரு பாடலில், கடலலைகளால் தொகுக்கப்பட்ட மணலானது காற்றினால் அள்ளி வீசப்படுவதால் அப்பகுதியில் இருந்த பறவைக் கூட்டங்கள் அங்கு இருந்து வெளியேறிய காட்சியை,

***"நெடுநீர் தொகூடம் மணல் தண்கால்***
***மென்பறையாற் புள்இரியுந்து"*** *(புறம்.396: 5-6)*

எனும் புறநானூற்று அடிகளால் அறியலாம். மண்ணரிக்கப்பட்ட நிலையில் உள்ள நிலப்பகுதியில் காணப்படும் பரற்கற்களைத் தேர்ந்தெடுத்து உண்ணும் நிலையில், பாலைநிலத்தில் உள்ள புறாவும், அதன் பெடையும் இருந்த காட்சியானது,

*“பொறிவரிப் புறவின் செங்காற் சேவல்*
*சிறுபுன் பெடையொடு செட்புலம் போகி*
*அரிமணல் இயவிற் பரல்தேர்ந் துண்டு”* *(அகம்.271: 1-2)*

எனும் அகநானூற்று அடிகளில் காணமுடிகிறது. இவ்வாறு காற்றானது தன் இயல்பு மிறி புயலாக மாறும் போது மண்துகள்களை அரித்து நிலத்தைச் சீரழிப்பதுடன், புழுதிப் புயலாய் மாற்றம் கொண்டு வழியில் சேதம் விளைவிக்கும் தன்மை உடையதாக உள்ளது. பயிர்கள் முளைவிடும் தருணத்தில் அரிப்பு நிகழும் போது, அவை வேருடன் பெயர்க்கப்பட்டு முழுமையாய் பேரழிவுகளை ஏற்படுத்துகின்றன. இவ்வாறு காற்றானது சூறாவளி, புழுதிப்புயல் எனப் பல நிலைகளில் மாற்றம் கொண்டு உயிரினங்களுக்கு அழிவை ஏற்படுத்துகின்றன.

## இடியினால் பேரிடர்

பஞ்ச பூதங்களில் ஒன்றான வானத்தின் பகுதியிலிருந்து உருவாகும் இடியானது ஒருவகையில் மனித மற்றும் பிற உயிரினங்களுக்கு அழிவினை ஏற்படுத்துவதாக உள்ளது.

*“ஆர்ப்பெழு கடலினும் பெரிதவன் களிறே*
*கார்ப்பெய லுருமின் முழங்கலா னாவே”* *(புறம்.81: 1-2)*

இப்பாடலில் கடலின் ஆர்ப்பரிக்கும் தன்மையையும், கார்கால மழையின் பொழுது ஏற்படும் இடியின் தன்மையையும் ஒப்பிடப்படுகின்றது. கடல் இயல்பாக அலைமோதும் தன்மையுடையது. ஆர்ப்பரிக்கும் கடல் என்பது அதன் தன்மை மாறுபட்டு அலைகள் உயர்ந்தெழுந்து எழுச்சி உடையதாகக் காணப்படும். அதைப் போன்று கார்கால இடியானது எழுச்சி மிகுந்து காணப்படுகிறது. சோழன் திருமாவளவனும், பாண்டியன் பெருவழுதியும் இணைந்திருந்த போது,

*“இளைய தாயினும் கிளையரா வெரியும்*
*அருநரை யுருமின்”* *(புறம்.58: 6-7)*

என்ற பாடலில் காரிக்கண்ணனார் இடியின் தன்மைப் பற்றி குறிப்பிடுகின்றார். இடியானது சிறியனவாகிய பாம்பினைத் தாக்கும் தன்மையுடையது. மேலும், மரத்தின் மீது வீழும் தன்மையது. இதனால் இடியானது ஒரு வகையில் உயிரினங்களுக்குப் பேரிடர்களை ஏற்படுத்தும் தன்மையுடையது. வரலாற்றுக் காலங்களிலும் இடியால் தாக்கப்பட்டு பல்வேறு உயிரிழப்புகள் ஏற்பட்டுள்ளது. இக்காலங்களிலும் மழை ஏற்படும் பொழுது இடியினால் உயிரினங்களுக்கு இழப்பு நேரிடுகின்றது. மேலும்,

*“காரெதி ருருமி னுரறிக் கல்லென*
*ஆருயிர்க் கலமரு மாராக் கூற்றும்”* *(புறம்.361: 1-2)*

என்ற பாடலில், கார்கால மேகத்திடத்தே தோன்றும் இடிபோல முழங்கி 'கல்' என்ற ஆரவாரத்துடன் அரிய உயிர்களைக் கொள்ளுதற் பொருட்டுத் திரியும் தெவிட்டாத கூற்றம். இதில் கூற்றத்தின் இயல்பை விளக்குவதன் பொருட்டு, கார்கால மழையில் ஏற்படும் இடியின் தன்மை போன்று இருந்தது என்பதனால் இடியானது பல்வேறு உயிர்கள் அழிவதற்குக் காரணமாக அமையும் என்பதனை மேற்கண்ட பாடல்களின் மூலம் அறிய முடிகிறது.

## கோள்கள் நிலைதிரிவதால் ஏற்பட்ட பேரிடர்

இயற்கையில் அமைந்த கோள்களானது தன் இயல்பில் இருக்கும் பொழுது அனைத்து வளங்களையும் கொடுத்து, மக்கள் இன்பமான வாழ்வினை மேற்கொள்வதற்கு வழிவகுக்கின்றது. சில வேளைகளில் இக்கோள்களானது நிலை திரியும் பொழுது அல்லது தன்னை மாற்றத்திற்கு உட்படுத்தும் பொழுது பேரிடர்கள் உருவாகின்றன. ஆதலால் உயிரினங்களுக்கும், பிற வளங்களுக்கும் பேரழிவு ஏற்பட்டு இயல்பு வாழ்வு பாதிப்புக்குள்ளாகின்றது. இதனை,

***"மைம்மீன் புகையினுந் தூமந் தோன்றினும்***
***தென்றிசை மருங்கின் வெள்ளி யோடினும்"*** *(புறம்.117: 1-2)*

- சனிமீன் புகைத்தலாவது இயம், சிங்கம், மீனம் இவற்றோடு மாறுபடுதல்; இவற்றுள் சனி தனக்குப் பகை வீடாகிய சிங்கராசியில் புகின் உலகிற்குப் பெருந்தீங்கு விளையும்.
- தூமம் புகைக்கொடி என்றும் கூறப்படும்; தூமகேது என்பதும் இதுவே. இது வட்டம், சிலை, நுட்பம், தூமம் என்றும் மறைந்துறையும் கோட்கள் நான்கனுள் ஒன்று, தூமகேதுவின் தோற்றம் உலகிற்குப் பெருந்தீங்கு விளைவிக்கும்.
- தென்திசைக்கண் வெள்ளிமீன் சென்றால் மழை இராது (NCPIT V.273) என்று உரைவிளக்கம் தருகின்றனர்.

இதன் மூலம் இயல்பான சுழற்சியில் இயங்கும் கோள்கள் தன் இயல்பில் இருந்து மாறுபடும் பொழுது மக்கள் துன்பம் அடையும் படியானப் பேரழிவிற்கு ஆட்படுவர் என்பது குறிப்பால் உணர்த்தப்படுகிறது.

அகன்ற நிலவுலகம், மழையின்றி, மிக்க வெம்மையுற்று வாடினும் வானத்தே எரிமீன்கள் மிகுதியாகத் தோன்றினும் கோள்களாகிய விண்மீன்கள் புகைந்து தோன்றினும் நிலவுலகில் வாழும் உயிரினங்களுக்குத் தீமை ஏற்படுத்தும் என்பதை,

***"அகன்ஞாலம் பெரிது வெம்பினும்***
***மிகவானு ளெரிதோன்றினும்***
***குளமீனொடுந் தாட்புகையினும்***
***பெருஞ்செய் நெல்லின் கொக்குகிர் நிமிரல்***
***பசுங்கட் கருனைச் சூட்டொடு மாந்தி"*** *(புறம்.395: 33-37)*

என்ற பாடலின் வழி கோள்கள் நிலை திரிதலால் பேரழிவுகள் நிகழ்ந்திருக்கக்கூடும் என்பதை உணரமுடிகின்றது. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை,

"ஏரி, குளம், தாள் என்பன விண்மீன் வகை இவற்றின் தோற்றம் நாட்டிற்குக் கேடு தரும் என்பது பண்டையோர் கருத்து"[25] என்று விண்மீன்களின் தன்மையைப் பற்றி கூறியுள்ளார். சங்ககாலத்தில் கோள்களின் மூலம் இயற்கை சார்ந்த பேரழிவுகள் நிகழ்ந்திருக்கலாம் என்ற அனுமானத்தைம் சங்க இலக்கியப் பதிவுகளின் வழி தெளிவாகின்றது.

## தொகுப்புரை

- மனித முயற்சியின்றி தன்னிகழ்வில் தோற்றம் பெற்றவை அனைத்தும் ‘இயற்கை’ என்ற சொல்லால் பொருள் கொள்ளப்படுகிறது.
- இயற்கை என்பது தனித்த ஒன்றை மட்டும் குறிப்பதல்ல, பஞ்சபூதங்கள், மலைகள், ஆறுகள் போன்ற ஒட்டுமொத்த உயிர்த்தொகுதிகளின் தொகுப்பாகும்.
- இயற்கையானது பகைவரின் அழிவிலிருந்து காக்கும் பாதுகாவல் அரண்களாக அமைந்திருந்தன. அறிவியல் வளர்ச்சியுறாத அன்றைய காலகட்டத்தில் நிலங்களைப் பிரித்து எல்லைகளைக் கட்டமைத்து ஆட்சிசெய்வதற்கு இயற்கைத் துணைநின்றதை அறியமுடிகிறது.
- இயற்கை இயல்பான நிலையில் பல்வேறு வளங்களை மனித சமூகத்திற்கும் உயிரினங்களுக்கும் வழங்கியது. அவ்வியற்கையானது மாற்றத்திற்குட்பட்டு அடுத்தகட்ட வளர்ச்சிநிலையினை அடையும் பொழுது பல்வேறு வகைகளில் பேரிடகள் ஏற்பட்டதைச் சங்க இலக்கியங்கள் பதிவுசெய்துள்ளன.
- நிலமகள் தன் இயல்புநிலையில் மன்னர்கள் ஆட்சி செய்வதற்கும், மக்கள் உயிர் வாழ்வதற்குத் தேவையான பயிர்களையும் விளைவித்து வளமளித்தது. தன் இயல்புநிலை மாறும் பொழுது நிலநடுக்கம் போன்றவற்றால் உயிரினங்களுக்குப் பேரழிவுகளை ஏற்படுத்தியுள்ளது.
- மழையானது உலக உயிர்கள் மகிழ்வுடன் வாழ இன்றியமையாதது. இயல்புத் தன்மையில் மழை பல்வேறு வளங்களை அளித்தது. அதன் தன்மை மாற்றம் கொள்ளும் நிலையில் புயல், வெள்ளம் போன்றவை ஏற்பட்டது. இப்பேரழிவால் மனிதர்கள் மட்டுமல்லாது தாவரங்கள், விலங்குகள் போன்றவையும் பாதிக்கப்பட்டதைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.
- கடல் உலகப் படைப்பில் பெரும்பகுதியைத் தன்னகத்தேக் கொண்டது. அத்தகைய கடல் பெரும் வளத்தை மனிதர்களுக்கும் உயிரினங்களுக்கும் வழங்கிய நிலையில் அதன் மாறுபாட்டுத் தன்மையால் (சுனாமி) ஆழிப்பேரலைகளைத் தோற்றுவித்துள்ளன. குமாரிக்கண்ட அழிவும், தமிழ்ச் சங்க அழிவும் இதற்குச் சான்றாக அமைகின்றது.
- சூரியனை மையமிட்டே உலகம் நிலைப்பெற்று இயங்கி வருகிறது. சூரியன் தன் இயல்பில் மாறுபடும் நிலையில் கடும்வெப்பம், வறட்சி போன்றவை ஏற்பட்டது. மேலும் வளமான பகுதிகளான முல்லை, குறிஞ்சி, மருதம் போன்றவை இயல்புநிலை திரிந்து மக்களுக்கும் பிற உயிரினங்களுக்கும் அதீத வெப்பத்தினால் பேரழிவினை ஏற்படுத்தியது.

- வளமான காடுகளில் ஏற்படும் தீயானது இயல்புநிலைத் திரிந்து காட்டுத்தீயாக உருவெடுத்தது. இதனால் அக்காடுகளில் வாழும் விலங்கினங்களும் தாவரங்களும் அப்பகுதியில் வாழ்வாதாரம் தேடும் மனிதர்களும் பேரிடர்களைச் சந்தித்தனர் என்பது புலப்படுகின்றது.
- மனித வாழ்வின் முதன்மையானது உயிர்வளியான காற்று. தென்றலாய் வீசி மனம் கொள்வதை மட்டுமல்லாது புயலாய், சூறாவளியாய் மாற்றம் பெற்று உயிரினங்களுக்கு ஏற்படுத்தியப் பேரழிவுகளையும் சங்க இலக்கியங்கள் பதிவுசெய்துள்ளன.
- கோள்கள் இயல்புநிலையில் வளங்களை அளித்திருப்பினும் அதன் மாறுபாட்டால் மழையின்மை, வறட்சி போன்ற பேரழிவுகளை ஏற்படுத்தியுள்ளன என்பதை சங்கப் பாடல்கள் வழி புலப்படுகின்றது.

## சான்றெண் விளக்கம்


1. தனிநாயக அடிகள், நில அமைப்பும் தமிழ்க் கவிதையும். ப. 16
2. தமிழக வரலாறும், பண்பாடும், சென்னை பல்கலைக்கழகம். பக். 45-46
3. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, புறநானூறு (பகுதி-1). ப. 313
4. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, புறநானூறு (பகுதி-2). ப. 103
5. தமிழக வரலாறும் பண்பாடும், சென்னை பல்கலைக்கழகம். ப. 46
6. தனிநாயக அடிகள், நில அமைப்பும் தமிழ்க் கவிதையும் ப. 2
7. தேவ. பேரின்பன், தமிழகத்தின் பொருளாதார வரலாறு. ப. 14
8. க.ப. அறவாணன், படைப்பு + படைப்பாளி= இலக்கியம். ப. 44
9. சுற்றுச்சூழல்கல்வி, தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம். ப. 12
10. வெ. பெருமாள்சாமி, சங்ககாலத் தமிழகத்தின் சமூக நிலை, மார்க்சிய நோக்கில் சங்க இலக்கிய ஆய்வு. ப. 12
11. கே. முத்தையா, தமிழ் இலக்கியங்கள் கூறும் தத்துவப் போராட்டங்கள். ப. 15
12. கு.வெ. பாலசுப்பிரமணியன், தொல்காப்பியத்தில் வீரநிலைக்கால எச்சங்கள். ப. 76
13. முனைவர் க. காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும். ப. 10
14. மேலது. ப. 11
15. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, புறநானூறு (பகுதி-1). ப. 125
16. நா. வானமாமலை, தமிழ் பண்பாடும் தத்துவமும். ப. 65
17. தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்களில் காணப்படும் மேலாண்மைச் சிந்தனைகள். பக். 145-146.
18. ஆ.தனஞ்செயன், சங்க இலக்கியமும் பண்பாட்டுச் சூழலும். ப. 127
19. வி.ஆனந்தகுமார், முதல் தமிழகம் (குமரிக் கண்டம்). ப. 38
20. மேலது. 39
21. பெ. மாதையன் தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும். ப. 181
22. தனிநாயக அடிகள், நில அமைப்பும் தமிழ்க் கவிதையும். ப. 85
23. நச்சினார்க்கினியர், பத்துப்பாட்டு உரை. ப. 72
24. அ. மார்க்ஸ், ஆரியருக்கு முற்பட்ட தமிழ் பண்பாடு. ப. 18
25. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, புறநானூறு (தொகுதி-2). ப. 447

## இயல் - 3

# மனித ஆளுகையும் பேரிடரும்

மனிதன் தோற்றம் பெற்ற காலம் முதல் இன்று வரை பல்வேறு நிலைகளில் போராட்டத்தின் அடியொற்றியே தன் வாழ்வின் இருப்பை நிலைப்படுத்தியுள்ளான். தனி மனிதனாக இருந்து நாடோடி வாழ்வினை மேற்கொண்ட மனிதன் பரிணாம வளர்ச்சியின் காரணமாகக் கூடி வாழும் இனக்குழு வாழ்வினை மேற்கொண்டான். இனக்குழுவின் வீரமும் கொடையும் தன்னேரில்லாத் தலைவனைச் சார்ந்து வாழும் தனியுடைமை எனும் கருத்துருவாக்கத்தை ஏற்படுத்தியது. இதனால் பெண்ணை முதன்மையாகக் கொண்ட சமூகம் வலியிழந்து ஆணை முதன்மையாகக் கொண்ட தலைமைத்துவம் தோற்றம் பெறுவதற்கு வழிவகுத்தது.

முடியாட்சி மேலோங்கிய சங்ககாலத்தில் தங்களின் அரசுரிமையைத் தற்காத்துக் கொள்ளவும், தம் படை வலிமையினைக் கொண்டு அவ்வரசைப் பெருக்கிக் கொள்ளுதல் பொருட்டும் மன்னர்களிடையே போர்கள் நிகழ்ந்தன. மகட்கொடை வேண்டியும் வஞ்சினம் கூறியும் அப்போரின் முடிவை அடுத்த நிலைக்குக் கொண்டு சென்றனர். மண் காரணமாகவும் பெண் காரணமாகவும் நிகழ்ந்தப் போர்கள், 'போர் அறம்', 'வீரமரணம்' என்ற கருத்தாக்கம் உருப்பெற வழிவகுத்தது. வெற்றி பெற்ற மன்னர்கள் தோல்வியடைந்தப் பகை நாட்டு மன்னர்களின் வயல்வெளிகளுக்கும் நீர்நிலைகளுக்கும் காவல் அரண்களுக்கும் அழிவை ஏற்படுத்தினர். மேலும், தன் வாழ்வியலுக்கு தேவையான பொருட்களுக்கு இயற்கையைச் சார்ந்து வாழும் நிலையில் இயற்கைக்கும் அழிவை ஏற்படுத்தினர். இவ்வாறு மனிதர்களின் ஆளுகைத் தன்மையில் ஏற்பட்ட பேரிடர்கள் என்பது,

- ❖ போர் நிகழ்ந்ததினால் உயிரிழப்பு ஏற்படல்.
- ❖ பகை நாட்டினைத் தீயிட்டு அழித்து, கழுதை ஏர்கொண்டு வயல்களைச் சீர்குலைத்து வளங்களை அழித்தல்.
- ❖ போர்களின் போது விலங்குகள் மற்றும் வளங்கள் பேரழிவிற்கு ஆட்படுதல்.
- ❖ நாட்டின் செல்வமாகக் கருதப்படுகின்ற கால்நடைகளைப் பகைவர் நாட்டில் இருந்து கவர்ந்ததினால் வாழ்வாதாரம் முற்றிலும் பாதிக்கப்பட்டுப் பேரழிவிற்கு ஆட்படுதல்.
- ❖ இயற்கை வளங்கள் அழிப்பால் உயிரினங்களுக்கு ஏற்பட்ட பேரிடர்.

என்ற நிலைகளில் சங்க இலக்கியத்தை முன்வைத்து ஆய்வதாக இவ்வியல் அமைகின்றது.

### பொதுவுடைமையும் இனக்குழு வாழ்க்கையும்

சங்க இலக்கியம் இனக்குழுவாழ்வின் எச்சத்தையும் தனியுடைமையின் அதிகாரப் போக்கையும் பிரதிபலிப்பதாக உள்ளது. வேட்டையாடி உணவைத் தேடும் நாடோடி வாழ்வினை மேற்கொண்ட மனித சமூகத்தில், அனைத்தும் பொதுவுடைமையாகக் கருதப்பட்டது. வேட்டையாடிக் கிடைத்தப் பொருட்களைப் பொதுமையில் வைத்து பகிர்ந்தளிக்கப்பட்டது. தேவைக்கு மட்டுமே உணவுத் தேடல் நிகழ்த்தப்பட்டதால் இங்கு, சேமிப்பு என்பதற்கு அவசியம் ஏற்படவில்லை. நிலப்பகிர்வு என்பது தேவையற்ற ஒன்றாகக் கருதப்பட்டது. அனைத்தும் அனைவருக்கும் என்ற சமூக ஒருமைப்பாடு அம்மக்களின் வாழ்வில் நிலைபெற்றிருந்தது.

இனக்குழு என்பது மனிதக் கூட்டத்தினை விளக்குவதாக உள்ளது. மனிதன் தன்னைச் சார்ந்த மக்களுடன் குழுவாக வாழ முற்பட்டான். இக்குழுக்களுக்கென அடையாளக் குறிகளாகக் காவல் மரங்களையும் குறியீடுகளையும் ஏற்படுத்திக் கொண்டான். இனக்குழுவில் உணவுப்பகிர்வு என்பது முதன்மையாகக் கருதப்பட்டது.

***"கானவன் எய்த முளவுமான் கொழுங்குறை***
***தேம்கமழ் கதுப்பின் கொடிச்சி மகிழ்ந்துகொடு***
***காந்தள்அம் சிறுகுடிப் பகுக்கும்"*** ***(நற்.85: 8-10)***

இப்பாடலில், மலைப்பக்கத்தில் கானவன் வேட்டையாடிய போது அவனது அம்பெய்தி முள்ளம்பன்றி வீழ்ந்தது. அவன் கொடுத்த அப்பன்றியின் கொழுத்த தசையைத் தேன்மணம் வீசும் கூந்தலுடைய அவன் மனையாள் மகிழ்ந்து ஏற்றாள். காந்தள் மணம் மிகுந்திருக்கும் அவள் வாழும் சிறுகுடியில் உள்ள அனைவர்க்கும் பன்றியின் இறைச்சியைப் பகிர்ந்து கொடுத்தாள். இங்கு வேட்டையாடுதலும் உணவுப் பகிர்தலும் தாய்மைச் சமூகத்தின் எச்சமாக வெளிப்படுகின்றது. இனக்குழுவில் பெண்ணே முதன்மையாகக் கருதப்பட்டாள். ஆண் வேட்டையாடிப் பொருள் தேடும் கருவியாகத் தன்னை வெளிப்படுத்தியதை அறியமுடிகிறது.

இனக்குழு வாழ்வில் 'பொதுமைப்படுத்தல்' என்பது உணவுப் பகிர்தலிலும் வெளிப்படுத்தப்பட்டது. தமக்குக் கிடைத்தப் பொருட்களைத் தானே தனித்து உண்ணாது தனக்குப் பின்வருபவர்களுக்கு விட்டுச் செல்லுதலை,

***"புலிதொலைத் துண்ட பெருங்களிற்று ஒழிஊன்***
***கலிகெழு மறவர் காழ்க்கோத் தொழிந்ததை***
***ஞெலிகோற் சிறுதீ மாட்டி ஒலிதிரைக்***
***கடல்விளை அமிழ்தின் கணம்சால் உமணர்***
***சுனைகொள் தீநீர்ச் சோற்று லைக் கூட்டும்"*** ***(அகம்.169: 3-7)***

என்ற பாடலில் புலியானது கொன்று உண்டு கைவிட்டுப்போன பெரிய யானையினது ஊனை, ஆறலைக்கும் வீரர்கள் தம் கோலிற் கோத்துக் கொண்டு செல்வர். எஞ்சிய ஊனை, ஒலிக்கும் ஒலி பொருந்திய கடலில் விளையும் உப்பினைக் கொண்டு வரும் உமணர் கூட்டம் தீக்கடை கோலால் உண்டாக்கிய சிறுதீயில் வாட்டி, சுனையினின்றும் கொண்டு வந்த நீர் ஊற்றிய உலையிற் போட்டு ஒன்றுகூடி ஊன்சோறு ஆக்குவர். இனக்குழுவாழ்வில் தனக்குத் தேவையானதை மட்டும் பயன்படுத்தி பகுத்துண்டு வாழ்ந்தனர். கா. சுப்பிரமணியன் உணவுப் பகிர்தலைப் பற்றி,

"கொடிய விலங்குகளைத் தாக்க, பெரிய கூட்டமாகச் சென்றனர். வேட்டை உணவைப் பாதுகாத்து வைக்க முடியாததால், உபரியைப் பகிர்ந்து கொண்டனர். புராதன இனக்குழு இரத்த உறவுமுறை கொண்டதாகும். ஒவ்வொருவரும் யாவருக்குமாகவும், யாவரும் ஒவ்வொருவருக்குமாகவும் என்பது அக்கால வழக்கமாகும். ஒவ்வொன்றும் பொதுவாகப் பகிர்ந்து கொள்வதாக அமைந்தது"[1] என்று குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு தோற்றம் பெற்ற இனக்குழுக்களில் வீரம் பொருந்திய வேட்டுவனை அவ்வினக் குழுவிற்குத் தலைவனாகக் கட்டமைத்துக் கொண்டனர். இனக்குழுத் தலைவர்களும் பொதுமைத்துவத்தைக் கருத்தில் கொண்டு பகுத்துண்டு வாழ்ந்ததை,

***"உண்டாயிற் பதங்கொடுத்***
***தில்லாயி னுடனுண்ணும்***
***இல்லோ ரொக்கற் றலைவன்"*** ***(புறம்.95: 6-8)***

இப்பாடலானது, ஔவையார், அதியமானாகிய இனக்குழுத் தலைவன் பொருட்டு தொண்டைமானிடம் தூது சென்ற போது பாடியது. சங்க இனக்குழு வாழ்வில் தனியுடைமை என்பது இல்லாது பொதுவுடைமைப் பேணப்பட்டது. அத்தகு காலத்தில் செல்வம் உண்டானால் மற்றவருக்கு உணவைக் கொடுத்தும், இல்லாத நிலை ஏற்படுமாயின் இருக்கும் உணவினைப் பகிர்ந்துண்ணும் உயரிய மாண்பினர் என்று கூறப்பட்டுள்ளது. சங்க இனக்குழு வாழ்க்கையின் பகிர்ந்துண்ணும் இன்ப வாழ்வினை இவ்வரிகள் உறுதிப்படுத்துவதாக அமைந்துள்ளது. இவையனைத்தும் குறிஞ்சித் திணையளவில் மட்டுமே அடையாளம் காணமுடிகின்றது.

## இனக்குழு மக்களின் ஏழ்மை வாழ்வு

இனக்குழுச் சமூகத்திலும் கால்நடைச் சமூகமாகிய உடைமைச் சமூகம் தோற்றம் பெற்ற முல்லை நிலத்திலும் வேட்டையாடுதல் கால்நடைகளை மேய்த்தல் மட்டுமே தொழிலாக அமையவில்லை. வளம் குன்றியப் பகுதியான அந்நிலங்களில் தினை, வரகு

போன்றவற்றையும் விளைவித்தனர். இவர்கள் விளைவித்த உணவுப் பொருட்களின் உற்பத்தியென்பது தேவைக்குப் போதுமானதாக இல்லை. இதன் காரணமாகப் பெரும்பகுதியினர் விளிம்பு நிலையில் உண்ண உணவின்றி வாழ்ந்த நிலையினைக் காணமுடிகின்றது. இதனை,

*"எருதுகா லூறாஅ திளைஞர் கொன்ற*
*சில்விளை வரகின் புல்லென் குப்பை*
*தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்*
*பசித்த பாண ருண்டுகடை தப்பலின்*
*ஒக்க லொற்கஞ் சொலியத் தன்னூர்ச்*
*சிறுபுல் லாளர் முகத்தளவ கூறி*
*வரகுகட னிரக்கு நெடுந்தகை"* *(புறம்.327: 1-7)*

என்ற பாடலின் மூலம் அறியலாம். அதாவது, எருதுகளைக் கொண்டு கடாவிடுதலின்றி இளையோர்களால் அடித்துத் தூற்றப்பட்ட சிலவாக விளைந்த வரகினுடைய புல்லெனத் தோன்றும் குவியல், தன்னை வளைத்துக் கொண்ட கடன்காரர்களுக்குக் கொடுக்கப்படும். அவ்வாறு கொடுத்த பின் எஞ்சிய வரகினைப் பசியால் நலிவுறும் பாணர்கள் பெற்று உண்டு தம் வாயிலின் நீங்கிச் செல்வர். அதனால் தன்னுடைய சுற்றத்தார்களுடைய வறுமையை ஒழிப்பதற்காகத் தன் ஊரில் உள்ள சிறிய புல்லியோர் முன் தான் முன்பு கடன் பெற்றுக் கொடுத்தமைக் கூறி வரகினைக் கடனாக இரந்து வேண்டுகின்ற பெருந்தகுதியை உடையவன் என்று கூறப்பட்டுள்ளது. குறைந்த அளவு விளைச்சலில் கடன்காரர்களுக்குக் கொடுத்து மீதியைப் பாணர்களின் பசிக்கு உணவளித்து சுற்றத்தாருக்குக் கடன் பெற்று உணவழிக்க முற்பட்ட நிலையைக் காணும் பொழுது, விளிம்பு நிலையில் இனக்குழு மக்கள் தன் வாழ்விற்காக மற்றவர்களைச் சார்ந்து வாழும் நிலைக் காணப்பட்டது. இத்தகு நிலையிலும் பகிர்ந்துண்ணும் பண்பு கொண்டவர்களாக இருந்துள்ளனர் என்பது தெளிவாகின்றது.

### ஆநிரைப் போரும் தனியுடைமையும்

இனக்குழுச் சமூகத்தின் அடுத்த நிலையில் உருப்பெற்றது கால்நடைச் சமூகம். வேட்டையில் கிடைத்த விலங்குகளை வளர்க்கும் நிலையில் ஆநிரை என்பது முதன்மையிடம் பெற்றது. ஆநிரைகளிடமிருந்து பெறப்பட்ட பால், மோர், வெண்ணெய், நெய் போன்ற பால் பொருட்கள் பொருளாதாரக் கட்டமைப்பை உயர்த்த வழிவகுத்தது. சங்க காலத்தில் ஆநிரை என்பது செல்வப் பெருக்கின் குறியீடாக அடையாளம் காணப்பட்டது. இந்த அடையாளத்தினை மையமிட்டு வெட்சி கரந்தை என ஆநிரைப் போர்கள் நிகழ்ந்தன. ஆநிரைகள் வளர்ப்பும் ஏறுதழுவுதலும் முதன்மையானது. முல்லை நிலத்தில், குறிஞ்சி நிலத்து வேட்டுவர்களுக்கும் முல்லை நிலத்து ஆயர்களுக்கும் இடையே தன் வாழ்வியலின் இருப்பை நிலைநிறுத்தும் அளவில் ஆநிரைப் போர்கள் நிகழ்ந்துள்ளன. ஆநிரைப் போர் பற்றி,

“முல்லை நிலப் பகுதியில் நடைபெற்ற இப்போர்கள் அரசர்களின் ஆதிக்க வெறி மற்றும் அதிகார போதையில் நிகழ்ந்த போர்கள் அல்ல. மன்னர்கள் மண்ணாசை காரணமாகத் தம் அதிகார எல்லையை விரிவுபடுத்துவதற்காக நடத்திய போர்களும் அல்ல. வெட்சி கரந்தைப் போர்கள் மக்களின் வாழ்க்கைக்கான போர்களாகவே இருந்தன”[2] என்ற வை. பெருமாள்சாமியின் கருத்து கவனிக்கத்தக்கது. முல்லை நிலத்தில் நிகழும் இவ்வாநிரைப் போரில் வெற்றி பெற்றவர்களுக்கு வெகுமதியாய் ஆநிரைகள் வழங்கப்பட்டன.

“ஒரு கூட்டுச் சமுதாயம் இன்னொரு கூட்டுச் சமுதாயத்தோடு மோதியது. அந்த இனத்தின் செல்வங்களான கால்நடைகளைக் கவர்ந்தது. கால்நடைகளை இழந்த இனம் போரிட்டு அவற்றை மீட்டது. எனவே ஆநிரை கவர்தலும், மீட்டலும் போர்க்குரிய தலையாய காரணங்களாயிற்று. போர்கள் ஆடவர் தொழிலாயிற்று. இளையரும் முதியோரும் போர் செய்தனர். போரின் கொள்ளைப் பொருட்களை அனைவரும் பகிர்ந்து கொண்டனர். தலைவன் போரில் பெற்ற நிரைகளைப் பிறர்க்குப் பகுத்துக் கொடுத்த செயலைப் பற்றி இலக்கியம் கூறுகிறது”[3] என்று ஆநிரைப் போரின் காரணங்களை கோ. கேசவன் விளக்குகிறார். இவ்வாறு ஆநிரைப் போரில் பெறப்பட்ட பொருட்கள் பொதுமையில் பாதீடு செய்யப்பட்ட முறைமையானது மாற்றம் பெற்று கள்குடிக்க வேண்டி, வீரன் ஒருவன் தானே ஆநிரைகளை விற்க முற்பட்ட நிலையினை,

***“முட்காற் காரை முதுபழ னேய்ப்பத்***
***தெறிப்ப விளைந்த தேங்காந் தாரம்***
***நிறுத்த வாயம் தலைச்சென் றுண்டு”*** ***(புறம்.258: 1-3)***

என்ற புறநானூற்றுப் பாடலில் பகைப்புலத்திலிருந்து தான் கொண்டு வந்த நிலத்தின் பசுக்கூட்டத்தை முட்களை உடைய காரைச் செடியின் முதிர்ந்த வடிவத்தை ஒத்த முற்ற விளைந்த இனிய காந்தாரம் என்னும் பெயருடைய மதுவிற்கு விலையாகத் தந்து உண்பதாகக் காட்டுகின்றது. இப்பாடலடியில் இனக்குழுவில் பொதுமைச் சார்புடன் அனைத்து மக்களும் கிடைத்த உணவினை, பொருட்களைப் பொது மன்றத்தில் ‘பாதீடு’ செய்து பகுத்துண்டு வாழ்ந்த மரபு, ‘வீரம்’ எனும் சொல்லினை முதன்மையாகக் கொண்டு தான் பெற்று வந்த ஆநிரைகளைத் தானே விற்றுக் கள்ளுண்டான். ஆநிரைப் போரின் அச்ச நிலையானது தனியுடைமையின் தோற்றத்திற்கு வழிவகுத்ததாக விளங்கிக் கொள்ளலாம். மேலும்,

***“பச்சூன் றின்று பைந்நிணம் பெருத்த***
***எச்சி லீரங்கை விற்புறந் திமிரிப்***
***புலம்புக் கனனே புல்லணற் காளை***
***ஒருமுறை யுண்ணா வளவைப் பெருநிரை***
***ஊர்ப்புற நிறையத் தருகுவன் யார்க்கும்***

*தொடுத ஓலோம்புமதி முதுகட் சாடி*
*ஆதரக் கழுமிய துகளன்*
*காய்தலு முண்டக் கள்வெய் யோனே"* *(புறம்.258: 4-11)*

என்ற பாடலில், பசிய ஊனைத் தின்று, நிணமிக்க எச்சிலாகிய ஈரம் பொருந்திய கையைத் தன் வில்லில் முருக்கேற்ப பூசுவான். புல்லிய தாடியை உடைய காளை போன்ற அவ்வீரன் பகைவரின் பசுக் கூட்டங்களைக் கவா்வதற்கு வேற்று நாட்டில் புகுந்துள்ளான். இங்குள்ள மறவா் ஒருமுறை மதுவை உண்பதற்கு முன்பே ஆநிரையை இவ்வூா்ப் புறம் நிற்கக் கொண்டு வருவான். அவ்வாறு வருங்கால் அவன் தாகமுடையவனாய் இருத்தலும் கூடும். எனவே அவன் தாகம் தணிக்க முதிா்ந்த மதுவை உடைய சாடியை யாரும் தொடாதவாறு பாதுகாத்து வைக்க அறிவுறுத்தப்பட்டது. ஆநிரைகளைக் கவா்ந்து வரும் ஆணின் வீரச்செயல்களையும், பொருள் சோ்ப்பதையும் அவன் தான் பெற்ற பொருளைத் தானே விற்கும் நிலையையும் அம்மக்கள் ஏற்றனா். தன்னேரில்லா வீரனுக்குக் கள்ளை பாதுகாத்தனா். இதனை,

*"கேளா மன்னா் கடிபுலம் புக்கு*
*நாளாஆ தந்து நறவுநொடை தொலைச்சி"* *(பெரும். 140-141)*

என்ற அடிகள், பகை மன்னரின் காவலையுடைய நிலத்தில் உள்ள பசுக்கூட்டங்களைக் கவா்ந்து வருவான். அப்பசுக்களைத் தான் குடித்த கள்ளுக்கு விலையாகக் கொடுப்பான். ஆநிரைகளைத் தானே தன் விருப்பத்திற்கு விற்கும் நிலையானது 'பொதுமை' எனும் மரபு மாற்றம் பெற்று 'தனியுடைமைச்' சமூகம் தோற்றம் கொள்வதற்குக் காரணமாக அமைந்திருக்கக்கூடும். தனியுடைமையின் தோற்றத்தினைப் பற்றி,

"உணவு சேகரித்தலும் வேட்டையாடுதலும் முதலில் உலகெங்கும் நிலவிற்று. ஆனால், அதைத் தொடா்ந்த மாறுதல்கள் அந்தந்தச் சூழ்நிலையைப் பொறுத்ததாயிற்று. சில இடங்களில் கால்நடைப் பொருளாதாரத்திற்கும், விவசாயப் பொருளாதாரத்திற்கும் மாறினா். இவற்றின் முன்னேற்றம் இனக்குழுமுறை சிதைய வழி செய்தன"[4] என்று கா. சுப்பிரமணியனின் கூற்று மேலும் இதனைத் தெளிவாக்குகின்றது. இதன் மூலம் இனக்குழுவில் பகுத்துண்டு வாழ்ந்த சமூகம், கால்நடைச் சமூகத்தில் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்ட ஆநிரைகளை முதன்மையாகக் கொண்டு ஆண் முதன்மைப்படுத்தப்பட்டான். தனியுடைமை தோற்றம் பெற்றது. சமூகத்தில் முன்னிலைப் பெற்ற பெண்கள் பின்னிலையடைந்தனா் என்பது புலப்படுகிறது.

## நெல் விளையாத குறிஞ்சி, முல்லை நிலம்

திணையமைப்பில் குறிஞ்சியும் முல்லையும் வளம் குன்றிய பகுதிகளாகவே இருந்துள்ளது. நெல் விளைவிப்பு என்பது இங்கு பெருவாரியாக நிகழவில்லை. இங்கு விளைவிக்கப்பட்ட தினை, சாமை போன்ற உணவுப் பயிர்களும் முறையான வேளாண்மையை அடியொட்டி நிகழவில்லை. இதனை,

> ***"கொழுங்கிழங்கு மிளிரக் கிண்டிக் கிளையோடு***
> ***கடுங்கட் கேழ லுழுத பூழி***
> ***நன்னாள் வருபத நோக்கிக் குறவர்***
> ***உழாஅது வித்திய பரூஉக்குரற் சிறுதினை"*** *(புறம்.168: 3-6)*

எனும் பாடலின் மூலம் அறியலாம். உழவுத்தொழில் பற்றிய அறிவினைப் பெறாத நிலையில், நிலத்தில் கிடக்கும் கிழங்குகளைத் திண்பதற்காகப் பன்றிகள் மண்ணைத் தோண்டிக் கிளறிப் புழுதியாக்கியிருப்பதைக் கண்டான். அவ்வாறு பன்றிகளால் கிளறிப் புழுதியாக்கப்பட்ட இடங்களில் கானவர் மழைக்காலத்தில் தினை விதைத்தனர். இதன் மூலம் வேளாண்மை என்னும் உற்பத்திமுறை அறியாதவர்களாய் குறிஞ்சி முல்லை நிலமக்கள் வாழ்ந்தனர். மேலும் அதற்கான நில அமைப்பும் இங்குக் காணப்படவில்லை. இந்நிலையை,

> ***"........புல்லெ னடைமுதற் புறவுசேர்ந் திருந்த***
> ***புன்புலச் சீறூர் நெல்விளை யாதே***
> ***வரகுந் தினையு முள்ளவை யெல்லாம்***
> ***இரவன் மாக்களுக் கீயத் தொலைந்தன"*** *(புறம்.328: 1-4)*

முல்லை நிலத்தைச் சார்ந்திருக்கும் புன்செய் நிலங்களுடைய சிறிய ஊர்களில் நெல்விளைவதில்லை. அந்நிலங்களில் விளைந்த வரகும் தினையுமாகிய உணவுப் பொருள்கள் யாவும், பசியால் வருந்தி வரும் இரவலர்க்கு வழங்கினமையால் தீர்ந்து இல்லாமல் போயின. முல்லை நிலத்தில் விளைந்த தினைகள் அவர்களின் அன்றாட வாழ்விற்குத் தேவையான உணவுத் தேவையினை நிறைவேற்றவில்லை.

இதன் காரணமாக குறிஞ்சி, முல்லை நிலத்தின் மக்கள் மருத வயலின் வளத்தை நோக்க ஆரம்பித்து வயல்கள், கரும்புகள், ஆற்றுவளம் என்று அனைத்து வளங்களையும் ஒருங்கே பெற்ற மருதநிலத்தை விரும்பினர். இப்பாடலிலும் 'நெல்விளையாதே' என்று கூறுவதன் காரணமாகக் குறிஞ்சி முல்லை நிலமக்கள் மருதநிலத்தின் வளத்தினையும் அதன் மூலம் அம்மக்களின் வளமான வாழ்வினையும் அறிந்திருந்ததை உணரமுடிகிறது.

## மருத நிலத்தின் வளமும் அரசுருவாக்கமும்

சங்ககாலச் சமுதாயம் நிலங்களையும், நிலத்திலிருந்து கிடைக்கும் வருவாயினையும் அடிப்படையாகக் கொண்டு இயங்கும் சமூகமாக மாறத்தலைப்பட்டது. வாழ்விற்கு ஆதாரமாக இயற்கை விளைப்பொருட்களுடன், வேளாண் விளைபொருட்களும் இருந்துள்ளன. இதனால் வேளாண் பொருளாதார உற்பத்திக்கு ஆதாரமான நீர்நிலைப் பெருக்கம் வலியுறுத்தப்பட்டுள்ளது. ஆற்று வளமிக்க பகுதிகளில் தோன்றும் நாகரிகத்தை முன்னெடுத்த மருதநிலத்தில் மட்டுமே நெல் போன்ற தானியங்கள் விளைந்தன. மருதநிலம் உற்பத்தி சக்திகளாகிய மனிதர்களை விடுத்து உற்பத்திக் கருவிகள் மூலம் உணவுப் பொருட்களை உற்பத்தி செய்ய முற்பட்டதன் விளைவாக வேளாண் சமூகம் தோற்றம் பெற்றது. ஆற்றுவளம் மிக்க மருத நிலத்தில் வளங்கள் செறிந்து காணப்பட்டது. இதனால் மக்கள் செல்வச் செழிப்புடன் காணப்பட்டனர். இதனை,

> ***“ஏர்பரந்தவய னீர்பரந்த செறுவின்***
> ***நென்மலிந்தமனைப் பொன்மலிந்தமறுகிற்***
> ***படுவண் டார்க்கும் பன்மலர்க் காவின்”*** *(புறம்.338: 1-3)*

ஏரினால் உழப்படும் பரந்த வயல்களில் நீர்நிரம்பி விளங்கும் பாத்திகளையும் நெல்லால் நிறைந்து விளங்கும் வீடுகளையுடைய செல்வம் நிறைந்த வீதிகளையும், ஒலிக்கும் வண்டுகள் ஆரவாரம் செய்கின்ற பல மலர்களாலான சோலைகளையும் உடைய மருதநிலமானது நிறைந்த வளங்களைக் கொண்டு விளங்கியது. மருத நிலத்தில் உற்பத்திக் கருவிகளால் ஏற்பட்ட உபரி உற்பத்தி பற்றி,

“மருத நிலம் ஒன்றில்தான் அதாவது ஆறும், ஆற்றைச் சார்ந்த இடங்களில்தான் நீரைத்தேக்கி பாசனம் செய்வதற்கு அதைப்பயன்படுத்தவும், மாடுகளைப் பழக்கி அவைகளைச் சாகுபடிக்குப் பயன்படுத்தவும் கற்றுக்கொண்ட பிறகுதான், ஒரு மனிதன் தன் தேவைக்கு மேலாக உற்பத்தி செய்யும் நிலைமை உருவாகிறது”[5] என்பதிலிருந்து உபரி உற்பத்தி என்பது மருத நிலத்தைச் செல்வச் செழிப்பு மிக்கதாக வெளிப்படுத்தியது என்பதை உணரமுடிகிறது.

> ***“அகனமர் வியன்முற்றத்துச்***
> ***சுடர்நுதல் மடநோக்கி***
> ***னேரிழை மகளி ருணங்குணாக் கவருங்***
> ***கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை***
> ***பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டு***
> ***முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்***
> ***விலங்குபகை யல்லது கலங்குபகை யறியாக்***
> ***கொழும்பல்குடிச் செழும்பாக்கத்துக்***
> ***குறும்பல்லூர் நெடுஞ்சோணாட்டு”*** *(பட். 20-28)*

என்ற பாடலில், செல்வம் நிறைந்த வீட்டின், அகன்ற முற்றத்தில், ஒளியையுடைய நெற்றியையும், மடமை பொருந்திய நோக்கத்தினையும், ஏற்ற அணிகலன்களையும் கொண்ட மகளிர், உலருகின்ற நெல்லைத் தின்னும் கோழியைத் தம் காதுகளில் அணிந்திருக்கும் பொன்னால் செய்த மகரக்குழையால் அடித்து விரட்டுவர். அக்குழை, பூண் அணிந்த காலினையுடைய தம் புதல்வர், குதிரை பூட்டாமல், கையால் உருட்டி விளையாடும், மூன்று சக்கரங்களைக் கொண்ட சிறுதேர் செல்லும் வழியில் முன்னர் வீழ்ந்து அதன் ஓட்டத்தைத் தடுத்து நிறுத்தும், இவ்வாறு குறுக்கிடும் பகையைத் தவிர, கலங்குதற்குக் காரணமாகிய பகை அறியாத, செல்வம் நிறைந்த குடிமக்கள் வாழ்கின்ற வளம் நிறைந்த ஊர்களைக் கொண்டது சோழநாடு. காவிரியின் நீர்வளம் மிகுதியால் அங்கு மக்களுக்குத் தேவையான அனைத்தும் தம் தேவைக்கு மேலாக கிடைத்தன. அதனை அறிந்த பிற மக்களுக்கு மருதநிலத்தின் மீது ஆசை ஏற்பட்டிருக்கலாம். அவ்வாசையே பிற்காலங்களில் போர் ஏற்பட்டதற்குக் காரணமாக அமைந்திருக்கக் கூடும் என்று எண்ண இடமளிக்கின்றது. இவ்வாறு மருதநிலத்தின் ஒருமை சார்ந்த வளம் குறிஞ்சி, முல்லை நிலமக்களின் கவனத்திற்கு உள்ளானது என்பதை விளங்கிக் கொள்ளலாம்.

***“பெருநீர் மேவற் றண்ணடை யெருமை***

***..............................................***

***மடல்வன் போந்தையி னிற்கு மோர்க்கே”*** ***(புறம்.297: 1-10)***

மருதநிலத்தில் மிக்க நீரின் கண் இருத்தலையே தண்ணிய நடையினை உடைய எருமைகள் விரும்பும். எருமைகளின் கரிய கொம்புகளைப் போன்று, நீண்ட முற்றிய பயிற்றின் நெற்றுக்கள் இருக்கும் பயறு நீக்கப்பட்ட சக்கையைப் படுக்கும் இடமாகக் கொண்டு காட்டுப் பசுக்கள் கிடக்கும் இத்தகைய சிற்றூர்களைப் (சிற்றூர் - முல்லை நில ஊர்) புரவாகக் கொள்வதை இப்பொழுது விரும்பவில்லை. கூர்மைமிக்க நெடுவேல் பாய்ந்த மார்பினை உடைய மடல் நிறைந்த வலிய பனைமரம் போல் இவ்வீரர்கள் உள்ளனர். நாரால் வடிக்கப்பட்டு பூக்களை இட்டு நன்றாக முதிரச் செய்தச் சாடியிலுள்ள கள்ளை வாழ்த்தி நீர்த்துறைகட்கு அண்மையிலுள்ள கோரைப் புதிர்களைப் பொருந்தி வாழும் கம்புள் என்னும் பறவை, முட்டைகளை ஈன்றெடுக்கும் மருதநிலத்து (தண்ணடை - மருத நில ஊர்) ஊர்களைப் பெறுவதே இவர்களுக்கு உரியது என்று பதிவு செய்யப்பட்டுள்ளது.

போரில் சிறப்பாகச் செயல்பட்ட வீரனுக்கு ஊர்ப்பொதுமையில் பரிசில் ‘பாதீடு’ எனும் பெயரில் பிரித்தளித்தனர். ஆநிரைகளைப் பாதிடாக வழங்கியநிலையானது பிற்காலத்தில் வெற்றியின் காரணமாக ஊர்களைக் கொடையாக வழங்கும் நிலை ஏற்பட்டது. அத்தகைய காலத்தில் வழங்கியதை வாங்கிச் செல்லும் மரபு, வேட்கையின் காரணமாக மருதநில ஊர்களை விரும்பத் தலைப்பட்டதன் காரணமாக மாற்றம் கொண்டது.

வீரர்களும் தங்களுடைய மறத்தின் தன்மைக்கேற்ப மருதநிலத்தை அடைய முன்வந்தனர். இதனால் போர்க்குக் காரணமான மருதநிலத்தின் வளம் அரசுருவாக்கம் ஏற்பட்டதற்கு முக்கியப் பங்காற்றியுள்ளது. இனக்குழுத் தலைவர்களுக்கிடையே அதுவரை வாழ்வியலுக்காக நிகழ்த்தப்பட்ட போர்கள் மருதநிலத்தில் உற்பத்தியின் காரணமாக மண்ணின் மீது ஏற்பட்ட வேட்கையினால் நிகழ்த்தப்பட்டது. இம்மண்ணாசையினால் 'பொதுசொல் பொறாது' உலகம் முழுவதையும் தன் குடை கீழ் கொணர வேட்கை உண்டாயிற்று.

மருத நிலத்தில் உற்பத்திக் கருவிகளின் காரணமாக உணவு என்பது தேவைக்கதிகமாக உற்பத்தி செய்யப்பட்டதால் உபரி உற்பத்தியைச் சேமிப்பதற்கும் அதை பாதுகாப்பதற்கும் முதன்மையிடமளித்தனர். இதனால் நிறுவனமாக்கப்பட்ட ஓர் அமைப்பு தேவைப்பட்டது; 'அரசுருவாக்கம்' ஏற்பட்டது. அரசுருவாக்கம் என்பது மருதநிலத்தின் அடிப்படையில் நிகழ்த்தப்பட்டதாகவே உள்வாங்கப்படுகிறது.

"குல அமைப்பின் பொதுவுடைமை மரபுகளுக்கு எதிராகத் தனி நபர்கள் புதிதாகச் சேர்த்த சொத்தைப் பாதுகாப்பதற்கு மட்டுமின்றி, முன்பு துச்சமாக மதிக்கப்பட்ட தனியுடைமையைப் புனிதப்படுத்துவதுடன் அப்படிப் புனிதப்படுத்துவதே மனித சமூகத்தின் மிக உயர்ந்த நோக்கமென்று பிரகடனப்படுத்துவதற்கு மட்டுமின்றி, சொத்து சேர்ப்பதற்கு இடையறாது வளர்ந்து கொண்டிருந்த புதிய வடிவங்களுக்கும் அதன் விளைவாக மேன்மேலும் செல்வத்தைப் பெருக்குவதற்கும் பொதுமக்களுடைய அங்கீகாரம் என்னும் முத்திரைப் பதிப்பதற்கும் உரிய ஒரு நிறுவனம் (ஸ்தாபனம்) இல்லை. சமூகத்தில் புதிதாக எழுந்து கொண்டிருந்த வர்க்கப் பிரிவினையை நிரந்தரமாக்குவது மட்டுமின்றி உடைமையில்லாத வர்க்கத்தை உடைமை வர்க்கம் சுரண்டுவதற்குள்ள உரிமையையும் முந்தியதன் மீது பிந்தியது செலுத்தும் ஆதிக்கத்தையும் நிரந்தரமாக்கக் கூடிய நிறுவனம் இல்லை. அந்த நிறுவனம் வந்து சேர்ந்தது. அரசு உருவாக்கப்பட்டது"[6] என்ற பி.ஏங்கல்ஸின் கருத்து ஆதிக்கத்தின் நிலைநிறுத்தமே அரசு உருவாக்கத்தின் மையம் என்பதை உறுதிப்படுத்துகின்றது.

சங்ககாலத்தில் ஆநிரைப் போரின் உச்சமானது இனக்குழு மரபிலிருந்து மன்னர் மரபுருவாக்கத்திற்கு வழிவகுத்தது. மண்ணின் காரணமாக ஏற்பட்ட பேராசையால் வீரமிக்க ஆண்மகன் பகைவரை அழிக்க முற்பட்டு போரினை அடுத்த நிலைக்கு எடுத்துச் சென்றான். இனக்குழு வாழ்வினை நினைத்து அதனை தடுக்க முன்வராது அவனது பேராசை நிறைவேற சங்க மக்களும், அரசுருவாக்கத்திற்குப் பேருதவி புரிந்தனர். இதனை,

> ***"நடுகற் கைதொழுது பரவு மொடியாது***
> ***விருந்தெதிர் பெறுகதில் யானே யென்னையும்***
> ***ஓ................................ வேந்தனொடு***
> ***நாடுதரு விழுப்பகை யெய்துக வெனவே"*** *(புறம்.306: 4-7)*

தவிராது யான் விருந்தினர்களை எதிர்கொள்ளப் பெறுவேன் ஆகுக என்றும், பகைவர்கள் தம் நாட்டை தருவதற்கு ஏதுவாகிய மண்ணாசையால் உண்டாகும் பெரிய போரும் அரசனோடு, என் கணவனும் பெறுவான் ஆகுக என்றும் நடுகல்லில் தெய்வமாய் நின்றவனைக் கைக்கூப்பி வணங்கித் துதிப்பாள். பொருளின் காரணமாகப் போர் புரிதலை மக்கள் ஏற்க முற்பட்டனர். ஆண்கள் மட்டுமல்லாது பெண்களும் போரினை விரும்பியுள்ளனர். தனியுடைமைத் தோற்றம் பெற்று சமூக மாற்றம் ஏற்படும் நிலையை,

"ஒரு சமுதாயம் மிகவேகமாக மாற்றமடையும் சூழலில் சிலரின் தனிமனிதப்பாணி சீர்குலையும் தன்மையைப் பெறலாம். இவ்வாறான காலங்களில் அவர்களின் தனிமனிதப்பாணி அதன் அமைப்பில் மாற்றத்தை ஏற்படுத்திக்கொண்டு புதிய நிலையை அடைய வேண்டும். அவ்வாறு மரபுப்பாணியை மாற்றிக்கொள்ளாமல் போனாலோ, மாற்ற இயலாநிலை ஏற்பட்டாலோ அச்சமயத்தில் அவர்கள் செயல்பட முடியாது. பழைய கூறுகளையும் புதிய மாற்றங்களையும் ஒன்றிணைத்துக் கொள்வார்களேயானால் மாறிய புதிய சூழலில் அவர்களால் நன்கு தகவமைத்துக் கொள்ள இயலும்"[7] என்ற பக்தவத்சல பாரதியின் விளக்கம் இங்கு கவனிக்கத்தக்கது. இத்தகு சமூக மாற்றத்தை நன்குணர்ந்த சங்க மன்னர்கள் தம்மை நிலைநிறுத்த போரில் ஈடுபட்டனர். தன் கணவன் போருக்குச் சென்று வெற்றிப் பெறுவதையும் அதற்காக இறந்த போர் வீரனின் நடுகல்லைச் சென்று வணங்கிய நிலையினையும் காணும் போது பெண்கள் ஆணின் வீரத்திற்கும், பெருமைக்கும் கொடுத்த மதிப்பினை உணர முடிகிறது. மேலும் 'போர்' என்பது அக்காலத்தில் இன்றியமையாத ஒரு மரபாக மாற்றமடைந்ததை அறியமுடிகிறது.

## மன்னனின் பேராசையால் ஏற்படும் பேரிடர்

சங்கச் சமூகமானது இனக்குழு வாழ்க்கை மாற்றம் பெற்று உடைமை வாழ்க்கைக்கு மாற்றம் கொண்ட போது அதிகாரத்தை உடையதாகக் காணப்பட்டது. இனக்குழுத் தலைவர்கள் மக்களிடையே பெற்றிருந்த மதிப்புகளை வேந்தர் சமூகம் ஏற்க மறுத்தது. மருதத்திணை அரசுருவாக்கத்தின் முதல் படி என்று கார்த்திகேசு சிவத்தம்பி, பெ.மாதையன், ராஜ்கௌதமன் போன்றோரின் கூற்றை இங்கு ஒப்புநோக்க முடிவேந்தர் தனக்குக் கீழ் ஆட்சி புரியும் வேளிர்களை அடக்கி தனக்குள் கொண்டுவரும் வேட்கை உடையவர்களாகக் காணப்பட்டனர். மூவேந்தர்கள் நிகழ்த்திய போரின் விளைவை,

"மருதநில நாகரிகம், பிற நிலங்களையும் தன் அதிகாரத்திற்குள் கொண்டு வரத் தொடங்கியது. மூவேந்தர்கள் நடத்திய போர்களின் விளைவாக சமூகத்தில் பேரழிவு நேர்ந்துள்ளது."[8] போர் என்பது பேரிடராக மாற்றம் கொண்டதை ஞானியின் கூற்று உறுதிப்படுத்துகின்றது. போரின் காரணமாக,

***"போகம் வேண்டிப் பொதுசொற் பொறாஅது"*** ***(புறம்.8: 2)***

உலகம் அனைவருக்கும் பொதுவானது என்ற சொல்லை முடிவேந்தர்கள் ஏற்கவில்லை.

***"வஞ்சி தானே முல்லையது புறனே***
***எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன்***
***அஞ்சுதகத் தலைச்சென்று அடல்குறித் தன்றே"*** ***(தொல்.புறம்: 6)***

என்பதின் மூலம் மண்ணாசையினால் பல்வேறு போர்கள் சங்க காலத்தில் நிகழ்த்தப்பட்டுள்ளன. அரசுருவாக்கத்தின் காரணமாக மண்ணின் மீது ஆசைப்பட்டு போர்புரிவதற்கெனத் தனியாக வஞ்சியெனும் திணையையே அக்காலகட்டத்தில் வாழ்ந்த புலவர்கள் புறத்திணையின் இலக்கணமாகக் கட்டமைத்துள்ளனர். திணை என்பதற்கு ஒழுக்கம் எனப்பொருள் கொள்ளும் நிலையில் அக்காலகட்டத்தில் நிகழ்த்தப்பட்ட போர்களை அறமாகக் கருதி அதனை வியந்து வாழ்த்த முற்பட்டனர் என்பது புலப்படுகிறது. மேலும்,

***"ஒருவனை யொருவ னடுதலும் தொலைதலும்***
***புதுவது தன்றிவ் வுலகத் தியற்கை"*** ***(புறம்.76: 1-2)***

இங்கு 'போர்' என்பது உலகத்தின் இயல்புத் தன்மை என்று விளக்கமளிக்கப்பட்டது. போர் என்பது அறமாக்கப்பட்ட நிலையில் அதனால் ஏற்படும் மனித உயிரிழப்புகளின் அடிப்படையில் பேரரசன், குறுமன்னன் என்ற கருத்தாக்கத்தை அவனது வீரத்தினையும் அதிகாரத்தையும் கொண்டு கட்டமைத்துள்ளனர். வெற்றி என்பதன் விளக்கத்தை,

"எதிரியை நோக்கி தனது படை வீரர்களை ஏவுகிறான் (படையை வழிநடத்திச் செல்பவன்). எதிரிகளின் சாவுக்குக் காரணமாகிறான். அவன் போரில் வெற்றி பெறுவானேயானால் போர்க்களத்தில் வீழ்ந்துகிடக்கும் அத்தனை உடல்களும் அவனுக்காகப் போரிட்டவர்கள், அவனை எதிர்த்துப் போரிட்டவர்கள் என அத்தனை உடல்களும் அவனுக்கே சொந்தம். வெற்றிக்குப் பின் வெற்றி என அவன் மேலே செல்கிறான். அதுதான் அவனது விருப்பம், அவன் கொண்டாடும் வெற்றி, அதைத்தான் சொல்கிறது. அவனுடைய வெற்றிகள் இறந்தவர்களின் எண்ணிக்கையால் அளவிடப்படுகிறது"[9] என்று எலியா கனெட்டி தெளிவாக்குகின்றார். வீரத்தைப் பாடுபொருளாக்கும் புலவர்களும் இறப்பின் (மனித, விலங்குகள்) அடிப்படையில் போற்றிப் புகழ்பாடினர். போர்களின் மூலம் ஏற்பட்ட பேரழிவு என்பது அம்மன்னர்களுக்கு மட்டுமல்லாது அவனைச் சார்ந்த குடிகளுக்கும் பிற உயிரினங்களுக்கும் அதிக அளவில் பாதிப்பை ஏற்படுத்தியுள்ளது என்பது நிருபனமாகிறது.

செல்வக்கடுங்கோ வாழியாதன், உலகத்தைக் காக்கும் அரசன் பலரால் வழிபட்டுப் போற்றப் பெறுபவன். பெருஞ்செல்வமாகிய இன்பத்தை நுகர விரும்பியவன். 'நிலவுலகம்

பொதுவாய் அமைந்தது' எனும் சொல் பொறாது 'தன்நாடு சிறிது' என்று விரிவுப்படுத்தும் ஊக்கமுடையவன் என்பதை,

*"வையம் காவலர் வழிமொழிந் தொழுக*
*போகம் வேண்டிப் பொதுசொற் பொறாஅ*
*திடஞ்சிறி தென்னும் ஊக்கந் துரப்ப"* *(புறம்.8: 1-3)*

இப்பாடலடிகள் தனிமனிதப் பேராசையால் உலகம் முழுவதும் தான் ஒருவனால் மட்டுமே ஆளப்படவேண்டும் என்ற வேட்கைக் கொண்டிருத்ததை வெளிப்படுத்துகிறது. இப்போரில் பிறமன்னர்களுடன் போரிட்டு, மனித மற்றும் பிற வளங்களை அழித்துப் பேரிடர் உருவாக்கி இருத்தலை உணர முடியும். மேலும்,

*"தண்டமிழ்ப் பொதுஎனப் பொறான்"* *(புறம்.51: 5)*
*"பொதுமொழி பிறர்க்கின்றி முழுதாளும் செல்வர்"* *(கலி.67: 1)*

என்ற பாடலடிகள் இதற்குச் சான்று பகர்கின்றன. மூவேழ் உலகத்தையும் ஒரு குடைக்கீழ் தான் ஆளுதல் வேண்டும் என்ற வேட்கைக் கொண்டு மன்னர்கள் செயல்பட்டுள்ளனர் என்பதை,

*"............... மூவே ழுலகமும்*
*ஒருநிழ லாக்கிய ஏமத்தை மாதே"* *(பரி.3: 75-76)*

எனும் பாடலடிகள் சுவர்க்கம், மண்ணுலகம், பாதாளம் என்ற மூவகைப்பட்ட இருபத்தோருலகத்தையும் ஒரு குடையில் கீழ் ஆளுதல் என்ற கடவுளின் செயல் காட்டும் சங்கப் பாடல், முன்பு சங்கச் சான்றோர் உலகம் முழுமையும் ஆளுதல் வேண்டும் என்ற ஆளுகை வேட்கை இருந்துள்ளதைப் புலப்படுத்துகின்றன. இதன் மூலம் சங்ககாலத்தில் ஆட்சி அதிகாரத்தின் மீது வேட்கைக் கொண்டு தம் புகழ் நிறுவ முற்பட்டனர் என்பதும் அதன் மூலம் மக்களுக்கும் விலங்கினங்களுக்கும் பேரழிவுகள் ஏற்பட்டுள்ளன என்பதும் தெளிவாகின்றது.

## ஆளுகை வேட்கையால் பகை நாட்டிற்கு ஏற்படும் பேரழிவு

முடிவேந்தர்கள் தன்னை வழிபடாத வேளிர்கள் மற்றும் குறுநில மன்னர்களின் நாட்டை தன் ஆளுகை வேட்கையினால் அழிவிற்கு உட்படுத்தும் நிலையை,

*"மின்னொளி யெறிப்பத் தம்மொளி மழுங்கி*
*விசுபிணி முழவின்"* *(பட். 292-293)*

எனும் அடிகளில் இறுக்கிக் கட்டப்படும் முரசுகளைக் கொண்ட தம்மை வழிபடாத மன்னர்கள் தங்கள் அரசுரிமையை இழந்தனர். தாங்கள் பெற்றிருந்த புகழையும் இழந்தனர் என்பதன் மூலம் சங்ககால தனியுடைமை, அரசுருவாக்கத்தினால் தன்னுடைய புகழை நிறுவுவதற்குத் தன்னைப் பிற மன்னர்கள் வணங்கி, தன் குடைக்கீழ் ஆட்சி செய்யப்

பணித்தனர். தம்மை எதிர்த்த மன்னர்களைப் போர் மேற்சென்று அழித்தனர். தம் புகழை நிறுவ ஆளுகை வேட்கையின் காரணமாக மண்ணாசையால் போர்புரிந்தனர் என்பது புலப்படுகிறது. மேலும்,

*"தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி*
*வெண்குடை நிழற்றிய வொருமை யோர்க்கும்*
*நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்*
*கடுமாப் பார்க்குங் கல்லா வொருவற்கும்"* *(புறம்.189: 1-4)*

இப்பாடலடிகள் மனிதனது அதிகாரம் மற்றும் ஆதிக்க வேட்கையை, 'தெளிந்த நீரால் சூழப்பட்ட உலகம் முழுவதையும் பிற வேந்தர்க்குப் பொதுவாதலின்றித் தமக்கே உரித்தாக ஆட்சிச் செய்து, வெண்கொற்றக் குடையால் நிழல் செய்த அரசன் என்று மனித ஆளுகை வேட்கையினைப் புலப்படுத்துகின்றது. இதைப் பின்வரும் பாடலடிகள்,

*"தண்வைப்பினா னாடுகுழீஇ*
*மண்மருங்கினான் மறுவின்றி*
*ஒருகுடையா னொன்றுகூறப்*
*பெரிதாண்டா பெருங்கேண்மை"* *(பொரு. 226-229)*

ஒன்றுடன் ஒன்று நெருங்கிப் பொருந்துமாறு குளிர்ந்த வாழ்நிலப் பகுதியையுடைய குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்று நான்கு கூறாகிய நாடுகள் ஒன்று திரண்டு கிடக்கும் தன் மண்ணுலகமாகிய சோழ நாட்டில் வீற்றிருந்து ஒரு குற்றமும் இன்றித் தன் ஒப்பற்ற வெண்குடைக்கீழ் நின்ற தன் ஆணை ஒன்றினையே உலகம் முழுவதும் கூறும் படியாக நெடும்பகுதியை அரசாண்டு வருபவன் என்று கரிகாலனை முடதாமக் கண்ணியார் பாடியுள்ளார். கரிகாலனுக்கும் சேரலாதனுக்கும் ஏற்பட்ட போரின் நிலையை,

"கரிகாலன் ஒளிபடைத்த போர்க்கருவிகளோடு போரிட்டபோது, பேரழிவுண்டான வெண்ணிப்பறந்தலைப் போர்க்களத்தில் சேரலாதன் முற்றிலும் நாணுமாறு முதுகிற் புண்பட்டான்"[10] என்ற க. கைலாசபதியின் கூற்றின் வழி ஆளுகை வேட்கையினால் போர்க்களத்தில் ஏற்படும் உயிரிழப்புகள் பேரழிவுகளாகவே கொள்ளப்படுகிறது. மன்னனின் ஆளுகை வேட்கையினால் மனிதர்கள் மற்றும் பிற விலங்கினங்களுக்குப் பேரழிவு ஏற்பட்டுள்ளதை மேற்குறிப்பிட்ட விளக்கங்களின் வழி அறியமுடிகின்றது.

### மகள் மறுத்ததினால் ஏற்பட்ட பேரிடர்

ஒரு மன்னன் மற்றொரு நாட்டு மன்னனின் மகளைப் போரின் காரணமாக ஏற்படும் பகை நீங்கவும், நில இணைப்பிற்காகவும் மணந்து கொள்ள எண்ணி பெண் கேட்க, அம்மன்னனோ தன் விருப்பமின்மையைத் தெரிவிக்கும் போது, இருமன்னர்களுக்குமிடையே

போர்கள் நிகழ்ந்துள்ளன. இருகுடும்பங்களின் பகையானது நாட்டிலுள்ள மக்களின் வாழ்வைச் சிதைத்துப் பேரழிவிற்கு ஆட்படுத்தியுள்ளது. “தங்களுடைய மதிப்பைச் சமூகத்தில் மென்மேலும் உயர்த்துவதற்காகவும் அமைதியான முறையிலான நில இணைப்பிற்காகவும் அரசர்கள் பழைய இனங்களிடையே பெண் கேட்டார்கள் என்றும் ஆனால் பழைய இனங்கள் அதை மறுத்தன என்றும் அறிகிறோம்”[11] என்பதிலிருந்து பழைய இனக்குழுக்கள் மகள் வேண்டலைப் புறக்கணித்துள்ளனர் என்பது புலப்படுகிறது. மேலும், பெண்ணை மணத்தலின் காரணமாக, ‘போர் நீங்கி நில இணைப்பு’ ஏற்பட்டதாகப் சங்கப்பாடல்களில் பதிவுகளும் காணப்படவில்லை. மாறாகப், போரினால், உயிரினங்களுக்குப் பேரழிவு ஏற்படுத்தப்பட்டதையே சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. பின்வரும் பாடலடிகள்,

***“விளங்கிழைப் பொலிந்த வேளா மெல்லியற்***

***.......................................................***

***மென்புல வைப்பினித் தண்பணை யூரே”*** *(புறம்.341: 10-19)*

என்று விலங்குகின்ற அணிகலன்களால் அழகுப் பெற்ற மனம் செய்யப்படாத மெல்லிய இயல்பினையும், சுணங்கினால் பொலிவு பெற்ற அழகிய முலையினையும் உடைய அப்பெண்ணுடன் நாளை மணம் செய்து கொள்ளுதல் கூடுவதாகுமோ? அன்றி அரிய போரில் பகைவரைக் கலக்கிய மறம் வெளிப்பட்டுத் தோன்றுவதற்குக் காரணமாகிய வலிமையோடு நீண்ட இலைத் தொழிலால் விளங்கும் வேலினால் மாறுபட்ட உடம்பினராய் கண்டு வராத சுவர்க்கம் புகுதல் ஆகுமா? எனக் கருதி வீரன் தன்னுடைய படைக் கருவியைப் போரில் செலுத்தினான். அப்போர் நடைபெறும் இடத்து யானைகள் புகுந்து தம்முள் மோதிக் கொள்வதால் கலங்கிய குளிர்ந்த நீர்நிலையைப் போல நீர் நிறைந்த மென்புலமாகிய குளிர்ச்சியான வயல்களையுடைய இவ்வூர் தன்னுடைய மிக்க அழகினை இழப்பதாகுமோ? என்று பாடியுள்ளார். இதன் மூலம் மகள் மறுத்தல் காரணமாக இருபெரு வேந்தர்களுக்கும் இடையே போர் நடைபெறுவது மட்டுமின்றி அந்நாட்டிலுள்ள நீர்நிலைகளும் அழிந்து வளமுள்ள அந்நாடு தம் அழகினை இழக்குமோ என்று போரின் மூலம் பேரழிவு ஏற்படவிருந்ததைப் பதிவு செய்துள்ளார். இதனைப் போன்றே,

***“களிறணைப்பக் கலங்கின காஅ***
***தேரோடத் துகள்கெழுமின தெருவு***
***மாமறுகலின் மயக்குற்றன வழி***
***கலங்கழாஅலிற் றுறை கலக்குற்றன***
***தெறன்மறவரி றைகூர்தலிற்***
***பொறைமலிந்து நிலனெளிய***
***வந்தோர் பலரே வம்ப வேந்தர்”*** *(புறம்.345: 1-7)*

களிறுகள் தங்கியிருத்தலால் சோலைகள், நிலை குலைந்தன. தேர்கள் ஓடியமையால் தெருக்களில் புழுதி படர்ந்தது குதிரைகள் சுழன்று திரிதலால் வழிகள் மாறி மயக்கத்தை உண்டாக்கின. குருதிக் கரைப்படிந்த படைக்கருவிகளைக் கழுவியமையால் நீர்த்துறைகள் மாசு அடைந்தன. பகைவரை அழித்தலில் வல்ல வீரர்கள் தங்கியிருத்தலால் பாரம் மிகுந்து, நிலன் தெளிவதாயிற்று. இவ்வாறு அந்நிலத்திற்குப் புதியராய்ப் பல வேந்தர்கள் வந்தனர் என்று பதிவு செய்யப்பட்டுள்ளது. மகள் மறுத்தலால் போர் நிகழ்ந்து அப்போரினால் வளங்கள் அழிந்ததை இப்பாடல் தெளிவாகக் கூறியுள்ளது. மற்றொரு பாடலிலும் மகள் மறுத்தலால் போர் நிகழ்ந்துள்ளதை,

> ***"குவளை யுண்க ணிவளைத் தாயே***
> ***ஈனா ளாயின ளாயி னானாது***
> ***நிழறொறு நெடுந்தேர் நிற்ப வயின்றொறும்***
> ***செந்நுதல் யானை பிணிப்ப***
> ***வருந்தின மன்னெம் பெருந்துறை மரனே"*** *(புறம்.348: 6-10)*

அழகு மிகுந்த, குவளைப் போன்ற மையுண்ட கண்களையுடைய பெண்ணினை அவளுடைய தாய் பெற்றெடுக்கவில்லை என்றால், நீங்காமல் நிழல் உள்ள இடங்கள் தோறும் தேர்களை நிற்குமாறு செய்து, வெளியிடங்கள் தோறும் குருதிப்பட்ட நெற்றியையுடைய யானைகளைக் கட்டுமாறு செய்து எம்முடைய பெரிய நீர்த்துறைகள் வருந்துவன அல்ல என்று, மகளை மறுத்த மன்னனின் நாட்டிற்குப் போர் புரிவதற்கு வீரன் வந்துள்ளதால் இந்நாட்டின் வளம் அழியும் என்பதைப் புலப்படுத்தியுள்ளார்.

செழிப்பான மரங்கொண்ட காட்டகத்தே தோன்றிய சிறிய தீப்பொறியைப் போல தான் பிறந்த ஊரினையே அழிக்கும் தெய்வமாயினாள் என்று மகள் மறுத்தலால் ஊர் அழியும் என்பதை,

> ***"மரம்படு சிறுதீப் போல***
> ***அணங்கா யினடான் பிறந்த வூர்க்கே"*** *(புறம்.349: 6-7)*

இப்பாடலில், காட்டுத்தீயானது விரைவில் பரவி அக்காட்டில் உள்ள வளங்கள் அனைத்தையும் அழிக்கும் தன்மையைப் போன்றே பகைவனால் மகள் மறுத்த மன்னனின் நாடு பேரழிவினைச் சந்திக்கும் என்பதை வெளிப்படுத்தியுள்ளார்.

மகட்கொடை மறுத்தலால் போர் ஏற்பட்ட நிகழ்வைக் குறித்து, ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை புறநானூற்றுப் பாடலில் "போர்கள் உண்டாதற்குரிய ஏதுக்களுள் மகட்கொடை வேண்டிய வேந்தர்க்கு மகள் மறுத்தலும், தன் வாயிலாகப் போருண்டாதலும் கண்டு வருந்திப் பலவகையாகப் பாடியிருக்கின்றார். 'ஒரு வேந்தன் பிறிதொருவன் மகளை மணஞ்செய்து கொடுக்குமாறு வேண்டுகின்றான். இவ்வேந்தன் வெஞ்சினமுடையவன்.

மகளைக் கொடுத்தற்குரிய தந்தை வெஞ்சினமுடைமை முதலிய ஏதுக்களைக் கருதி மகட்கொடை மறுக்கின்றான். அவனிடமிருக்கும் மறவர் தாமும் மறுத்தற்குத் துணையாகின்றனரேயன்றி நேர்தற்குத் துணையாகாதவராய் வாளாதிருக்கின்றனர். வேட்ட வேந்தன் சினங்கொண்டு போர்ப்பாசறை முழக்குகின்றான். ஊரிற் பெருங்கலக்கமுண்டாயிற்று. மகளைப் பெற்ற தாயும் தன் கணவற்கு வேண்டுவன கூறிப் போரைத் தடுக்குங் குறிப்பால் ஒன்றும் கூறாதவளாய் அவன் விரும்பியதையே தானும் விரும்புகின்றாள்"[12] என்று மகன்மறுத்தலால் நிகழ்ந்த போர்களுக்கு மக்களும் துணைபோனதை விளக்கியுள்ளார். மறக்குடி மகளை மணம் முடிக்க விரும்பி வந்த வேந்தனை, அம்மறக்குடி பெண்ணின் தந்தை அதற்கு உடன்படாமல் திருப்பி அனுப்பி விடுகின்றான். இதனால் அவ்வேந்தன் கொடிய சினத்தை உடையவனாக உள்ளான். இப்பெண்ணின் தந்தையும் செய்யத் தகுந்தனவற்றைச் செய்து முடித்தலாகிய கடமையைச் செய்யவில்லை. இதனைப் புலவர்,

***"வேட்ட வேந்தனும் வெஞ்சினத் தினனே***
***கடவன கழிப்பிவ டந்தையுஞ் செய்யான்"*** ***(புறம்.336: 1-2)***
***"முகைவனப் பேந்திய முற்றா விளமுலைத்***
***தகைவளர்த் தெடுத்த நகையொடு***
***பகைவளர்த் திருந்தவிப் பண்பி றாயே"*** ***(புறம்.336: 10-12)***

என்று அழகினையும், எழுச்சியுடைய முதிராத இளமை வாய்த்தவளையும் அழகொடு வளர்த்தெடுத்த மகிழ்ச்சியோடு வேந்தர்களின் பகையையும் வளரும் படியாகச் செய்த பண்பற்ற தாய், உறுதியாக அறமில்லாதவளேயாவாள் என்று மன்னனின் மனைவி பெற்ற மகளால் பேரிடர் ஏற்படும் என்று ஊர்மக்கள் அத்தாயை ஏசுவதைத் தெளிவுபடுத்தியுள்ளார். மகள் மறுத்தலால் நிகழ்ந்த பெரும் போரில், தூர்ந்து போன அகழியினையும் தளர்ந்த மதிலுறுப்பையும், இடிந்த மதிலையும் உடையதாக ஊர் மாறியது. இதை,

***"தூர்ந்த கிடங்கிற் சோர்ந்த ஞாயில்***
***சிதைந்த லிஞ்சிக் கதுவாய் மூதூர்"*** ***(புறம்.350:1-2)***

எனும் பாடலடிகளால் அறியலாம். பெண்ணுக்காக நிகழ்ந்த போர்களின் கொடுமையைக் குறித்து மகட்பாற் காஞ்சித்துறைப் பாடல்கள் விரிவாகப் பேசுகின்றன. போரின் வெற்றி பெருமைக்குரியதாகப் பேசப்பட்டது எனினும் மக்களுக்குப் பெரிதும் இன்னல்களை உண்டாக்கியது. மக்களின் துன்பங்களுக்கு மகளும், மகளைப் பெற்ற தாயுமே காரணமாக்கப்பட்டது. பெண்ணின் தாயை 'அறனிலார்', 'பண்பிலன்' என்று பழிக்கப்பட்ட நிலையைக் காணமுடிகிறது. மனித அதிகார வேட்கையினால் பெண் காரணமாக நிகழ்த்தப்பட்ட போரினால் பேரழிவுகள் ஏற்பட்டுள்ளது என்பதை மேற்கூறிய பாடல்கள் மற்றும் விளக்கங்களின் தெளிவாகின்றது.

**வஞ்சினம் கூறி போர் புரிதல்**

சங்ககாலத்தில் போர்கள் என்பது தவிர்க்க இயலாததாய் அமைந்தன. இருமன்னர்களுக்கு இடையே நிகழும் போர் அத்துடன் முடிவதில்லை, தோல்வியடைந்த மன்னன் தன் உறவினர்கள், தன் மறவர்கள் பலர் இறந்துக் கிடப்பதைக் கண்டு, மனம் வெதும்பி குறிப்பிட்ட கால இடைவெளியில் பகைக் கொண்டு மீண்டும், தன்னை, தன்னைச் சார்ந்தவர்களை வென்ற மன்னனிடம் போரிட்டு வெற்றி பெறுவேன், என்று சூளுரைக்கின்ற நிலையினைச் சங்ககாலப் பாடல்களில் காணமுடிகிறது. இவ்வாறு போரானது ஒருமுறை மட்டும் நிகழாமல் தொடரும் அவலமாக இருந்துள்ளது. பண்டு ஏற்பட்ட பேரழிவுகளின் வடுநீங்கும் முன்பே மீண்டும் போர்கள் நிகழ்த்தப்பட்டு பேரழிவுகளை ஏற்படுத்தினர். இதனை விளக்கும் வகையில்,

> ***"............................ தானே பாங்கற்***
>
> ***..............................................***
>
> ***கமழ்பூந் தும்பை நுதலசைத் தோனே"*** *(புறம்.283: 9-15)*

எனும் பாடலில், போரில் தன் தோழன் ஆரல்கால்களால் சூழப்பட்ட வண்டி உருளையின் குடம் போல மார்பிலே வேல் பாய்ந்து தங்க, அவன் உயிர் உடலைவிட்டு நீங்காத நிலையில் சினம் கொண்டு, திண்ணையில் விளையாடும் பாவை, செறிந்த மணலில் குவித்து வைத்து விளையாடும் மென்மையான தோள்களைக் கொண்ட பெண்கள் நன்கு பாதுகாக்க பசிய இலைகளைக் கொண்ட மணமிக்க தும்பைக் கண்ணியைத் தன் நெற்றியிலே கட்டினான். போரில் தன் நண்பன் இறந்துவிட்டதால் அவனது இறப்பிற்குக் காரணமான பகைவரைக் கொல்வதற்காகத் தும்பைச் சூடிப் போர்புரிய தயாராகிறான் ஒருவன் என்று பதிவுசெய்துள்ளார். இதன் மூலம் முன்பு ஏற்பட்ட போரிலே பல வீரர்கள், மற்றும் வளங்கள் அழிந்துள்ள நிலையில் வஞ்சினம் கூறிப் போர் புரிய முற்படுகின்றனர். அப்போரில் மீண்டும் வீரர்கள், யானைகள், குதிரைகள் அழிவினைச் சந்திப்பது மட்டுமின்றி தோல்வி பெற்ற மன்னனின் ஊர்களிலுள்ள நீர்நிலைகளும், இயற்கை வளங்களும் அழிவினைச் சந்திக்கும் என்பது புலப்படுகின்றது.

வஞ்சினம் கூறி போருக்குப் புறப்படுதல் என்பது பேரழிவிற்கு வழிகோலும் என்பதை மற்றொரு பாடலில், போரில் இறந்துபட்ட தன் உடன் பிறந்தவனுக்காகப் போரிட சூளுரைக்கின்ற நிலையை,

> ***"தோறா தோறா வென்றி தோலொடு***
> ***துறுகன் மறையினு முய்குவை போலாய்***
> ***நெருந லெல்லைநீ யெறிந்தோன் றம்பி***
> ***அகற்பெய் குன்றியிற் சுழலுங் கண்ணன்***
> ***பேரூ ரட்ட கள்ளிற்***
> ***கோரிற் கோயிற் றேருமா னின்னே"*** *(புறம்.300: 1-6)*

எனும் அடிகளில் கேடயத்தைக் கொடு, கொடு என்று கேட்கின்றாய். கேடயத்தோடு துறுகல்லாலே உன்னை மறைத்துக் கொள்வாயாயினும் பிழைப்பாயோ, நேற்றைப் பகலில் நின்னால் கொல்லப்பட்டவனுடைய தம்பி, அகலில் பெய்த குன்றிமணி உருளுதல் போலக், கோபத்தால் சுழலும் கண்ணை உடையவனாய் பெரிய ஊரின்கண் காய்ச்சியக் கள்ளைப் பெறும் பொருட்டு மனைக்குள் புகுந்து கள் முகக்கும் பாத்திரத்தைத் தேடுவது போல உன்னைத் தேடுகின்றான். தன் உடன்பிறந்தவனை அழித்த பகைவனை அழிக்கப் போருக்குப் புறப்பட்டு அவனைத் தேடுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. மேலும்,

*"................................. நெருநை*
*எம்முற் றப்பியோன் றம்பியொ டொராங்கு*
*நாளைச் செய்குவெ னமரெனக் கூறிப்*
*புன்வயி றருத்தலுஞ் செல்லான் பன்மான்*
*கடவு மென்ப பெரிதே யதுகேட்டு*
*வலம்படு முரசின் வெல்போர் வேந்தன்*
*இலங்கிரும் பாசறை நடுங்கின்*
*றிரண்டா காதவன் கூறிய தெனவே"* *(புறம்.304: 4-11)*

எனும் புறப்பாடலில், போரில் நேற்று என் தமையனைக் கொன்றவனுடைய தம்பியுடன் ஒரு படித்தாக, நாளை யானைப் போர் செய்து அவனைக் கொல்வேன் எனச் சூளுரைத்துத் தன்னுடைய புல்லிய வயிற்றினை உண்பித்தலையும் கருதாதவன், ஆராய்ந்த குதிரையை மிக விரைவாகச் செலுத்துவான். அச்செய்தியைக் கேட்டு, வெற்றியுண்டாதற்குக் காரணமாகிய முரசினையும், வெல்லும் போரினையும் உடைய வேந்தனின், விளங்குகின்ற பெரிய பாசறை, அவன் கூறிய சூளுரை பிழையாகாது என்று நடுங்குவதாயிற்று என்று அமைந்துள்ளது. இதன் மூலம் போரில் இறந்துபட்ட தன் உடன்பிறந்தவருக்காக வஞ்சினம் கூறிச் சென்று போர் புரிவதால், நாட்டில் வளங்கள் (விலங்கு, தாவரங்கள், நீர்நிலைகள்) அழிவு, வீரர்கள் அழிவு என பல்வேறு வகையான பேரழிவிற்குக் காரணமாக அமைகின்றது.

*"............................... தாவாது*
*வஞ்சின முடித்த வொன்றுமொழி மறவர்"* *(பதிற்.41: 17-18)*

என்ற மேற்கூறிய பாடலடிகளும் இதனை மெய்ப்பிக்கின்றன.

போரில் நாட்டின் வளங்கள், வீரர்கள், படைகள் போன்றவை அழிந்ததோடு மட்டுமல்லாமல் மன்னனையும் இழக்கின்ற நிலையைக் காணமுடிகின்றது. மக்களின் உயிராகக் கருதப்படும் மன்னன் இறப்பதால் அந்நாட்டு மக்கள் தம்மை வழி நடத்திச் செல்லவும்,

பகைவர்களிடமிருந்து தம்மை காத்துக் கொள்ளவும் இயலாத அவலநிலைக்குத் தள்ளப்பட்டு அகதிகளாகி விடுகின்ற நிலை சங்கப் பாடல்களில் காணமுடிகின்றது. மன்னனை இழந்த நாட்டின் அவல நிலையினை,

> ***"பொய்யா வெழினி பொருதுகளஞ் சேர***
> ***ஈன்றோ ணீத்த குழவி போலத்***
> ***தன்னமர் சுற்றத் தலைத்தலை யினையக்***
> ***கடும்பசி கலக்கிய விடும்பைகூர் நெஞ்சமொடு"*** *(புறம்.230: 6-9)*

என்ற பாடலில், அதியமான் எழினி பொருது போர்க்களத்தே வீழ்ந்தான். பெற்ற தாயால் கைவிடப்பட்ட உண்ணாத குழந்தையைப் போல அவனோடு பொருந்திய கிளைஞர் இடந்தோறும் வருந்தினர். உலகம் அவனை இழந்து பசி வருத்துகையினாலே மிக்க துன்பமுற்ற நெஞ்சத்தோடு வருந்திக் கிடந்தது. போரில் அழிவு ஏற்படும் போது அந்நாட்டு மன்னன் அழிவதல்லாது, அந்நாட்டு மக்கள் பல்வேறு வகையில் துன்புறுவர். எழினியின் அழிவால் அவனது நாட்டு மக்கள் வறுமை, பசியினால் துன்புற்றனர். போர் நடைபெறுகையில் அழிவு ஏற்பட்ட பின்னரும் அப்போரின் விளைவாக ஏற்படும் பாதிப்பினால், தொடர்ந்து பல உயிர்கள், வளங்கள் அழிந்து பேரிடர்கள் ஏற்பட்டுள்ளது என்பது தெளிவாகிறது.

### நாற்படை அழிவும் - வேந்தர் அழிவும் - பேரிடர்

பண்டைக் காலத்தில் நிகழ்த்தப்பட்ட போரில் படைப்பிரிவுகள் நியமிக்கப்பட்டன. யானை, குதிரை, தேர், மறவர் என நால்வகையாகப் படைப்பிரிவுகள் அமைத்தனர். அந்நால்வகைப் படைகள் பற்றி,

> ***"உளைப் பொலிந்த மா***
> ***இழைப் பொலிந்த களிறு***
> ***வம்பு பரந்த தேர்***
> ***அமர் கெதிர்த்த புகன் மறவரொடு"*** *(பதிற்.22: 17-20)*

என்ற பாடலில், தலையாட்டத்தால் பொலிவு பெற்ற குதிரைகள், நெற்றிப்பட்டம் முதலிய அணிகளாற் பொலிவு பெற்ற ஆண் யானைகள், தேர்ச்சீலைகள் பரந்து விளங்குகின்ற தேர்கள், போரை எதிர் நோக்கியிருந்த விருப்பத்தை உடைய வீரர்கள் என இந்நால்வகைப் படைகள் போரில் பங்கேற்றதை வரிசைப்படுத்தியுள்ளனர். இரு பெரும் வேந்தர்களின் ஆளுகை வேட்கையினால் போர்களில் மேற்கூறிய நால்வகைப் படைகளை ஈடுபடுத்தினர். போரின் முடிவில் அப்படைகளின் அழிவு பற்றி,

*“எனைப்பல் யானையு மம்பொடு துளங்கி*

*..........................................*

*..........................................*

*காமர் கிடக்கையவ ரகன்றலை நாடே”* *(புறம்.63: 1-15)*

இப்பாடலடிகள் எத்தனையோ பல யானைகளும் அம்பால் வருந்தி இனிமேல் செய்யும் போர்ச் செயல் ஏதுமில்லாமல் படையினர் இருப்பை அடைந்தன. வெற்றியால் புகழ் சிறந்த குதிரைகள் யாவும் வீரம் செறிந்த தம் மேலாட்களுடன் போர்க்களத்தே வீழ்ந்தன. தேரில் வந்த வீரர்கள் யாவரும் தம்முடைய கேடயத்தால் கண்களை மறைத்தபடி ஒருங்கு வீழ்ந்தனர். இறுகக் கட்டப்பட்டதும் வேலைப்பாடமைந்ததும், மயிர் நீக்காது போர்த்தப்பட்ட தோலாகிய பரப்பினையுடையதுமான முரசங்கள் தம்மைத்தாங்கி அடிப்பாரில்லாமல் இருந்தும் பயனில்லாது போயின. சந்தனம் பூசப்பெற்ற மார்பில் நெடிய வேல் பாய்ந்ததால் வேந்தர்களும் போரிட்டு அக்களத்தில் மடிந்தனர். அழகிய அத்தன்மை கொண்ட அவ்வேந்தர்தம் அகன்ற இடம் அமைந்த நாடுகள் இனி எத்தகைய துன்பம் அடையுமோ? என்று போர்க்களத்தின் கொடுமையையும் நால்வகைப் படையில், உயிரினங்கள் மற்றும் மனிதர்களின் அழிவையும் படம்பிடித்துக் காட்டுவதாக உள்ளது. இப்பாடலில் நால்வகைப்படையும் அழிந்து, பின்பு இருபெரும் வேந்தர்களும் அழிந்துவிட்டனர். இவ்விரு வேந்தர்களின் நாடு என்னவாகுமோ என்று அதன் அழிவைப் பாடியுள்ளார் பரணர். சங்ககாலத்தில் மனித வேட்கையின் காரணமாக மனிதன் மட்டும் அழிவதல்லாது யானை, குதிரை போன்ற விலங்கினங்களும் அழிந்துள்ளது என்பதை அறிய முடிகிறது. பேரிடர் என்பது பெருவாரியான மனித அழிவு என்பது மட்டுமின்றி மற்ற வளங்கள் மற்றும் விலங்கினங்கள் அழிவையும் குறிக்கும். மேற்கூறியவாறு பல்வேறு வளங்கள் அழிவினால் மிகப்பெரிய பேரிடர் எற்பட்டுள்ளது என்பது புலப்படுகின்றது. நாட்டில் உள்ள ஆண்கள் அழிவதால் அந்நிலத்தில் உள்ள பெண்களும் உடன் உயிர் வாழும் நிலை சங்ககாலத்தில் காணப்பட்டதால் அப்பெருநகரமே பேரழிவு நிலைக்கு ஆளானதை உய்த்துணர முடிகிறது.

போரில் உயிர் விடுதலையே சிறந்த அறமாக வீரர்கள் கருதினர். அவ்வாறு இயற்கையாக உயிர்விடின் அவர்தம் உடலை வாளால் பிளந்து அடக்கம் செய்தனர் என்பதை,

*“குழவி யிறப்பினும் ஊன்றடி பிறப்பினும்*

*ஆளன் றென்று வாளிற் றப்பார்”* *(புறம்.74: 1-3)*

எனும் அடிகளால் அறிய முடிகிறது. மறக்குல மகளிர் ஒருத்தி போரில் தன்மகன் வீழ்ந்துபட்டான் என்பதனை அறிந்து போர்க்களம் சென்று தன் மகனைத் தேடும் அவலநிலையைக் காட்சிப்படுத்துகையில்,

*“.......................... படுபிணம் பெயராச்*

*செங்களந் துழவுவோள்.......................”* *(புறம்.278: 6-7)*

என்று, போர்க்களத்தில் வீழ்ந்து கிடக்கும் வீரர்களின் பிணக்குவியலில் புரட்டிப் பார்த்துக் கொண்டே செங்குருதி படிந்த போர்க்களத்தில் தன் மகனைத் தேடிப், போரில் வாளால் பிளக்கப்பட்டு உயிர் துறந்த மகனைக் கண்ட அத்தாய் பெரிதும் உவந்த நிலையை,

*“செங்களம் துழவுவோள் சிதைந்து வேறாகிய*
*படுமகன் கிடக்கை காணூஉ*
*ஈன்ற ஞான்றினும் பெரிதுவந்தனளே”* *(புறம்.278: 7-9)*

என்று காட்சிப்படுத்துகின்றது. இதன் மூலம் மனிதனின் அதிகார வேட்கையினால் மனித இனம் அழிந்து வீழ்ந்து கிடப்பதைக் காணும் பொழுது சங்ககாலத்தில் மனிதர்களின் அதிகார வேட்கையினால் பேரழிவு ஏற்பட்டமையை உணரமுடிகிறது. மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகமென கருதப்பட்டச் சங்க காலத்தில் அம்மன்னர்களைத் தம் உயிரையும் பொருட்படுத்தாது போரில் இரந்துபடாமல் காத்தனர். இதனை,

*“மறப்புகழ் நிறைந்த மைந்தினோ னிவனும்*
*உறைப்புழி யோலை போல*
*மறைக்குவன் பெருமநிற் குறித்துவரு வேலே”* *(புறம்.290: 6-8)*

போர்க்களத்தில் பகைவரது வேலிலிருந்து மன்னனைக் காத்து அவ்வேலினைத் தன் மார்பில் ஏற்று உயிர் துறந்த மறவன் புகழ் பெரிதும் போற்றப்படுகிறது. இவ்வாறு மறவர்கள் போரில் இறந்த நிகழ்வானது அக்காலத்தில் பெருமையுடையதாக கருதப்பட்டது. மன்னனுக்காகத் தம்முயிரையும் பொருட்படுத்தாது உயிர்விட்ட நிலையைக் காணும் பொழுது, போரினால் ஏற்பட்ட உயிர்ச்சேதங்களையும், பேரழிவுகளையும் உய்த்துணர முடிகிறது. சங்ககாலத்தில் போர் என்பது இருமன்னர்களுக்கு இடையில் நடைபெற்றாலும் பல்வேறு வீரர்கள் மற்றும் விலங்குகள் இறந்துபட்டதற்கும் மன்னனின் ஆட்சி அதிகாரத்தின் வேட்கையினால் பேரழிவு ஏற்பட்டுள்ளதற்கும் மேற்கூறிய பாடலடிகள் சான்றாக அமைகின்றன.

## போருக்குப்பின் கற்புடை மகளிர்க்கு இழைக்கப்பட்ட கொடுமைகள்

சங்க மன்னராட்சியில் தோல்வியுற்ற மன்னனது மனைவியரின் நிலை மிகவும் துன்பந்தருவதாக இருந்தது. தோல்வியுற்ற மன்னனின் மனைவியரும் அந்நாட்டு மகளிரும் வென்ற மன்னன் நாட்டிற்கு அடிமைகளாகக் கொண்டு செல்லப்பட்டுள்ளனர். நன்னன் எனும் மன்னன் தன் பகைவரைப் போரில் கொன்று அவர்தம் உரிமை மகளிரைப் பற்றி வந்து அவர்தம் கூந்தலைக் கொய்து அதனைக் கயிறாகத் திரித்துப் பகைவரது யானைகளைப் பிணித்தான் என்பதை,

*“வேந்தர் ஓட்டிய ஏந்துவேல் நன்னன்*
*கூந்தல் முரற்சியின் கொடிதே”* *(நற்.270: 9-10)*

என்ற பாடலில், வரலாற்று நிகழ்வாகச் சங்க இலக்கியத்தில் பதிவுசெய்துள்ளனர். இதே போல் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனும் தன் பகைவனாகியப் பழையனுடைய உரிமை மகளிரது கூந்தலைக் கொய்து துன்புறுத்திய நிகழ்வினை,

*“பழையன் காக்குங் கருஞ்சினை வேம்பின்*
*முழாரை முழுமுத றுமியப் பண்ணி*
*வாலிழை கழிந்த நறும்பல் பெண்டிர்*
*பல்லிருங் கூந்தன் முரற்சியாற்*
*குஞ்சர வொழுகை பூட்டி”* *(பதிற்.பதி.5: 13-17)*

என்ற பதிற்றுப்பத்துப் பாடலில், பழையன் காத்து வந்ததும் கரிய கிளைகளை உடையதுமாகிய வேம்பினது முழவு போன்ற அடிமரத்தினை வெட்டினான். கணவன் இறந்தமையால் அவன் மனைவியராகிய நல்ல பல பெண்கள் தூய அணிகலனாகிய முத்தாரத்தை நீக்கினான். அப்பெண்டிரது பலவாகிய கூந்தலைக் கொண்டு திரிக்கப்பட்ட கயிற்றினால் யானைகளை வண்டியில் பூட்டினான் என்று பதிவாகியுள்ளது. அத்தோடு பகைவர் தேயத்திலிருந்து கொணரப் பெறும் மகளிரை அடிமைத் தொழிலுக்கும், பரத்தமை தொழிலுக்கும் ஈடுபடுத்திய அவலநிலையும் இருந்துள்ளது. இவ்வாறு உயர் குடியில் உள்ள பெண்களும் பிற பெண்களும் பல்வேறு இன்னல்களைப் போருக்குப் பின் சந்தித்துள்ளனர் என்பது புலனாகின்றது.

### போரினால் மகளிரும் உயிர் நீத்தல்

சங்ககாலத்தில், போரில் இறந்த கணவனைக் கண்டு மனைவி கணவனுடன் உயிர்விடும் நிலையைத் தொல்காப்பியர் காலத்திலேயே காணமுடிகிறது. இறந்த கணவனின் மார்பில் உள்ள வேலினாலே தன் உயிரை மாய்த்துக்கொள்ளும் மனைவி, கணவன் தலையோடு மார்பையும், முகத்தையும் சேர்த்து இறக்கின்ற நிலையையும், கணவனோடு பெரிய தீயில் புகுந்து உயிர் விட்ட நிலையினையும் கணவன் இறக்க உடன் உயிர்விட்ட தன்மையினையும் தொல்காப்பியம் தெளிவாக விளக்குகின்றது.

சங்கச் சமுதாயத்தில் போர் புரிதல் என்பது ‘அறம்’ எனக் கூறப்பட்டது. அத்தகு அறத்தன்மை மிகுந்த போரில் பகை மன்னர்கள் இருவரும் இறந்தனர். போர்க்களத்தில் நால்வகைப் படைகள், மன்னர்கள் மட்டுமல்லாது, அவர்தம் மனையுறை மகளிரும், உடன் உயிர் விட்டதை,

***"அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்***

***............................................***

***மார்பகம் பொருந்தி, யாங்கமைந் தனரே"*** *(புறம்.62: 7-15)*

வெண்கொற்றக் குடையும், முரசும் வீழ்ந்தன. பல நூறு எண்ணிக்கையுடன் வேறுவேறு மொழி பேசும் படைவீராகிய தொகுதியினர் இடமில்லாதபடி அம்மன்னர்களுடன் சேர்த்து அகன்ற பாசறை அங்கு வென்றவர் எவருமின்றி போர் உடனே முடிந்தது. வீரர்களின் பெண்டிர் உண்ணாது, நீராடாது கணவரின் மார்பினைச் சேர்ந்து உயிர்நீத்தாராய்க் களத்தில் கிடந்தனர் என்று காட்சிப்படுத்தப்பட்டுள்ளது. இப்பாடலில் இருவேந்தர்கள் தம் புகழை உலகறியச் செய்தல் மற்றும் நிலம் முழுவதும் ஆளும் வேட்கை என்ற காரணத்தினால், பேரிடரை ஏற்படுத்தியுள்ளனர். போரில் அவ்விருவர் மட்டும் அழியாது, பலநூறு வேறுமொழி பேசும் வீரரும் போரில் இறந்தனர். அவர்களின் மனைவியும் அப்போர்க் களத்திலே இறந்தனர். இவ்வழிவானது மிகப்பெரிய பேரழிவைக் குறிக்கும் தன்மையாகும். வீரர்களும், பெண்களும் இறந்து கிடப்பதால் போர்க்களத்தில் இடம் இல்லை என்று எண்ணுமளவில் போரினால் ஏற்பட்ட பேரழிவுக் காட்சியைத் தெளிவாகப் பதிவு செய்துள்ளார் கழாத்தலையார். மேலும்,

***"பாடுநர்க் கருகா வாஅ யண்டிரன்***
***கோடேந்து தல்குற் குறுந்தொடி மகளிரொடு***
***கால னென்னுங் கண்ணிலி யுய்ப்ப***
***மேலோ ருலக மெய்தினன்"*** *(புறம்.240: 3-6)*

என்ற பாடலில், பாடுநர்களுக்குக் குறைவின்றிக் கொடுக்கும் இயல்பினன் ஆய்அண்டிரன். அவனது உயர்ந்த அல்குலையும் சிறிய வளைகளையும் உடைய உரிமை மகளிருடன் கூற்றுவன் என்னும் குருடன் கொண்டு சென்றான் என்பதில் போரில் இறந்த தன் தலைவனுடன் மனைவியரும் உடனுயிர் துறந்தனர் என்பது தெளிவாகின்றது.

***"பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற***
***வள்ளித ழவிழ்ந்த தாமரை***
***நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே"*** *(புறம்.246: 13-15)*

எனும் பாடலிலும் பெருங்கோப்பெண்டு தன் தலைவன் பூதப்பாண்டியன் போரினால் இறந்த பிறகு உடன்கட்டை ஏறிய செய்தியையும் வரலாற்றுக் குறிப்பால் அறியமுடிகின்றது. கற்புடை மகளிர் போரில் இறந்த தம் கணவனை எண்ணி, தங்களை மாய்த்துக் கொள்கின்ற அவலநிலையினையும் சங்கப் பாடல்களில் காணமுடிகிறது. போர் என்பதில்

வீரர்கள் இறந்துபட அவர்களின் கற்புடைமகளிரும் உடனிறந்தனர் என்பதன் மூலம் போர் என்பதன் தொடர்ச்சியாக நிகழும் அழிவுகள் பெருவாரியான நிலையில் பேரழிவாக உருக்கொள்கின்றன என்பது தெளிவாகின்றது.

### பகை நாட்டினைத் தீயிட்டு அழித்தலால் பேரிடர்

போரிடுதலின் முடிவில் வெற்றி பெற்ற முடிவேந்தர்கள் பகைநாட்டிற்குத் தீயிட்டு அந்நாட்டிலுள்ள வளங்களை அழித்தனர். வளங்களை அழித்தலால் வறட்சி, பசி, பட்டினி போன்ற நோய்கள் உயிரினங்களைத் தொற்றியிருக்கலாம். இதனாலேயே பிற மன்னனை நோக்கி இரவலாகச் செல்லும் நிலை ஏற்பட்டிருக்கக் கூடும். பகைவர் நாட்டைக் கொள்ளை கொண்டு அவர்தம் மனைகளைப் பாழாக்கும் நிலையைக் கூறுவது 'மழபுலவஞ்சி' என்னும் துறையாகும். போரின் ஒருவகையான தீயிடுதல் என்பது வீர மரபின் இலக்கணமாகவே தொல்காப்பியமும் பறைசாற்றுகின்றது. இதனை உறுதிப்படுத்தும் விதமாக,

"சங்ககாலச் சமுதாயம் போருக்கும் போர்த்திறனால் பெறப்படும் புகழுக்கும் முன்னுரிமை அளித்த ஆண்மையச் சமுதாயம்"[13] என்ற கூற்றினை நோக்கும் பொழுது, சங்ககாலத்தில் பெருவாரியாக நாட்டை அழித்தல் என்பது புகழினை ஏற்படுத்தும் வீரத்தின் அடையாளத்தால் உருப்பெற்ற பேரிடர் என்பது வெளிப்படையாகவே அறிய முடிகிறது.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்கண்ணார் போரில் மன்னனால் அழிக்கப்பட்ட பகை மன்னரின் ஊர்கள் படர்ந்து எரிகின்ற நிறமுடைய புகையைக் காற்று சிதறி வீசச் செய்ய, தீயானது கொழுந்துவிட்டு எரிவதனால் அழிகின்ற இடங்களைக் கொண்டிருந்ததை,

***"கொடிவிடு குரூஉப்புகை பிசிரக் கால்பொர***
***அழர்கவர் மருங்கி னுருவறக் கெடுத்துத்"*** *(பதிற்.15: 6-7)*

என்ற பாடலில் பதிவுசெய்துள்ளார். அழகு பொருந்திய ஊரானது தீயினால் தன் அழகினையும், வனப்பினையும், வளங்களையும் இழந்து மனிதன் ஏற்படுத்திய பேரழிவு நிகழ்வினை இவ்வடிகள் நமக்கு உணர்த்துகின்றது. இதே போல் மற்றொரு பாடலிலும் தீயிட்டுக் கொளுத்தி ஊரின் வளங்களைப் பாழாக்கும் நிகழ்வினை,

***"எல்லையு மிரவும் மெண்ணாய் பகைவர்***
***ஊர்சுடு விளக்கத் தழுவிளிக் கம்பலைக்***
***கொள்ளை மேவலை"*** *(புறம்.7: 7-9)*

இப்பாடலடிகள் மனிதனால் ஏற்படும் பேரிடரை மையப்படுத்துகின்றன. வீரம் பொருந்திய கரிகாலன் பகலும் இரவும் என எண்ணாது பகைவரின் ஊரினைச் சுடும் தீயின் ஒளியில் தம் சுற்றத்தை அழைப்பதுடன் அழும் ஆரவாரம் மிகுந்த கொள்ளையை நீ விரும்பினாய்

என அமைந்துள்ளது. கரிகாலன் பகைவர் நாட்டின் மீது போரிட்டு வென்று, பிறகு அந்நாட்டைத் தீயிட்டு எரிப்பதால் அந்நாட்டில் அழியாது விளங்கும் வளங்களும், மக்களின் வாழ்வும் பெருமளவிற்கு பாதிப்புக்குள்ளாகியது. தனிமனிதனால் ஒரு நாட்டிற்கே பேரிடர் ஏற்பட்டுள்ளதை இப்பாடலின் மூலம் விளங்குகிறது.

சங்கச் சமூகத்தில் வளம் நிறைந்த இத்தகு நாட்டைக் கொள்ளையிட்டு அந்நாட்டையே தீயிட்டு அழித்து மக்களின் வாழ்வினைக் கேள்விக்குட்படுத்திப் பேரழிவு ஏற்படுத்தும் அவலநிலை அரங்கேறியுள்ளது. பகைநாட்டின் மன்னனைத் தோல்வியுறச் செய்து அந்நாட்டின் எல்லைகளை அடைந்து அங்குள்ள வளங்களைத் தீயிட்டு அழித்த நிகழ்வை,

***"வினைவயல் கவர்பூட்டி***
***மனைமரம் விறகு காகக்***
***..............................***
***செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரிற் றோன்ற"*** ***(புறம்.16: 4-9)***

என்ற பாடலில் கணமுடிகிறது. பெருநற்கிள்ளி பகைவரின் நாட்டில் உள்ள வயல்களைக் கொள்ளையிட்டு, வீடுகளை இடித்து வீட்டில் பொருந்திய மரங்களை விறகாகத் தீ மூட்டினான். யானைகள், காவலமைந்த நீர்நிலைகளைக் கலக்கின. நாட்டில் எரிகின்ற தீயின் தோற்றம், இயங்கும் சுடராகிய ஞாயிற்றின் சிவந்த கதிர் போலத் தோன்றும் என்று நகர் பாழ்பட்டதைக் கூறிப் பின்னர்,

***"பெருந்தண்பனை பாழாக***
***ஏம நன்னா டொள்ளெரி யூட்டினை***
***நாம நல்லமர் செய்ய***
***ஓராங்கு மலைந்தன பெருமநின் களிறே"*** ***(புறம்.16: 15-18)***

குளிர்ந்த தன்மைப் பொருந்திய மருதநிலம் பாழாகுமாறு காவலுடைய நல்ல நாட்டை ஒளியையுடைய தீயில் எரித்தாய். இவ்வாறு அச்சம் தரத்தக்க நல்ல போரைச் செய்தாய் என்று பாடியுள்ளார். 'மருதநிலம் பாழ்படுமாறு' என்று கூறுவதன் மூலம் பொதுமைச் சமூகம் மாற்றம் பெற்று தனியுடைமைச் சமூகத்தின் விளைபயனே இத்தகுப் பேரழிவு என்பது தெளிவாகின்றது.

## நீர் - நில வளங்களை அழித்தலால் பேரிடர்

சங்ககாலத்தில் போரில் பகைநாட்டின் இயற்கை வளங்களாகிய நீர்நிலைகளையும் வயல்வெளிகளையும் அழித்து பொருளாதார நிலையில் பேரழிவுகளை ஏற்படுத்தினர். பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியின் போர்த் திறமையைப் பாடும் நெட்டிமையார் அவரால் அழிக்கப்படும் பகைவரது நகரின் அழிவை,

*“கடுந் தேர்குழிந்த ஞெள்ள லாங்கண்*
*வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்*
*..........................................*
*காப்புடைய கயம்பாடினை”* *(புறம்.15: 1-10)*

இப்பாடலடிகளில் பாண்டியன் பகையரசனின் அகன்ற இடமுடைய மதில்களைத் தேர் விரைந்து செல்லத் தெருக்களில் வெண்மையான வாயுடைய கழுதையைப் பூட்டி பாழ் செய்தான். பகைவர் நாட்டில் பறவைகள் ஆரவாரிக்கும் புகழ் நிறைந்த விளைவயல் அங்கு செருக்குடைய குதிரைகளின் கவிந்த குளம்புகள் தாவுமாறு தேரைச் செலுத்தினான். பருத்த கழுத்தையும், பரந்த அடியையும் சினங்கொண்ட பார்வையையும், ஒளிப்பொருந்திய தந்தங்களையும் உடைய ஆண் யானைகள் பலவற்றைப் பகைவர் தம் காவல் நிறைந்த நீர்நிலைகளில் படியச் செய்து கலக்கினான் என்று பாடியுள்ளார். நாட்டிற்கு முதன்மை ஆதாரமாக விளங்கும் நிலம், நீர் இவையனைத்தையும் அழிப்பது என்பது மக்கள் வாழ்வதற்கான வாழ்வாதாரங்களை அழிவிற்கு உட்படுத்திப் பேரழிவினை ஏற்படுத்துவதாகும். மேலும்,

*“மாவாடியபுல நாஞ்சிலாடா*
*கடாஅஞ்சென்னிய கடுங்கண்யானை*
*இனம்பரந்தபுலம் வளம்பரப்பறியா*
*நின்படைஞர் சேர்ந்த மன்றங் கழுதை போகி”* *(பதிற்.25: 1-4)*

என்ற அடிகளில் போரில் குதிரைகள் சென்ற பகையரசருடைய வயல்கள் கலப்பைகள் உழ வேண்டாதனவாயின. யானைப்படையிலுள்ள மதத்தைத் தலையிலேயுடையனவும் கொடுமையானவையுமாகிய யானைக் கூட்டங்கள் பரந்து சென்று போர் செய்த வயல்கள் மிகுந்த வளம் தருதலை ஒழிந்தன. நின் காலாட்படையிலுள்ள போர் வீரர்கள் சென்று போர் புரிந்த மன்றங்கள் கழுதைகள் சென்று மேயும் பாழிடங்களாயின.

“நானிலங்களில் நீர்வளப்பெருக்கத்தால் நன்செய் வேளாண்மையை அடிப்படைப் பொருளாதாரமாகக் கொண்ட மருதநிலம் செழிப்பு மிக்கதாகக் கவர்ச்சிநிலப் பகுதியாக அமைந்திருந்தது. அரசுக்கான நிரந்தர வருவாய் ஆதாரமாக வேளாண்மை அமைந்ததால் இந்த நிலத்தை மையப்படுத்தியே வேந்தர்தம் போர்கள் நிகழ்ந்துள்ளன”[14] போரின் மையமாகச் செல்வச் செழிப்பு மிகுந்த ‘மருதநில’ வளமானது பேரழிவிற்குக் காரணமாக அமைந்ததை இவ்விளக்கத்தின் மூலம் அறியமுடிகிறது. மேலும், மனித வாழ்வின் முதன்மை ஆதாரமான வாழ்விடங்களுக்கும் வாழ்வியல் பொருட்களுக்கும் அழிவினை ஏற்படுத்தி மிகப்பெரும் பேரழிவுகள் உருக்கொள்வதற்குச் சங்கப் போர்நெறிகள் வழிவகுத்தன என்பது புலனாகின்றது.

### பகை நாட்டின் பொருள்களைக் கைப்பற்றுதலால் பேரிடர்

சங்ககாலத்தில் போரில் தோல்வியுற்ற நாட்டினரின் பொருள்களைக் கொள்ளையிடுதல் அக்கால மன்னர்களின் வழக்கமாகவும், போர்மரபாகவும் இருந்துள்ளது. கால்நடைச் சிறந்த செல்வமாகக் கருதப்பட்டது. ஆதலின் பகைவர் மீது போர்த் தொடுக்க விரும்புவோர் அவர்தம் ஆநிரைகளைக் கவர்தல் வழக்கமாகக் கொண்டிருந்தனர். தோற்ற மன்னனின் நாட்டிலிருந்து வெற்றி பெற்ற மன்னன் பசுக்கூட்டங்கள், குதிரைகள், ஆண்யானைகள் அனைத்தையும் கொள்ளையடித்த நிகழ்வை,

*"ஒளிறுவாள் நல்லமர்க் கடந்த ஞான்றைக்*
*களிறுகவர் கம்பலை போல"* *(அகம்.96: 16-17)*

என்ற அகப்பாடலின் உவமைக் கொண்டு அறியலாம். தோல்வி அடைந்த மன்னர்கள் வெற்றி பெற்ற மன்னனுக்கு அடிபணிந்து திறை செலுத்தினால் அவன் நாட்டிற்குப் பெரும்பான்மை தீங்கு நிகழாது. இல்லாவிடில் தம் நாட்டின் பொருளாதாரத்தைச் சீர்குலைக்கும் வகையில் பொருள்கள் கொள்ளையிடப்பட்டு, வளங்களும் அழிக்கப்படுகின்ற நிலை அக்காலத்தில் நிலவியுள்ளது. இதனை,

*"பகைப்புல மரீஇய தகைப்பெருஞ் சிறப்பிற்*
*குடுமிக் கோமாற் கண்டு*
*நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே"* *(புறம்.64: 5-7)*

இப்பாடலடியானது சங்கச் சமூகத்தின் வீரத்தையும், வறுமையையும் வெளிப்படுத்துகிறது. முகுகுடுமிப் பெருவழுதி பகைநாட்டின் மீது போர் செய்து அந்நாட்டில் அமைந்த அழகிய பெருஞ்செல்வங்களைத் தனக்குடைமையாக்கினான். அவனைக் கண்டு 'புற்கை' எனும் நீர் மிகுதியான சோற்றுப் பருக்கையால் அமைந்த உணவைக் கைவிட்டு வருவோம். போரில் வெற்றி பெற்று பகைநாட்டில் உள்ள செல்வங்களைக் கவர்ந்து வருதல் என்பது சங்கப் போர் மரபு எனும் நிலையில் அப்பகை நாட்டில் வாழும் மக்களும் இன்னபிற உயிரினங்களும், வறுமைத் துயரில் அழியும் தன்மை ஏற்பட்டுள்ளது. முதுகுடுமியால் அழிக்கப்பட்ட நகரில் வாழ்ந்த ஒருவன் வறுமையைப் போக்க அவனிடமே சென்று சேருவோம் என்று கூறுவதன் மூலம் அழிவின் தன்மை உணரமுடிகிறது.

வறுமையினால் உண்ணப்படும் சோற்றுப் பருக்கையும், அதிக நீரும் கொண்ட உணவை 'புற்கை' என்று கூறப்பட்டுள்ளது. போரினால் ஏற்பட்ட பேரழிவின் காரணமாகப் பசியின் கொடுமை தாங்காது அத்தகு நீர்நிறைந்த புற்கை உணவை உண்டனர். அவ்வுணவையும் வெற்றி பெற்ற மன்னனை வேண்டியே பெறவேண்டிய நிலை இருந்தது. இவ்வாறு ஒரு நாடு அழிவும், அதற்குப் பதில் அந்நாட்டு மக்கள் வெற்றி பெற்ற அரசனிடம்

வறுமைப் போக்க இரவல் கேட்பதும் சங்கச் சமூகத்தின் இயல்பானது. ஒரு நாட்டில் போரில் கைப்பற்றப்படும் பொருளின் இழப்பினால் மக்கள் பேரிடர்களைச் சந்தித்துள்ளனர் என்பது மேற்கூறிய சங்கப்பாடல்களின் வழி உணரமுடிகின்றது.

### காவல் அரண்களை அழித்துப் பேரிடரை ஏற்படுத்துதல்

மன்னர்கள் தங்கள் நாட்டினைப், பகைவர்கள் எளிதில் வந்து போர் புரிந்து, கைப்பற்ற முடியாத வகையில் பல அரண்களை நாட்டினைச் சுற்றி அமைத்திருந்தனர். பகைவர் தம் நாட்டில் எளிதில் நுழையாதவாறு நீண்ட கதவுகளைக் கொண்ட காவற் காட்டையும், அதனையடுத்து மதிற் சுவரைச் சுற்றி நீர்நிறைந்த முதலைகள் வாழும் அகழியையும் வேல்களையும் அம்புகளையும் வீசும் எயில்களையும் அமைத்திருந்தனர். இதனை,

> ***“அருங்குழுமிளைக் குண்டுகிடங்கின்***
> ***உயர்ந்தோங்கிய நிரைப்புதவின்***
> ***நெடுமதில் நிரைஞாயில்***
> ***அம்புமிழ் அயிலருப்ப”*** *(மது. 64-67)*

எனும் அடிகளால் அறியலாம். அத்தகு காவலரண்களைப் போரின் போது அழித்து அந்நாட்டு மக்களுக்குப் பேரழிவுகளை ஏற்படுத்தியதைச் சங்கப் பாடல்களில் காணமுடிகின்றது.

> ***“கடிமிளைக் குண்டு கிடங்கின்***
> ***நெடுமதி னிலைஞாயில்***
> ***அம்புடை யாரெயி லுள்ளழித் துண்ட***
> ***அடாஅ வடுபுகை யட்டுமலர் மார்பன்”*** *(பதிற்.20: 18-21)*

இப்பாடலில், மிகுந்த காவலையுடைய காவற் காட்டையும், ஆழமான அகழியையும், உயர்ந்த புறமதிலையும் நிலையான மதிலின் உச்சியையும், அம்புக்கட்டுகளையும் உடைய அழித்தற்கரிய மதிலை உள்ளே புகுந்து அழித்துச் சமையல் செய்தலால் உண்டாகாமல் ஊரினைச் சுடுவதனால் உண்டாகிய புகையை உடையதும், பகைவரைக் கொன்ற செருக்கினால் விரிந்த மார்பினை உடையவன் என்று பாராட்டபட்ட மன்னன் பகைமன்னின் காவல் அரண்களை அழித்து அந்நாட்டிற்குத் தீயிட்டு கொழுத்தி, அப்பகை மன்னனையும் கொன்று அந்நாட்டிற்குப் பேரழிவினை ஏற்படுத்தினான்.

பகைவர்களின் மதில்களை அழிப்பதற்குப் பெரிய கற்குண்டுகளை எறிந்து தாக்குவதற்குக் ‘கல்கால் கவணை’ என்ற கருவிகளைப் போர்ப் பாசறையிடத்தே அமைத்துப் போர்புரிந்தனர். இதனை,

*“உரவுக்களிற்று வெல்கொடி நுடங்கும் பாசறை*
*ஆரெயி லலைத்த கல்கால் கவணை*
*நாரரி நறவிற் கொங்கர் கோவே”* *(பதிற்.88: 17-19)*

எனும் அடிகளால் அறியலாம்.

*“……………………… ஒன்னார்*
*கடிமதி லரண்பல கடந்த*
*நெடுமா னஞ்சநீ யருளன் மாறே”* *(புறம்.92: 5-6)*

இப்பாடலடியில் அதியமானின் எதிர் நாட்டுப் படைகளால் அழிவு ஏற்படாவண்ணம் பாதுகாப்புக்கு அமைக்கப்பட்ட அரண்களை அளித்தனர் என்ற பதிவினால் போர்களின் போது பகைநாட்டு மன்னனின் காவலரண்களை அழித்துப் பேரழிவினை ஏற்படுத்தினர் என்பதை உணரமுடிகின்றது.

## போரினால் பேரழிவு ஏற்பட்ட நாட்டின் நிலை

மனித ஆளுகையினாலும் வேட்கையினாலும் நிகழ்ந்த போரினால் பேரழிவுகள் நிகழ்ந்துள்ளன. போரின் மூலம் ஒரு நாட்டில் ஏற்பட்ட பேரழிவுகளைச் சங்க இலக்கியப் புறத்திணைப்பாடல்கள் பெருவாரியாகப் பதிவுசெய்துள்ளன. போர் முடிந்த பின்னர் அந்நாட்டில் நிலவிய அவலநிலையை,

*“உறுசெறுநர் புலம்புக்கவர்*
*……………………………*
*……………………………*
*பாழா யினநின் பகைவர் தேஎம்”* *(மது. 152-176)*

இப்பாடலில், தொன்றுதொட்டு வந்த பகைவர்களின் காவலையுடைய பொழில்களில் படைகள் நிற்கின்ற நிலைகளை அழித்தான். வளம் பொருந்திய மருத நிலத்தைத் தீயால் எரியூட்டினான். அத்தகைய நிலம் ‘நாடு’ என்ற பெயர் நீங்கிக் ‘காடு’ என பெயர் பொருந்துமாறு செய்தான். பசுக்கூட்டங்கள் தங்கிய இடங்களில் புலி முதலிய கொடிய விலங்குகள் தங்கின. பெண்கள் துணங்கைக் கூத்து, குரவைக் கூத்துக்களை மறந்தனர். பெரிய அம்பலங்களில் பேய்கள் உலவின. இல்லுறை தெய்வங்கள் உலாவும் ஊரில் பெண்கள் வருந்திக் கூவியழைத்தனர். வளம் பொருந்திய ஊரில் உள்ள குடிமக்கள் பசியால் உலர்ந்து பிற நாட்டில் இருக்கும் தம்முடைய சுற்றத்தினரை நாடிச் சென்றனர். இவ்வாறு போரினால் பேரழிவைச் சந்தித்த பகைநாட்டில் உள்ள ஏனைய மக்கள், தாங்கள் வாழ்வதற்குரிய சூழல் மற்றும் வாழ்வாதாரங்கள் தம் நாட்டில் அழிந்தமையால், தங்கள் சுற்றத்தாரின் ஊரினை நாடிச் செல்லலாயினர். பெரிய மாளிகைகள் தீயிட்டுக் கொளுத்தியதால் கரிந்த குதிரின் உட்புறத்தே இருந்த கூகைச் சேவல் தம் பெடையுடன்

கூடிக் கதறி அழைத்தன. பொய்கைகளில் செங்கழுநீர் மலருக்கு பதிலாக வாட்கோரைகளும் சண்பகக்கோரைகளும் வளர்ந்தன. விளையும் வயல்களில் எருதுகளுக்குப் பதில் பன்றிகள் ஓடித்திரிந்தன. நின்னுடைய ஏவலை ஏற்றுக் கொண்டு பணி செய்து வாழாமையால் கெட்டு நின்னொடு பகைத்தலைச் செய்தவருடைய நாடுகள் பாழாயின என்று பதிவு செய்யப்பட்டுள்ளது. இதில் சோலை, பண்ணை, நாடு, ஊர், வழி, மன்றம், பொழில், வாயில், நெற்கதிர்கள், வயல்கள், பொய்கைகள் போரினால் அழிக்கப்பட்டன. இப்பாடலின் மூலம் ஒரு நாடு போரினால் மிகப்பெரிய பேரழிவினைச் சந்தித்துள்ளது என்பது தெளிவாகின்றது. மற்றொரு பாடலிலும் போர் நிகழ்ந்த பின்பு நிலவும் அவலநிலையை,

*"களிறுபடிந் துண்டெனக் கலங்கிய துறையும்*

*.......................................................*

*.......................................................*

*வினைபுனை நல்லில் வெவ்வெரி பினைப்பக்*

*கனையெரி யுரறிய மருங்கும்"* *(புறம்.23: 1-11)*

எனும் பாடலில், பகைவரது நாட்டில் உள்ள நீர்த்துறைகளை யானைகள் கலக்கின. வாள் ஏந்திய ஏவல் வீரர்கள் கைக்கொண்டு எஞ்சியப் பொருளைப் பகைவர்கள் உண்ணாதவாறு விளைநிலங்கள் அழிக்கப்பட்டன. இல்லில் சமைத்தற்கு எழும் தீயைப் பெருந்தீயால் அழித்தலால் நகரின் புறம் எங்கும் ஓசை கேட்டது. நாட்டிற்கு முதன்மையான நீர்நிலைகளை யானைகளை விட்டு கலக்கி அழித்தனர். நாட்டில் உணவுக்காக இருக்கும் விளைநிலங்களைப் பகைநாட்டவர் உண்ணாதவாறு அழித்தனர். மேலும், வீட்டில் சமைப்பதற்கு எழும்தீயைப் பெருந்தீயால் அழித்தல் என்பது நாட்டின் வளங்களைத் தீயிட்டு அழித்தலால் வீட்டில் உணவிற்கு எரியும் தீ அழிந்தது என்பதை உணரமுடிகிறது. இவ்வாறு மனித ஆளுகையின் உச்சமாகப் பகைநாடு பேரழிவிற்கு உள்ளானதைக் கல்லாடனார் பதிவு செய்துள்ளார்.

இரு மன்னர்கள் தங்களுக்குள் போரிட்டதால் அழகுற அமைந்த நாடுகள் பலவும் அவற்றிற்குரிய அழகை இழந்து காடுகளாக உருமாறின என்பதை,

*"வழங்குந ரற்றென மருங்குகெடத் தூர்ந்து*
*பெருங்கவி னழிந்த வாற்ற வேறுபுணர்ந்*
*தண்ணன் மரையா வமர்ந்தினி துறையும்*
*விண்ணுயர் வைப்பின காடா யினநின்"* *(பதிற்.23: 12-15)*

எனும் அடிகளால் அறியமுடிகிறது. நெடுஞ்செழியனை - மாங்குடி மருதனார் பாடிய பாடலில்,

*"பீடழியக் கடந்தட்டவர்*
*நாடழிய வெயில் வௌவிச்*
*சுற்றமொடு தூவறுத்தலின்"* *(மது. 186-188)*

பகைவரின் பெருமைக் கெடும்படி வென்று அவர்களைக் கொன்று, பகைவர்களுடைய நாடுகள் அழியுமாறு அவர்கள் தங்கியுள்ள மதில்களைக் கைப்பற்றி, அவர்களுக்கு உதவிபுரியும் சுற்றத்தார்களையும், அச்சுற்றத்தார்களின் வலிமையையும் போக்கும் வண்ணம் அழித்தான். போரினால் இருமன்னர்கள் மட்டுமல்லாது அவன் சுற்றம் உட்பட அனைவரும் இறந்தனர். போரானது மனிதர்கள் பலர் அழிய காரணமாக இருந்ததோடு, மனித இனத்திற்கே பேரழிவினை ஏற்படுத்தியுள்ளது என்பது உறுதியாகின்றது. மேலும்,

*"மதிலு ஞாயிலின்றே கிடங்கும்*
*நீஇ ரின்மையிற் கன்றுமேய்ந் துகளும்*
*ஊரது நிலையு மிதுவே"* *(புறம்.355: 1-3)*

எனும் பாடலில், சிறந்து விளங்கிய ஊரின் மதிலிடத்து ஞாயில் என்ற வரம்பும் இன்று அகழியும் நீர் இல்லாமையின் கன்றுகள் மேய்ந்து திரியும் இடமாயிற்று. போருக்குப் பின் நாட்டில் முதன்மைப் பாதுகாவலான மதில், அகழி போன்றவை அழிந்துள்ளன. அழிவு ஏற்படுத்தப்பட்ட நாட்டில் பாதுகாவல் இருக்காது, மேலும் போரின் போது நிலமும் பகைவரால் அழிக்கப்பட்டதால் மக்கள் வாழ்வதற்கு உதவாத நிலமாகப் பாழ்பட்டுள்ளது. இவ்வாறு போரினால் ஒரு நாடே பேரழிவைச் சந்தித்ததைக் குறிப்பினால் உணரமுடிகிறது.

பரணர் இளஞ்சேட் சென்னியின் வீரப்பண்பை விளக்கும் வகையில் சூரியனின் தன்மையானது எழுகையில் கதிர்கள் குறைவாகத் தோன்றும் பின் உச்சநிலையில் வெம்மையாகச் சுட்டெரிக்கும். அதுபோல் சென்னி போர்க்களத்தில் செல்லச் செல்ல சீற்றம் மிக உடையவனாய் விளங்குவான். அத்தகு திறத்தால் தாயினை இழந்த ஒரு குழந்தை உணவு உண்ணாது ஓயாமல் அழுவது போல நின்னைப் பகைத்தவர் நாடுகள் அழும் என்பதை,

*"செஞ்ஞாயிற்றுக் கவினைமாதோ*
*அனையை ஆகன்மாறே*
*தாயில் தூவாக் குழவி போல*
*ஓவாது கூஉ நின் உடற்றியோர் நாடே"* *(புறம்.4: 16-19)*

என்று இப்பாடலில் குறிப்பிட்டுள்ளார். நாட்டில் உள்ள மக்கள் அனைவரும் தலைவனின்மையால் அவனது இறப்பால், மேலும் அந்நாட்டு வீரமறவர்கள் அழிந்துபட்டதால் தினம் தினம் அழுது கொண்டே இருப்பர். இவ்விளக்கங்களின் வாயிலாக ஒருநாட்டில் மனிதனால் ஏற்படும் பேரிடரை உணரமுடிகிறது. போரில் பெரும்படை அழிதல் பற்றிய வரலாற்றுச் செய்தியினை,

*"அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ*
*நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்மை*
*ஈரைம் பதின்மரும் பொருதுகளத்து தொழியப்"* *(புறம்.2: 13-15)*

பாண்டவர் ஐவரைப் பகைத்து நாட்டைக் (நிலம்) கையகப்படுத்தி தும்பைப் பூக்கள் அணிந்த துரியோதனன் முதலான கௌரவர் போரில் ஈடுபட்டுக் களத்தில் அழிந்தனர். இங்கு பாண்டவர் ஐவரும், துரியோதனன் முதலான கௌரவர் நூற்றுவரும் போர் புரிந்து களத்தில் இறந்தனர் என்று குறிப்பிடுகின்றது. இப்பாடல் அடிகளில் தும்பை - எனும் மாலை சூடுவதை தொல்காப்பியம், இருபடை வேந்தரும் நேர் நின்று போர் புரிதலைக் குறிக்கும். இத்தகு போர் நிகழ்வுகளால் மனித இனம் பேரழிவிற்கு ஆட்பட்டுள்ளது என்பதை உணரமுடிகிறது.

மனிதர்களை இறப்பிற்குப் பிறகு கல்பதுக்கைகளில் வைத்து புதைக்கும் நிலை சங்ககாலத்தில் காணப்பட்டது. போரினால் அதிகப்படியான உயிரிழப்புகள் ஏற்படும். அப்போரில் வீரனால் வீழ்த்தப்பட்டவர்களைப் புதைத்த நிலையை,

***"பார்வ லிருக்கை கவிகண் ணோக்கிற்***
***செந்தொடை பிழையா வண்கண் ணாடவர்***
***அம்புவிட வீழ்ந்தோர் வம்பப் பதுக்கை"*** ***(புறம்.3: 19-21)***

எனும் அடிகளில், புதியவர்களை வருத்துதற்குத் தொலைதூரம் பார்த்தபடி இருக்கும் இருப்பையும், கையைக் குவித்தப்படி கண்ணால் பார்க்கும் பார்வையையும், நல்ல அம்புகளைத் தவறாது விடும் வன்கண்மையையும் கொண்ட மறவர்களின் அம்புக்கு இலக்காகி வீழ்ந்தோர் மீது புதிதாக அமைந்த கற்குவியல் உள்ளது என்று பதிவு செய்யப்பட்டுள்ளது. 'வம்பப் பதுக்கை' என்று கூறுவதன் மூலம் புதிதாக பல கற்குவியல்களால் உருவான கற்பதுக்கைகளில் முற்காலத்தில் இறந்த மக்களுக்கு இறுதிச் சடங்கினைச் செய்வர். இவ்வாறு மறவனின் வீரத்தால் கொலைப்பட்டுப் புதிதாகப் பல்வேறு பதுக்கைகள் காணப்படுகிறது என்பதனால் போரின் மூலமோ அல்லாது மறவர்களினால் வழிபோக்கின் போதோ பல்வேறு உயிர் இறப்புகள் நடைபெற்று அங்கு பேரிடர் ஏற்பட்டுள்ளதை அறிய முடிகிறது.

***"அருங்கடி வரைப்பி னூர்கவி னழியப்***
***பெரும்பாழ் செய்து"*** ***(பட். 269-270)***

என்ற பாடலில், கடத்தற்கரிய காவலையுடைய மதில்களைக் கொண்ட பகைவீரர்களின் படைவீடுகள், அழகு அழியவும், அவர்கள் குலம் அழியவும் பெரிய அழிவை உண்டாக்கினர். மேலும் பகைவர்களின் படை எடுப்பினால் ஊர் பாழாகி வாழ்வதற்குப் பயனற்ற நாடாக மாறும் என்பதன் மூலம் புலவர், மனிதர்கள் தங்களுக்குள் ஏற்படுத்திக் கொள்ளும் பகையால், தங்கள் இனம் பேரழிவைச் சந்திப்பதற்குத் தாங்களே காரணமாகிய நிலையைச் சித்தரித்துள்ளார்.

“இயற்கை சுற்றுச் சூழல்களோடு சேர்த்துப் பகை நாட்டு மக்களைக் கொன்றழிக்கும் போர் வன்முறையானது பண்டைத் தமிழ்நாட்டு மூவேந்தர்களின் பேரரசுகளிடத்தும் காணப்பட்டது.......போர் சார்ந்த அறநெறி கடைப்பிடிக்கப்பட்டதாகத் தமிழ் நூல்கள் கூறுகின்றன. ஆனால், இயற்கைச் சுற்றுச்சூழல்களும், பண்பாட்டுச் சின்னங்களும் தீயிட்டு அழிக்கப்பட்டமையும் தோற்ற மன்னனின் அந்தப்புரத்துப் பெண்கள் வென்றவனின் அடிமைப் பெண்களாகக் ‘கொண்டி மகளிர்’ எனக் கொண்டு செல்லப்பட்டமையும் சங்கக் கவிதைகளில் பரவலாக வெளிப்படுத்தப்பட்டுள்ளன”[15] என்ற ஆ. தனஞ்செயனின் விளக்கத்தின் மூலம் மனிதனது மண்ணாசையாலும், அதிகாரத் தன்மையாலும், பெண்ணாசையாலும் போரால் பேரழிவானது ஏற்பட்டுள்ளது என்பதை மனிதப் பேரிடர் என்பதன் அடிப்படையில் உறுதியாகின்றது.

## போரில் யானை மற்றும் குதிரைகளை அழித்தலால் பேரிடர்

சங்ககாலத்தில் போர் என்பது அறமாகப் போற்றப்பட்டது. அத்தகுப் போர் அறத்தில் மனிதர்களாகிய போர் மறவர்கள படைப்பிரிவுகளில் ஈடுபடுத்தப்பட்டுள்ளனர். மனிதர்கள் மட்டுமல்லாது யானை, குதிரை போன்ற விலங்கினங்களும் போர்க்காளங்களில் படைப் பெருக்கத்திற்குப் பயன்படுத்தப்பட்டது. போர்களில் பெரும்பான்மையும் பயன்படுத்தப்பட்ட விலங்கில் யானையே முதன்மையிடம் பெறுகின்றது. போரில் பயன்படுத்தப்பட்ட யானைகளும் பேரழிவிற்கு ஆட்பட்ட நிலையை,

*“தண்ணல் யானை யடுகளத் தொழிய*
*அருஞ்சமந் ததைய நூறி”* *(புறம்.93: 13-14)*

எனும் அடிகளில் மதத்தினையுடைய தலைமை பொருந்திய யானை, அதை போர்க்களத்தே வீழுமாறு பொருதற்கரிய போரிலே சிதற வெட்டினாய் என்று அதியமானின் வீரத்தின் சிறப்பைக் கூறும் பொழுது, பதிவு செய்யப்பட்டுள்ளது. மற்றொரு பாடலிலும் யானைகளுக்கு ஏற்பட்ட அழிவு குறித்தச் செய்தியினை,

*“கயந்தலை மடப்பிடி புலம்ப*
*இலங்குமருப் பியானை யெறிந்த வெற்கே”* *(புறம்.303: 8-9)*

மெல்லியத் தலைகளையுடைய பெண் யானைகள் தனிமைத் துயருருமாறு விளங்குகின்ற கொம்புகளையுடைய யானைகளை யான் கொன்றனன் என்று கூறப்பட்டுள்ளது. போரில் வீரர்கள் யானைகளைக் கொன்ற நிகழ்வினை,

*“.................................... மின்னவி*
*ரோடையொடு பொலிந்த வினைவில் யானை*
*நீடிர டடக்கை நிலமிசைப் புரளக்*
*களிறுகளம் படுத்த பெருஞ்செய் யாடவ”* *(நெடு. 168-171)*

எனும் பாடலில், யானைகள் ஒளி விளங்கும் முகபடாம் அணிந்து பொலிவுடன் திகழ்வன. அவை, போர்த்தொழிலில் மேம்பட்டவை. நீண்டும், திரண்டும் உள்ள அவற்றின் துதிக்கைகள் அற்று, நிலத்தில் வீழ்ந்து புரளும் படி கொன்ற செயற்கரிய செயலை வீரர்கள் செய்தனர். மேலும்,

> ***"நோக்கினர்ச் செகுக்குங் காளை யூக்கி***
> ***வேலி னட்ட களிறுபெயர்த் தெண்ணின்***
> ***விண்ணிவர் விசும்பின் மீனும்***
> ***தண்பெய லுறையு முறையாற் றாவே"*** *(புறம்.302: 8-11)*

சினம் கொண்டு தன்னைப் பார்த்தப் பகைவர்களைக் கொல்லுகின்ற வீரன், முயன்று தன்னுடைய வேலால் கொன்ற களிறுகளைத் தனித் தனியே எண்ணி நோக்கினால் மேகங்கள் பரவிக் காணப்படும் ஆகாயத்தின்கண் விளங்கும் விண்மீன்களும் அம்மேகங்கள் சிதறும் மழைத்துளிகளும் உறையிட முடியாத அளவிற்கு மிகுதியாய் உள்ளது என்று கூறப்பட்டுள்ளது. முடிவேந்தர்களின் ஆளுகை வேட்கையினால் நிகழ்ந்த போரில் மறவர் மட்டுமல்லாது யானைகளைப் போரிற்குட்படுத்தி அவற்றை வெட்டி வீழ்த்தினார்கள் என்பதன் மூலம் யானைகள் போன்ற போரில் ஈடுபடும் பிற உயிரினங்களும் இறந்து பேரழிவிற்கு ஆட்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

போரில் யானைகள் மட்டுமல்லாமல் குதிரைகளும் படைப்பிரிவில் பயன்படுத்தப்பட்டது. சோழன் வேற்ப.்.றடக்கைப் பெருநற்கிள்ளியோடு போர்ப் புறத்துப் பொருது வீழ்ந்த போது கழாத்தலையார் பாடிய பாடலில்,

> ***"களிறு முகந்து பெயர்குவ மெனினே***
> ***ஒளிறுமழை தவிர்க்குங் குன்றம் போலக்***
> ***கைம்மா வெல்லாங் கணையிடத் தொலைந்தன"*** *(புறம்.368: 1-3)*

> ***"கொய்சுவற் புரவி முகக்குவ மெனினே***
> ***மெய்ந்நிறை வடுவொடு பெரும்பிறி தாகி***
> ***வளிவழக் கறுத்த வங்கம் போலக்***
> ***குருதியம் பெரும்புனல் கூர்ந்தொழிந் தனவே"*** *(புறம்.368: 7-10)*

என்று போர்நிகழ்வைப் பதிவுசெய்துள்ளார். களிறுகளைப் பெற்றுச் செல்வோம் என்று கருதினால் விளங்குகின்ற மழை முகிலைத் தடுக்கும் குன்றுகளைப் போல யானைகள் எல்லாம் நின் அம்புவிட்டு இறந்தொழிந்தன. கத்தரிக்கப்பட்ட பிடரிமயிரினை உடைய குதிரைகளை முகந்து செல்வோம் எனின் உடம்பு முழுவதும் நிறைந்த வடுவுடனே வீழ்ந்து இறந்து, காற்றின் இயக்கம் இன்றிக் கிடக்கும் மரக்கலம் போல, குருதி வெள்ளத்தில்

நிறைந்து அவை மிதக்களாயின என்று போரில் குதிரைகளுக்கு நேர்ந்த அழிவினை இப்பாடல் விளக்குகின்றது. மேலும், மண்ணாசையினாலும், அதிகார வேட்கையாலும் ஏற்படும் ஒளிவிளங்கும் வாட்போரில் வல்ல வீரரும், யானையும், குதிரையும் இரத்தமாகிய நிறமிக்க அழகிய நீர்பரந்த போர்க்களத்தில் மாய்தல் நிகழும். நாள்தோறும் இத்தகைய செயல் நடக்கவும், வளவன் மேலும் மேலும் உன் பசி அடங்குவதற்கு ஏதுவாக உயிர்பல ஊட்டுவன். இவ்வளவன் வசையற்றவன். வலிமை மிக்கவன். கொலைத் தொழிலில் உன்னைப் போன்றவன்; பொன்னால் செய்யப்பட்ட பேரணிகளைப் பூண்டவன் என்று போரினால் யானை, குதிரை காலாட்படை அழிக்கப்பட்டு காலனாகிய எமனுக்கு இரையாக உயிர்கள் கொடுக்கப்பட்டதை,

*"ஒளிறுவாண் மறவருங் களிறு மாவும்*
*கருதியங் கருஉப்புனற் பொருளகத் தொழிய*
*நாளு மானான் கடந்தட் டென்றுநின்*
*வாடுபசி யருத்திய பழிதீ ராற்றல்*
*நின்னோ ரன்ன பொன்னியற் பெரும்பூண்*
*வளவ னென்னும்................."* *(புறம்.227: 4-9)*

இப்பாடலடிகள் விளக்குகின்றன. மேற்கூறிய பாடல்களின் வாயிலாக சங்ககால மன்னர்கள் போரில் வீரர்கள் அல்லாது யானைகள், குதிரைகள் போன்றவற்றையும் கொண்டு படையமைத்தனர். பகைவர்களால் போரில் இவ்வுயிர்களுக்குப் பேரழிவு ஏற்பட்டது. மேலும், அவனது வீரத்திறத்தால் அந்நாட்டில் வாழும் மக்களும் பேரிடருக்கு ஆட்பட்டனர் என்பதை உணரமுடிகின்றது.

### போரில் காவல் மரங்களை அழித்தலால் (சூழலியல்) பேரிடர்

'காவல் மரம்' என்பது சங்ககால இனக்குழுக்களின் 'குலக்குறி' அடையாளமாகக் கருதப்பட்டது. தான் தோன்றிய குடியின் மரபுச் சின்னமாகக் காவல்மரங்களை அடையாளப்படுத்தினர். ஒவ்வொரு குடியும் தனக்கென ஒரு காவல் மரத்தை அமைத்தனர். பாதுகாத்தனர். அக்காவல் மரத்தைப் பகைவர்களின் தாக்குதலில் இருந்து பாதுகாத்தனர். காவல்மர அழிப்பு என்பது மன்னனை அழித்ததற்குச் சமமாகக் கருதப்பட்டது. புன்னை, வாகை, கடம்பு, வேம்பு, மா போன்ற மரங்களைக் காவல் மரங்களாகச் சங்க இனக்குழுக்கள் அடையாளப்படுத்தியது. இனக்குழுக்களை அல்லது பகை மன்னர்களை அழிக்கும் நோக்கில் அவர்களின் காவல்மரங்களை அழித்தனர். காவல்மரம் எனக் கருதப்பட்ட அம்மரத்தை நாட்டில் காணும் இடங்களில் உள்ளதை எல்லாம் அழித்தனர்.

*"..................... காவுதொறும்*
*கடிமரந் தடியு மோசை தன்னூர்"* *(புறம்.36: 8-9)*

என்ற பாடலடிகளில் காட்டில் காணப்படும் காவல் மரம் என அடையாளம் காணப்பட்ட அனைத்தையும் வெட்டி வீழ்த்தினர். அம்மர இனமே பேரழிவினைச் சந்திக்க நேரிடும் வகையில் மர அழிப்பு இருந்தது தெளிவாகின்றது. திதியனின் குறுக்கை என்னும் ஊரில் 'அன்னி' என்பவனோடு நடைபெற்ற போரில்,

> ***"அன்னி குறுக்கைப் பறந்தலைத் திதியன்***
> ***தொன்னிலை முழுமுதல் துமியப் பண்ணிப்***
> ***புன்னை குறைத்த ஞான்றை..............."*** *(அகம்.45: 9-11)*

திதியனின் காவல்மரமாகிய புன்னை மரத்தை அன்னி வெட்டி வீழ்த்தியுள்ளான். இவ்வாறு சங்க காலத்தில் காவல் மர அழிப்பு என்பது மரங்களுக்குச் சூழலியல் சார்ந்த பேரழிவினை ஏற்படுத்தியுள்ளது என்பதை அறியமுடிகின்றது.

"பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் வெற்றிச் சிறப்பைப் பாடும் கல்லாடனார், அவனுடைய வீரர்கள் கூர்மையான கோடாரியல் பகையரசனின் ஊர்களிலிருந்த சோலைகள் தோறும் காவல் மரங்களை வெட்டி வீழ்த்தியதையும் ஏனைய இயற்கைச் சுற்றுச்சூழல்களை அழித்ததையும் புகழ்ந்துரைக்கின்றார்"[16] என்ற ஆ. தனஞ்செயனது விளக்கத்தின் மூலம் போரினால் பகைநாட்டில் உள்ள காவல்மரங்களை அழித்தல் என்பது சூழலியல் சார்ந்த பேரழிவினை ஏற்படுத்தும் என்பது உறுதிபடுகின்றது.

### வரிச்சுமையால் ஏற்படும் பேரிடர்

சங்ககாலத்தில் மன்னர்களின் ஆட்சியமைப்பிற்கும், அரசினை வழிநடத்துவதற்கும் அரசின் கருவூலத்திற்கும் பொருளாதாரம் என்பது முதன்மையாகக் கருதப்பட்டது. இப்பொருளாதாரத்தை மக்களிடமிருந்து பெறப்படும் வரியின் மூலமே ஈடுசெய்யப்பட்டது. நிலவரி, நீர்வரி போன்ற வரிகள் விதிக்கப்பட்டன. பெறப்படும் வரி என்பது மக்களின் நிலையறிந்து அவர்களின் வளமைக்கேற்ப பெறும் பொழுது அம்மன்னனுக்கும் அந்நாட்டில் வாழும் குடிகளுக்கும் நன்மை பயப்பதாக அமையும். இம்முறையறிந்து வரி விதிப்பவனே சிறந்த மன்னனாகவும் கருதப்பட்டான். அவ்வாறில்லாது முறையின்றி வரிவிதிப்பதன் மூலம் அந்நாட்டு மக்களும் மன்னனும் பேரழிவிற்கு ஆட்படுவர். இப்பாடலில் சங்க அரச மரபின் வரிவிதிப்பு முறையினை விளக்கும் வகையில்,

> ***"குடிபுர விரக்குங் கூரி லாண்மைச்***
> ***சிறியோன் பெறினது சிறந்தன்று மன்னே"*** *(புறம்.75: 4-5)*

குடிமக்களிடம் இறைவேண்டி இறக்கும் சிறுமை படைத்த உள்ளமுடையவனும், மேம்பாடில்லாத ஆண்மையை உடையவனுமான ஒருவனுக்கு அரசுரிமை கிடைத்தால் அது தாங்க முடியாத பாரமாகி விடும் என்று அரசனின் இலக்கணத்தை வரையறுக்கின்றது. மன்னன் என்பவன்

மக்களின் நிலை அறிந்து வரி பெற்று அரசினை வழிநடத்த வேண்டும். அவ்வாறின்றி முறையறியாது மக்களிடம் வரிவிதிப்பான் எனில் அவனே அம்மக்களுக்குப் பெரும் பேரிடரை ஏற்படுத்துபவன் ஆகின்றான். இதன் மூலம் சங்ககாலத்தில் வரிவிதிப்பின் மூலம் மக்கள் பேரழிவிற்கு ஆட்பட்டிருக்கலாம் என்பதை அவதானிக்க முடிகின்றது.

## இயற்கையும் - மனிதனும்

உலகப் படைப்பினுள் மிகவும் உன்னதமானப் படைப்பு இயற்கையும், மனிதனும். இவையிரண்டுமே ஒன்றுடன் ஒன்று இணைந்து வாழ்ந்த இன்ப வாழ்வு பண்டையச் சமூக வாழ்வு. அதனாலேயே அக்காலப் புலவர்கள் இயற்கையை விடுத்துப் பாடல் புனைவதைத் தவிர்த்தனர். இயற்கை மனிதனுக்குக் கிடைத்த மிகப்பெரிய கொடை. கபிலர் பாரியின் சிறப்பினை உணர்த்த அவனது பறம்பு மலையின் வளத்தைக் கூறும் நோக்கில், இயற்கை மனிதனுக்கு வழங்கும் கொடைகளை,

***"மட்டுவாய் திறப்பவு மைவிடை வீழ்ப்பவும்***
***அட்டான் றானாக் கொழுந்துவை யூன்சோறும்***
***பெட்டாங் கீயுங் பெருவளம் பழுனி***
***நட்டனை மன்னோ"*** ***(புறம்.113: 1-4)***

என்று இப்பாடலில் எடுத்தியம்புகின்றார். மதுவருந்த சாடியை வாய்திறப்பவும் ஆட்டுக் கிடாவை வெட்டிச் சமைத்த கொழுந்துவையையும், ஊன் சோற்றையும் விரும்பியவாறே தந்தும் செல்வத்தால் நிறைந்தும் முன்பு எம்மோடு நட்பு செய்தாய் என்று பாடியுள்ளார். இப்பாடலானது இயற்கையுடன் மனிதன் நட்பு கொண்டு அதன் பெருவளத்தைப் பெற்று மகிழ்வுடன் வாழ்ந்த இன்ப வாழ்வினைத் தெளிவாக்கியுள்ளது. இவ்வாறு சங்ககாலத்தில் மனிதன் இயற்கையுடன் தான் நட்பு கொண்டு வாழ்ந்து அதன் உயர்ந்த தன்மை உணர்ந்து வாழ்ந்ததினாலேயே அழிவுகள் பெரும்பான்மையும் ஏற்படாது இருந்தன. சில வேளைகளில் மனிதன் இயற்கை மீது தனது ஆளுகையினைச் செலுத்தியுள்ளான். இதற்கான பதிவுகள் சங்க இலக்கியத்தில் காணக்கிடக்கின்றது. குறிப்பாக,

***"இலங்கேந்து மருப்பி னினம்பிரி யொருத்தல்***
***விலங்கின் மீமிசைப் பணவைக் கானவர்***
***புயம்புக் குண்ணும் புரிவளைப் பூசல்***
***சேயளைப் பள்ளி யெ.்குறு முள்ளி***
***னெய்தெற விழுக்கிய கானவ ரழுகை***
***கொடுவரி பாய்ந்தெனக் கொழுநர் மார்பி***
***னெடுவசி விழுப்புண் தணிமார் காப்பென***
***வறல்வாழ் கூந்தற் கொடிச்சியர் பாடல்"*** ***(மலை. 297-304)***

இப்பாடலில் மலையின் மேல் அமைக்கப்பட்ட பரணில் கானவர் தினைப்புனத்து புகுந்து தின்றும் விளங்குகின்ற, ஏந்திய கொம்பினையுடைய தன் இனத்தைப் பிரிந்த யானைத் தலைவனைப் பிடிப்பதற்காக விரும்பி, அவனை வளைக்கும் ஆரவாரம், நெடிய முழையாகிய இருப்பிடத்தில் தங்கியுள்ள முள்ளம் பன்றி, தன்னுடைய கூர்மையான முள்ளால் தாக்கிக் கொள்வதால் பட்ட கானவரின் அழுகை ஒலி, தம் கணவர் மார்பில் புலி பாய்ந்தமையால்பட்ட நெடிய பிளந்து காணப்படும் சீரிய புண்ணை ஆற்றுவதற்குக் காவலெனக் கருதி, அறல் போன்ற கூந்தலையுடைய கொடிச்சியர் பாடும் பாட்டால் எழும் ஓசை என்று, குறிஞ்சி நிலத்தில் நிலவிய மனித மற்றம் விலங்குகளின் செயல்பாட்டை விளக்கியுள்ளது. மேற்கூறிய பதிவுகள் அனைத்தும், மனிதன் விலங்குகள் வாழும் காட்டுப் பகுதிகளில் தன் ஆளுகையினைச் செலுத்தி இருக்கலாம் விலங்குகள் தங்களின் பாதுகாப்பிற்காக மனிதன் மீது எதிர் தாக்குதலை நிகழ்த்தியிருக்கக்கூடும் என்பதையும் உணர்த்துகின்றது.

வேள்வித் தொழிலுக்காகக் காட்டில் வாழும் புல்வாய்க் கலைமானின் உறுப்புத் தோல் நின்தோளில் இடப்பட்ட பூணூல் மீது சிறந்து விளங்கியது என்பதனை,

> ***“வினைக்குவேண்டி நீபூண்ட***
> ***புலப்புல்வாகக் கலைப்பச்சை***
> ***சுவற்பூண்ஞாண் மிசைப்பொலிய”*** ***(புறம்.166: 10-12)***

இப்பாடலடிகள் மனிதன் தன் தேவைக்காகக் காட்டில் வாழும் விலங்குகளை அழித்து, உயிரினங்களுக்குப் பேரழிவினை ஏற்படுத்தியதை உணர்த்துகின்றது. சங்ககாலத்திலும் இக்காலத்தைப் போல மனிதர்கள், விலங்குகள் வாழும் காடு, மலைகளை ஆக்கிரமிப்பு செய்திருந்தமையாலே இத்தகைய பேரழிவுகள் ஏற்பட்டிருக்கக்கூடும் என்பது தெளிவாகின்றது.

## மனிதத் தேவை - மரங்கள் அழிப்பு - பேரிடர்

மனிதர்கள் மற்றும் பிற விலங்குகள் உயிரினங்கள் அனைத்தும் உயிர் வாழ்வதற்குத் தேவையான உயிர்வளியைக் கொடுப்பது மரங்கள். மரங்கள் அழிக்கப்படுவதினால் மழையும் குன்றி வறட்சி ஏற்படுகின்றது. பண்டைய காலத்தில் அரசுருவாக்கம் ஏற்பட்ட பின்பு அங்குள்ள காடுகளையெல்லாம் அழித்து நாடாக மாற்றினர். கரிகாலன் தனது நகரை மறுசீரமைக்கும் பொருட்டு காடுகளையெல்லாம் நாடாக மற்றியதை,

> ***“காடு கொன்று நாடாக்கி”*** ***(பட். 283)***

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதனால், காட்டிலுள்ள மரங்கள் விலங்குகள் என்று பல்வேறு விதமான உயிரினங்கள் பேரழிவிற்கு ஆட்பட்டிருக்கும் என்பது தெளிவாகின்றது. வெட்டி எரிக்கப்பட்ட கொல்லை நிலத்தில் குறவனால் துண்டுகள் ஆக்கப்பட்ட மரங்கள் என்று மனிதன் தன் தேவைக்கு மரங்களை அழித்ததை,

***“எறிபுனக் குறவன் குறைய லன்ன***
***கரிபுற விறகி”*** ***(புறம்.231: 1-2)***

என்ற பாடல் அடிகளின் வாயிலாக அறியமுடிகின்றது. மரத்தை வெட்டும் தச்சா் பெற்ற சிறுவா்கள் தம் மழுவோடு காட்டிற்குச் சென்றால் அங்குள்ள மரங்கள் அவா்களின் விருப்பத்திற்கு ஏற்றவாறு பயன்படும் என்று அமைந்துள்ளது. இதன் மூலம் சங்ககாலத்திலும் மக்கள் தங்களது அடிப்படைத் தேவைகளை நிறைவேற்ற மரங்களை வெட்டி வீழ்த்தினா் என்பதை,

***“மரங்கொ.ஃ. றச்சன் கைவல் சிறாஅர்***
***மழுவுடைக் காட்டகத் தற்றே”*** ***(புறம்.206: 11-12)***

எனும் பாடலடிகள் புலப்படுத்துகிறது.

மனிதனின் ஆளுகை வேட்கையினால் இயற்கைக்கு ஏற்பட்ட பேரழிவில் காடாழித்தலும் ஒன்றாகும். இவ்வாறு காடுகளை, மரங்களை அழிப்பதால் மழைவளம் இன்றி வறட்சி ஏற்படுகின்றது. வறட்சியினால் நீரின்றி மக்கள் துன்புறுகின்றனா். நிலவுலகு வெப்பமிகுதியால் பெருந்துன்பத்திற்கு ஆளாகின்றது. இவ்வாறு மரங்ளை அழிவிற்குட்படுத்தி நீா் ஆதாரத்தினை அழித்துப் பேரழிவினை ஏற்படுத்தும் நிலை இன்று பன்மடங்கில் பெருகிவருகின்றது.

“சுருங்கிக் கொண்டிருக்கிற நன்னீா் வளங்களுக்கான மோதல்கள், பலம் பொருந்திய போா்கள் சூழ்ந்த உலகத்தை நோக்கி நாம் சென்று கொண்டிருக்கிறோம். இந்த முரண்பாடு அல்லது சண்டை என்பது தேசங்களுக்கிடையோ, ஏழை பணக்கார நாடுகளுக்கிடையோ, கிராம – நகா்ப்புற மக்களுக்கிடையோ, அல்லது இயற்கைக்கும், செயற்கைகளுக்குமிடையோ ஏற்படலாம்”[17] என்பதின் வாயிலாக இயற்கையை முரணித்து வாழும் நிலையில் இயற்கையினாலும் செயற்கையினாலும் பேரழிவுகள் ஏற்படும் என்பதை விளக்குகின்றது.

வளங்களை மனிதன் அழிப்பதால் ஏற்படும் பேரழிவுகள் பலவாகும். சங்ககால மன்னா்கள் தங்களின் ஆளுகை வேட்கையால் மரங்களை அழித்ததால் பல்வேறு வகையில் பேரழிவுகளைச் சந்தித்திருக்கலாம். மேலும் மனிதா்கள் தங்களின் வாழ்வாதாரத்திற்காக மரங்களை அழித்துள்ளனா். இதனை,

***“மருந்துகொண் மரத்தின்”*** ***(புறம்.180: 5)***
***“ஆர நெருப்பின்”*** ***(புறம்.320: 12)***

என்ற அடிகளின் மூலம் மனிதன் உணவிற்கும், மருந்திற்கும் சில வகை மரங்களை அழித்துள்ளான் என்பதை உணர முடிகின்றது. உணவைச் சமைத்து உண்பதற்கு விறகாக

மரங்களை வெட்டி பயன்படுத்தினான். மேலும், மனிதன் தன் தேவைக்காக பல வளங்களையும் அழித்துள்ளான் என்பதை,

> ***"மரையான் கறந்த நுரைகொ டீம்பால்***
> ***மான்றடி புழுக்கிய புலவுநாறு குழுசி***
> ***வான்கே ழிரும்புடை கழாஅ தேற்றிச்***
> ***சாந்த விறகி னுவித்த புன்கம்"*** ***(புறம்.168: 8-11)***

இப்பாடலில், மானின் இறைச்சியைச் சமைத்த புலால் நாறும் பானையைக் கழுவாதே, மரையாவைக் கறந்த நுரை கொண்ட இனிய பாலை உலை நீராக வார்த்து ஏற்றி சந்தன விறகால் எரியூட்டித் தினையைச் சமைத்தனர் என்ற பதிவின் மூலம் மனிதர்களின் தேவைக்கு விலங்குகள், மற்றும் தாவரங்களை அழித்து பேரழிவுகளை ஏற்படுத்தபட்டதை அறிய முடிகிறது. மேலும்,

> ***"கான்யாறு தழீஇய அகனெடும் புறவிற்***
> ***சேணாறு பிடவமொடு பைம்புத லெருக்கி***
> ***வேட்டுப்புழை யருப்ப மாட்டிக் காட்ட***
> ***இடுமுட் புரிசை ஏமுற வளைஇப்***
> ***படுநீர்ப் புணரியற் பரந்த பாடி"*** ***(முல்.24-28)***

என்ற பாடலில், காட்டாறு சூழ்ந்த அகன்ற நெடிய காட்டிடத்து நீண்ட தூரத்தேயும் மணம் வீசும் பிடவத்தோடு, பசிய குறுந்தூறுகளை வெட்டியழித்து, வேடருடைய அரணையும் அழித்து இடுமுள் வேலியாக இட்டு அமைத்த மதிலகத்துக் கடல் போன்று அகன்ற பரப்புடையதாக அமைக்கப்பட்ட பாசறை என்று போர் நிகழ்வின் போது மனிதர்கள், யானைகள், குதிரைகள் மட்டுமல்லாது பல்வேறு தாவர உயிரினங்களும் அழிக்கப்பட்டுள்ளது. மனித ஆளுகையினால் இயற்கைச் சார்ந்த வளங்களுக்குப் பேரழிவுகளை ஏற்படுத்தியுள்ளனர் என்பது புலப்படுகின்றது.

"இயற்கையை நுகர்ந்து தீர்ப்பதற்கென்றே கருதும் நவீன மனிதச்சமூகம் இயற்கையின் அழிவில் தனது கொண்டாட்டத்தை முன்வைக்கிறது. இதனால் இயற்கையும் உயிர்த்தொகுதிகளும் இயற்கையுடன் இணைந்த வாழ்வும், உற்பத்திமுறைகளும் பெருஞ் சிதைவை நோக்கிச் செல்கின்றன"[18] என்று இயற்கையிலிருந்து முரண்படும் நிலையானது இக்காலத்தின் பதிவாக இருப்பினும் சங்ககாலத்திலும் இதற்கானச் சான்றுகள் இலைமறையாகக் காணப்படுகின்றன.

மழையால் தான் உயிரினவாழ்வு தொடர்ந்து நடைபெறுகின்றது. வருடந்தோறும் ஒரு ஆண்டிற்குத் தேவையான சராசரி மழை பெய்வதினால் மட்டுமே நிலப்பகுதி செழிப்புற்று வளம் பெறுகும். அத்தகைய மழை பொழிவதற்கு அடிப்படை ஆதாரமாக விளங்குவது மரங்களே.

மரங்கள் அழிக்கப்படுவதினால் நீர்ப்பற்றாக்குறை ஏற்படும். வேளாண்மை செய்வதற்கான இயற்கை வளம் அழியும். இதனால் மக்களுக்கும் பிற உயிரினங்களுக்கும் உணவு தட்டுபாடு உண்டாகும். வறட்சி நிலவும், நல்ல விளைச்சல் இன்மையினால் வேளாண் மக்களின் உழைப்பும், முதலீடும் வீணாவதோடு கால்நடைகளுக்கும் இலை, தழைகள் இல்லாத நிலை உண்டாகிறது. மழை இன்மையினால் புவிவெப்பமடைந்து விடுவதால் மக்கள் மற்றும் பிற உயிர்கள் வாழ்வதற்குகந்த சூழல் இல்லாமல் பேரழிவு ஏற்படும்.

சங்ககாலத்தில் மனிதனது ஆளுகைப் போக்கினால் நாட்டில் உள்ள வளங்களும், மனிதர்களும், தாவர மற்றும் விலங்கினங்களும் பேரழிவினைச் சந்தித்ததை மேற்கண்ட விளக்கங்களின் வழி அறியமுடிகின்றது.

## தொகுப்புரை

- சங்க இலக்கியம் வேட்டையின் அடிப்படையில் பொதுவுடைமையின் எச்சத்தைப் பிரதிபலிப்பதாகக் கவிதையாக்கம் பெற்றது. இனக்குழு வாழ்வில் பொருள்கள் அனைத்தும், அனைவருக்கும் என்ற 'பொதுவுடைமைப்' பேணப்பட்டுள்ளது.

- இனக்குழுவாழ்வில் பகிர்தல் என்பது அனைத்து நிலைகளிலும் நிலவியது. தானியம், உணவு மட்டுமல்லாது ஆநிரைகளையும் நிலங்களையும் பொதுமையாகப் பகிர்ந்து வாழும் சமூகமாக இருந்ததைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

- ஆநிரைப்போர் என்பது வாழ்வியல் இருப்பினை மையமாகக் கொண்டு நடைபெற்றது. போரில் தான் பெற்ற ஆநிரைகளைப் பாதீடு செய்யும் நிலைமாறி ஆநிரை கவர்ந்த வீரனே கல்லுக்கு ஆநிரைகளை விலை பேசும் நிலை ஏற்பட்டது. இதன்காரணமாகத் தனியுடைமை தோற்றம் கொள்ள ஆரம்பித்தது. இதனை மக்களும் வரவேற்று ஆரவாரிக்க முற்பட்டனர்.

- இனக்குழுவில் ஏழ்மை வாழ்விலும் மகிழ்ச்சி காணப்பட்டது. தனியுடைமையின் காரணமாக நடைபெற்ற போரில் ஆநிரைகளைப் பாதீடு செய்தநிலையில் தன் வீரத்தின் தன்மை கருதி மருதநிலத்தினை வேண்டி நிற்கும் தன்மை ஏற்பட்டது.

- மருதநில உணவு உற்பத்தியின் உபரியும் தனி மனித வீரமும் தலைமைப் பண்பும் நிறுவனமயமாக்கப்பட்ட அமைப்பை ஏற்படுத்த முற்பட்டது. 'அரசு' என்ற அமைப்பு உருப்பெற்றது.

- மருதநில வளமும் மண்ணாசையும் இனக்குழுத் தலைவர்களின் வழிவந்தவர்களை உலகம் முழுதாளும் ஆளுகை வேட்கையால் முடிவேந்தர்களாக உருப்பெறச் செய்தது. இதனால் இனக்குழுக்களுக்கிடையே நடைபெறும் சண்டை பெரும் போராக மாற்றம் பெற்று நிறுவனமயமாக்கப்பட்டது. அப்போர் 'அறம்' என்ற சொல்லால் புனிதப்படுத்தப்பட்டது. இப்புனிதப்போர் மனிதர்களுக்கும் பிற உயிரினங்களுக்கும் பேரழிவினை ஏற்படுத்தியது.

- முடிமன்னர்களின் ஆளுகை வேட்கைக்கு மாறுபடும் பகைமன்னர்களின் நாட்டில் உள்ள வயல்வெளிகள், நீர்நிலைகள் மற்றும் பொதுவிடங்களை மக்கள் வாழத்தகுதிப்பாடின்றி அனைத்தையும் அழித்து பேரழிவுகளை ஏற்படுத்தினர்.

- சங்ககாலத்தில் மண் வேட்கையால் மட்டுமல்லாது பெண் வேட்கையாலும் 'மகள்மறுத்தல்' எனும் பெயரில் போர்கள் நிகழ்த்தப்பட்டுப் பேரழிவுகளை ஏற்படுத்தினர்.

- போர் என்பது இருமன்னர்களுக்கிடையே நடைபெற்று முடிவதில்லை. போரில் இறந்த உறவினர்களுக்காக (தந்தை, தம்பி, நண்பன்) வஞ்சினம் கூறிப் போர் நிகழ்த்தப்பட்டு பேரழிவுகள் ஏற்படுத்தப்பட்டது.

- ஆளுகை வேட்கையால் போரில் யானை, குதிரை, தேர், மறவர் என்று நால்வகைப் படைகள் ஈடுபடுத்தப்பட்டது. இந்நால்வகைப் படையால் மனிதர்கள் மட்டுமல்லாது விலங்கினங்களும் பேரழிவினைச் சந்தித்ததைச் சங்க இலக்கியங்கள் அதிகப்படியான பாடல்களில் பதிவுசெய்துள்ளது.

- போரில் வேந்தர்கள், மறவர்கள் இறப்பது மட்டுமின்றி அவர்களின் காதல் மகளிரும் உடனிறந்தனர். இதனால் போர் என்பது மிகப்பெரிய பேரிடராக உருப்பெற்றதைச் சங்க இலக்கியங்களின் வழி அறியமுடிகின்றது.

- வேந்தர்களின் ஆளுகை வேட்கையினால் பகைநாடு தீக்கிரையாக்கப்பட்டது. அந்நாட்டில் உள்ள நீர்நிலைகளுக்கு யானைகளைக் கொண்டு அழிவினை ஏற்படுத்தினர். அப்பகைநாட்டில் உள்ள அனைத்து வளங்களையும் பொருள்களையும் மகளிர்களையும் வெற்றி பெற்ற மன்னர்கள் கைப்பற்றினர் என்பதைச் சங்க இலக்கியங்கள் பதிவுசெய்துள்ளது.

- பகைமன்னர்களின் காவல் அரண்களாகிய மதில்கள், அகழிகள், காவற்காடுகள், காவல்மரங்கள் போன்றவற்றையும் போரின் காரணமாக அழித்தனர்.

- நாட்டின் பொருள் தேவைக்கு விதிக்கப்பட்ட வரியால் அந்நாட்டில் வாழும் மக்கள் பேரழிவினைச் சந்தித்தனர்.

- மனிதன் தங்களின் வாழ்வியல் தேவைகளுக்காக மரங்களையும் காடுகளையும் அழித்து சூழலியல் சார்ந்த பேரழிவினை ஏற்படுத்தியதைச் சங்க இலக்கியங்கள் பதிவுசெய்துள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. கா. சுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாயம். ப. 3
2. வை. பெருமாள்சாமி, சங்ககாலத் தமிழகத்தின் சமூகநிலை. ப. 50
3. கோ. கேசவன், மண்ணும் மனித உறவுகளும். ப. 23
4. கா. சுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாயம். ப. 19
5. கே. முத்தையா, தமிழ் இலக்கியம் ஒரு புதிய பார்வை. ப. 86
6. பி. ஏங்கல்ஸ், குடும்பம், தனிசொத்து, அரசு. ப. 171
7. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானுடவியல். ப. 99
8. ஞானி, படைப்பியல் நோக்கில் தமிழ் இலக்கியங்கள். ப. 52
9. எலியா கனெட்டி, (தமிழில் ரவிக்குமார்) அதிகாரத்தின் மூலக்கூறுகள். ப. 272
10. க. கைலாசபதி, தமிழ் வீரநிலைக்கவிதை. ப. 48
11. கோ. கேசவன், மண்ணும் மனித உறவுகளும். ப. 76
12. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, புறநானூறு (பகுதி-2). ப. 269
13. ப. மருதநாயகம், புதுப்பார்வைகளில் புறநானூறு. ப. 135
14. பெ. மாதையன், சங்க இலக்கியத்தில் குடும்பம். ப. 155
15. ஆ. தனஞ்செயன், சங்க இலக்கியமும் பண்பாட்டுச் சூழலும். ப. 42
16. மேலது. ப. 49
17. மாட் விக்டோரியா பார்லோ, நீராதிபத்தியம். ப. 203
18. முனைவர் க. ஜவகர், திணைவெளி. ப. 79

இயல் - 4

# பேரிடரைப் போக்கும் மேலாண்மைப் பதிவுகள்

இயற்கையாகிய தாவர, விலங்கினங்களே உலகத்தோற்றத்தின் முதல்படிநிலைகள். அணுவின் வளர்ச்சி தொடங்கி படிநிலை வளர்ச்சியின் இறுதி வடிவமாகவே மனிதன் தோற்றம் பெற்றான். இவ்வாறு பல மாறுபாடுகளுக்கும் இடமளிக்கும் உலகம், தோற்றம் பெற்ற காலம் முதல் பல்வேறு மாறுபாடுகளைப் பெற்று உருப்பெற்றது. இயற்கையின் மாறுபாட்டுத் தன்மையானது பேரழிவுகளை விளைவிப்பினும் உயிரினங்களுக்கு நன்மையை விளைவிக்கக் கூடியதாகவும் அமைகின்றது. இயற்கை தன்னுள் நிகழ்த்தும் மேலாண்மையின் காரணமாகவே உலகம் நிலைபெற்று உயிரினங்கள் வாழ்வதற்கு உகந்த சூழலை ஏற்படுத்துகின்றது.

மனிதனது வாழ்தல் கோட்பாட்டினால் அவனால் நிகழ்த்தப்பட்ட இயற்கை அழிப்பையும் மனித அழிப்பையும் நியாயப்படுத்தும் நிலை சமூகத்தில் இன்று வரை நிகழ்ந்தேறியுள்ளது. இயற்கையின் மாறுபாட்டுத் தன்மையினாலும் மனிதனது ஆளுகை வேட்கையினாலும் நிகழ்ந்த பேரழிவுகளைச் சங்ககால மக்கள் பேரழிவுகள் நிகழ்வதற்கு முன்பும் நிகழ்ந்த பின்பும் தங்களைத் தற்காத்துக்கொள்ள மேலாண்மை வழிமுறைகளை மேற்கொண்டனர். அக்காலமானது மனிதத் தோற்றம் பெற்று அறிவியல் வளர்ச்சி என்பது முறைப்படுத்தாத காலமாகவே கொள்ளப்படுகின்றது. அத்தகைய காலகட்டத்தில் நிகழ்ந்த பேரிடர்களுக்கு மனிதர்கள் மேற்கொண்ட நடவடிக்கைகளை விளக்குவதாக இவ்வியல் அமைகின்றது.



## முறைசார் மேலாண்மை

## சங்கத் தமிழரின் நேரிய வாழ்க்கை

இனக்குழு வாழ்வின் எச்சமாக சங்ககாலம் திகழ்ந்தாலும் அரசுருவாக்கத்தின் ஆளுமைப் போக்கினையே பெரும்பான்மையும் சங்க இலக்கியம் பதிவுசெய்துள்ளது. இனக்குழு வாழ்க்கையிலும் கால்நடைச் சமூகத்திலும் வேளாண் சமூகத்திலும் தன் வாழ்வியலை நிலைநிறுத்த ஏதோ ஒரு வகைகளில் போராட்டத்தினை முன்னிறுத்த வேண்டிய சூழல் ஏற்பட்டது. இருப்பினும் முடி வேந்தர்கள் ஆளுமைச் செலுத்திய போதிலும் தம் வாழ்வியல் நெறியில் இருந்து தவறவில்லை.

***"கொள் வதூஉ மிகைகொளாது கொடுப்பதூஉங் குறைபடாது"*** ***(பட். 210)***

தாம் கொள்ளும் பொருள்களைத் தாம் கொடுக்கும் பொருள்களுக்கு மிகுதியாகக் கொள்வதில்லை. தாம் கொடுக்கும் பொருள்களையும் வாங்கும் பொருள்களுக்குக் குறைவாகக் கொடுப்பதுமில்லை. இவ்வாறு மக்கள் நேர்மையுடன் வாழ்ந்த செம்மையான இல்லற வாழ்வினைக் காணமுடிகிறது. இத்தகு செல்நெறி கொண்ட சங்ககாலத்தில்,

***"உண்டா லம்மவிவ் வுலக மிந்திரர்***
***அமிழ்த மியைவ தாயினு மினிதெனத்***
***தமிய ருண்டலு மிலரே முனிவிலர்***
***துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப்***
***புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனின்***
***உலகுடன் பெறினுங் கொள்ளலர யர்விலர்***
***அன்ன மாட்சி யனைய ராகித்***
***தமக்கென முயலா நோன்றாட்***
***பிறர்க்கென முயலுந ருண்மை யான"*** ***(புறம்.182: 1-9)***

என்ற புறப்பாடலில், தேவர்கள் உண்ணும் அமிழ்தம் தமக்குக் கிடைப்பினும் அதனைத் தனித்து உண்டு தாம் மட்டும் வாழும் இயல்புடையவர்கள் இலர், யாரொடும் வெறுப்பிலர், அனைவரிடத்தும் அன்புடையவர். பிறர் அஞ்சத்தகும் துன்பத்திற்கு அஞ்சி, அது தீர்த்தற்பொருட்டு சோம்பி இருத்தலும் இலர், புகழ் கிடைப்பின் தம் உயிரையும் கொடுப்பர், பழியெனின் உலகம் முழுவதும் பெரினும் கொள்ளார். மனக்கவலை இல்லார் அத்தகு மாட்சிமைப்பட்ட தன்மையராய் தமக்கென முயலாது பிறர்க்கென முயலும் சான்றோர் உலராதலால் இவ்வுலகம் இருக்கின்றது. இதில் தமியர் உண்டலும் இலர்' என்பதனால் சங்கச் சான்றோர் தனக்குக் கிடைக்கும் பொருட்களைத் தனித்துண்ணாது பகிர்த்துண்டனர் என்பதும், 'முனிவு இலர்' என்பதனால் யாரையும் பகைவராக்கி வெறுப்பு கொள்ளாதவர்

என்பதும், 'பழி எனின் உலகுடன் பெறினும் கொள்ளலர்' பழி உண்டாகும் செயலில் ஈடுபடார் என்பதும் 'பிறர்க்கு என முயலுநர்' தமக்கு ஏற்படும் துன்பத்தைப் போன்றே பிறர்க்கு ஏற்படும் துன்பத்தைப் போக்கும் தன்மை உடையவர் என்பதும் விளக்கப்பட்டுள்ளது. இதன் காரணமாகவே இவ்வுலகம் அழியாமல் உள்ளது என்றும் காரணம் கூறப்பட்டுள்ளது. இதில் சங்கச் சான்றோர்கள் சிறந்த மேலாண்மையாளர் என்பதற்கான இலக்கணம் படைக்கப்பட்டுள்ளது. 'சிறந்த மேலாண்மையினால் பசினால் இறப்பு, அன்பின்றி போரினால் இழப்பு, இயற்கையால் ஏற்படும் பேரழிவில் பிறர் துன்பத்தைப் போக்குதல் முதலான மனிதர்களுக்கும் பிற உயிரினங்களுக்கும் ஏற்படும் பேரழிவுகளிலிருந்து முறைசார் மேலாண்மை செய்துள்ளனர் என்பதற்கு இப்பாடல் தக்க சான்றாக உள்ளது.

## நீரியல் மேலாண்மை (ஆறுகளை உருவாக்குதல்)

நீரின் அவசியத்தை நன்குணர்ந்து மழை பெறும் காலங்களில் பிற்காலத்தின் நீரின் தேவையைப் போக்கும் விதமாகச் சங்ககால மக்கள் நீரியல் மேலாண்மை செய்தனர். ஆறுகளை உருவாக்குதல், கால்வாய்களை அமைத்தல், ஏரி, குளங்களை ஏற்படுத்துதல், நீர்நிலைகளைப் பாதுகாக்க காவல் ஆட்களை நியமனம் செய்தல் என்று தொடர் நிகழ்வாக முறைசார் மேலாண்மை அமைப்பில் பேரிடர்களை மேலாண்மை செய்துள்ளனர். இதனைப் பின்வரும் பகுதிகளில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

மலையில் பிறந்த ஆறுகள் மலையை விட்டு அகன்று நில எல்லையை அடைந்து அங்குள்ள நிலங்களை வளம் பெறச் செய்து பின்பு கடலில் சென்று கலந்த செய்தியை,

***"மலையி னிழிந்து மாக்கட னோக்கி***
***நிலவரை யிழிதரும் பல்யாறு'*** ***(புறம்.42: 19-20)***

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இச்சிறப்பான செய்கையினைக் கொண்ட ஆறுகளை வெட்டுவித்து வறட்சியைப் போக்கி மக்களை வளம் கொள்ளச்செய்யும் நீரியல் மேலாண்மை மாண்பு சங்க மன்னர்களுக்கு அமைந்திருந்தது. பாண்டியன் நெடியோன் 'ப∴றுளி' ஆற்றை உருவாக்கியதை,

***"முந்நீர் விழவி னெடியோன்***
***நன்னீர்ப் ப∴றுளி மணலினும் பலவே"*** ***(புறம்.9: 10-11)***

இப்பாடல் அடியில் நெட்டிமையார் எனும் புலவர் முதுகுடுமிப் பெருவழுதியைப் புகழ்ந்து பாடும் பொழுது அவனது முன்னோனைப் புகழ்ந்துள்ளார். மேலும்,

***"பொலந்தார் மார்பி னெடியோன் உம்பல்"*** ***(மதுரை. 61)***

என்ற மதுரைக்காஞ்சி பாடலடியில் நெடியோன் என்பவன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் என்று மாங்குடி மருதன் குறிப்பிடுகின்றார். இப்பெயர் பெற்ற பாண்டிய மன்னன் முந்நீராகிய கடலின் செல்வத்துக்கு விழா எடுத்தான் என்றும், ப..்றுளி ஆற்றை உண்டாக்கினான் என்பதை, "முந்நீர் கடற்றெய்வத்திற் கெடுத்த விழாவினையுடைய நெடியோனால் உருவாக்கப்பட்ட நல்ல நீரையுடைய ப..்றுளியென்னும் ஆற்றின் மணலினும் பலகாலம்"[1] என்று ஔவை சு. துரைசாமிப்பிள்ளை உரை வழங்குகிறார். இதன் மூலம் ப..்றுளியாறு கடல்கோளால் அழியப்பட்டதற்கு முன்பு வாழ்ந்த நெடியோன் இவ்வாற்றை உருவாக்கினான் என்று பொருள் கொள்ளலாம். இது மிகப்பெரிய பேரிடர் மேலாண்மைச் சிந்தனை ஆகும். இன்றையக் காலகட்டத்தில் நதிநீர் இணைப்புத் திட்டம் என்ற ஒன்றை முன்வைத்திருப்பதன் காரணம் ஒரு பகுதியில் வளங்கள் அதிகம் பெற்று மறு பகுதியில் நீரின்மையால் ஏற்படும் வறட்சியைப் போக்குவதற்கேயாகும். சங்கச் சான்றோர்கள் இத்தகு வறட்சியால் ஏற்படும் பேரிடரைப் போக்கும் வகையில் ஆறுகளை அமைத்து தங்கள் நாட்டில் வறட்சிப் போக்கும் வகையில் மேலாண்மையுடன் ஆட்சி செய்துள்ளனர் என்பது புலப்படுகின்றது.

## ஆற்றுநீரால் பேரிடர் மேலாண்மை செய்தல்

குடகு மலையில் பிறந்த குளிர்ந்த காவிரி ஆறு, மிக்க ஆழத்தையுடைய புகார் கடலிலே சென்று கலக்கும் முன்பு தான் வரும் இடைப்பட்ட பகுதிகளில் வளங்களை அளித்து மக்களுக்கு வறட்சி மற்றும் உணவுத் தேவையைப் பூர்த்தி செய்து பேரழிவிலிருந்து பாதுகாவலை மேற்கொள்கின்றது. இதை,

> ***"குடமலைப் பிறந்த தண்பெருங் காவிரி***
> ***கடன்மண் டழுவத்துக் கயவாய் கடுப்ப"*** ***(மலை. 527-528)***

எனும் அடிகள் உணர்த்துகின்றது. வறட்சியிலிருந்து மக்களை மீட்டு வளம் கொடுக்கும் பணியைக் காவிரியாறு செய்கின்றது என்பதை,

> ***"...................... பன்மாண்***
> ***எல்லை தருநன் பல்கதிர் பரப்பிக்***
> ***குல்லை கரியவுங் கோடெரி நைப்பவும்***
> ***அருவி மாமலை நிகழ்த்தவு மற்றக்***
> ***கருவி வானங் கடற்கோள் மறப்பவும்***
> ***பெருவற னாகிய பண்பில் காலையும்***
> ***நறையு நரந்தமு மகிலு மாரமும்***
> ***துறைதுறை தோறும் பொறையுயிர்த் தொழுகி"*** ***(பொரு. 232-239)***

பல உயிர்களும் மாட்சிமைப்படுவதற்குக் காரணமாகிய கதிரவன் மிகுதியாகக் கதிர்களைப் பரப்புதலால், கஞ்சங்குல்லை தீய்ந்து போகவும், மரங்களின் கொம்புகளைத் தீ உண்ணவும், மலைகளில் அருவிகள் இல்லாது போகவும், முகில்கள் கடல்நீரை முகத்தலை மறந்தழியவும் என்ற இச்செயல்பாடுகளால் பெரிய வறட்சி, பஞ்சம் உண்டாகும். அத்தகைய காலத்தும் நாறைக்கொடியும் நரந்தம் புல்லும் அகிலும் சந்தனமாகிய சுமைகளைச் சுமந்து இளைப்பாறிப் பின் மேலும் நடந்து செல்லும் இயல்புடையது காவிரி என்று காவிரியின் தன்மை கூறப்பட்டுள்ளது. இவ்வாறு பல்வேறு புகழுடைய காவிரியானது மேற்கு திசையின் கண் பொன்படுகின்ற நெடிய குடகு மலையில், முகிலின் இடியேறு முழங்கின் பூப்பரந்த புது நீரையுடைய காவிரி உலகத்தைப் பாதுகாக்கும் என்று காவிரியாற்றின் பிறப்பும், அதன் சிறப்பும் உணர்த்தப்பட்டுள்ளது.

கோடைகாலத்தின் காரணமாக நிலம் வறட்சி, வளங்குன்றும் நிலை ஏற்படினும் அக்காலங்களில் காவிரியின் மூலம் நீரைப் பெற்று வளங்களைக் காத்து வாழ்ந்துள்ளனர். வறட்சி காரணமாகப் பேரழிவுகள் ஏற்படா வண்ணம் காவிரியாற்றின் நீர் பெற்று நீரியல் மேலாண்மை செய்தனர் என்பதனை,

***"கோடை யாயினுங் கோடே வொழுக்கத்துக்***
***காவிரி புரக்கும்"*** *(புறம்.393: 22-23)*

இப்பாடல் பதிவின் மூலம் அறியமுடிகிறது. மேலும், தோட்டங்களையும் நெல்விளையும் கழனிகளையும் கொண்ட அம்பர் எனும் ஊர் காவியாற்றினால் செழிப்பாக இருந்ததை,

***"காவிரி யணையுந் தாழ்நீர்ப் படப்பை***
***நெல்விளை கழனி யம்பர்"*** *(புறம்.385: 8-9)*

என்ற பாடலடிகள் விளக்கிச் செல்கின்றன. அறிவியல் தொழில்நுட்பம் என்ற ஒன்றை அறிந்திராத சங்கச் சான்றோர்கள் காலத்தைச் செலவு செய்து தாங்கள் பெற்ற அனுபவங்களைக் கொண்டு பல அளப்பரிய அறிவியல் உண்மைகளை,

***"அலங்குகதிர்க் கனலி நால்வயிற் றோன்றினும்***
***இலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினும்***
***அந்தண் காவிரி வந்துகவர் பூட்டத்***
***தோடுகொள் வேலின் றோற்றம் போல***
***ஆடுகட் கரும்பின் வெண்பூ நுடங்கும்***
***நாடெனப் படுவது நினதே யத்தை"*** *(புறம்.35: 6-11)*

என்ற பாடலடிகளில், சுடர் விளங்குகின்ற கதிர்களை உடைய ஞாயிறு நான்கு திசைகளிலும் தோன்றினாலும், ஒளியை உடைய கதிர்கள் வெள்ளி மீன் தென் திசைக்குச் சென்றாலும் அழகிய குளிர்ந்த காவிரி பல கால்வாய்களாய் பிரிந்து வளமூட்டிவிடும். அதனால் வேலின்

தொகுதிபோல கணுக்களையுடைய கரும்பு அசையும் போது கரும்பின் வெண்மையான பூவும் அசையும். இத்தகைய நின் நாடே நாடு என்று கிள்ளிவளவனின் நாட்டு வளத்தைக் குறித்து வெள்ளைக்குட்டி நாகனார் பாடியுள்ளார். இப்பாடலடிகளில் கதிரவன் நான்கு திசைகளிலும் தோன்றுதல், வெள்ளியானது வடதிசையில் இருந்து தென் திசையில் இயங்குதல் ஆகியன மழை பொழியாது வறண்டு போகச் செய்தது என்பதைச் சங்கச் சான்றோர் அறிந்திருந்தனர். ஆதலால் இவ்வாறு ஏற்படும் வறட்சிக் காலத்தில் குளிர்ந்த காவிரி நீரைப் பல கால்வாய்களாகப் பிரித்து பயிர் விளைவித்தலுக்குத் தேவையான நீரைப் பெற்றனர். இதனால் கரும்பானது செழிப்புடன் வளர்ச்சி பெற்றுள்ளது என்று கூறுகிறார். இதனை,

"மண்ணின் விளைவாற்றல், அம்மண்ணுக்குரியவனாம் உழவனுக்கு நிலத்தை உழுத பின்னர், நெல் முதலாம் உணவுப் பொருட்களை விளைவிக்கும் முறையினைக் கற்றுத்தந்தது. ஆறுகளின் இரு பக்கங்களிலும் படிப்படியாகத் தாழ்ந்து செல்லும் நில அமைப்பு, தங்கள் விளை நிலங்களுக்கு உயிர் ஊட்டும் நீரைக் கொண்டு செல்லும் முறையினை, வெள்ளத்தை அது விரும்புமாறு ஓடவிடாது, தாம் விரும்புமாறு கொண்டு சென்று, வெள்ளநீரை ஆட்சி கொள்ளவல்லராகிய வெள்ளாளர்க்குக் கற்றுத் தந்தது"[2] என்று தொடக்க காலங்களில் ஆற்றின் போக்கினை கால்வாய்களை வெட்டி வறட்சி ஏற்படும் முன்பு வயல் வெளிகளுக்குத் தேவையான நீரினை அளித்து நீரியல் மேலாண்மை செய்துள்ளதை அ. மார்க்ஸின் கூற்றுவழி உறுதியாகிறது. மேலும்,

> ***"தேறுநீர்ப் பரப்பின் யாறுசீத் துய்த்துத்***
> ***துறைதொறும் பிணிக்கும் நல்லூர்"*** *(புறம்.400: 21-22)*

என்ற பாடலின் மூலம், ஆரவாரத்துடன் ஓடங்களை நீர் பரந்த கடந்துச் செல்லும் வழியாகிய ஆற்றைச் செம்மை செய்து செலுத்தினர் என்பதன் மூலம் ஆற்றினை செம்மை செய்து எல்லா இடங்களிலும் பாய்ந்து வளம் பெருகச் செய்துள்ளனர். பெருகி வரும் காவிரி நீரை வீண் செய்யாது கால்வாய் அமைத்து வறட்சி போன்றவற்றின் மூலம் நீரின்மையால் ஏற்படும் பேரிடரை மேலாண்மை செய்துள்ளனர் என்பது புலப்படுகிறது.

நீர் வளத்தைப் பெருக்க வேண்டுமானால் இயற்கை வளங்களான மலைகளையும், காடுகளையும் காத்தல் அவசியம். மலையிலிருந்து வரும் மழை நீரானது தான் செல்லும் அனைத்துப் பகுதிகளையும் வளப்படுத்திவிட்டு இறுதியில் கடலில் சென்று கலப்பதை,

> ***"இமையவ ருறையுஞ் சிமையச் செவ்வரை***
> ***வெண்டிரை கிழித்த விளங்குசுடர் நெடுகோட்டுப்***
> ***பொண்கொழித் திழிதரும் போக்கருங் கங்கைப்***
> ***பெருநீர் போகும் இரியல் மாக்கள்***
> ***ஒருமரப் பாணி"*** *(பெரும். 429-433)*

இப்பாடலடியில் நெடிய சிகரத்தினின்றும் பொன்னைக் கொழித்துக் கொண்டு குதிப்பதும், மக்கள் கடத்தற்கு அரிதாகவும் உள்ள கங்கையாற்றைக் கடந்து செல்ல விரும்பும் மக்கள் தோணியைப் பயன்படுத்தினர். கங்கையின் செழிப்பையும் வெள்ளம் வரும் காலங்களில் அதனைக் கடக்க மக்கள் தோணியைப் பயன்படுத்தி, அதிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொண்டதையும் உணரமுடிகிறது.

ஒரு நாட்டின் வளம் என்பது அந்நாட்டில் இயற்கை அன்னையால் உருக்கொண்ட ஆற்றின் வளத்தை முதன்மையாகக் கொண்டே அமைகிறது என்பதை,

*“.................. மலி புகழ்*
*வையை சூழ்ந்த வளங்கெழு வைப்பிற்”* *(புறம்.71: 9-10)*

எனும் வையை ஆற்றின் வளத்தைக் காட்டுவதிலிருந்து அறியலாம். இயற்கையின் அரிய படைப்புகளில் ஒன்றான ஆறு மனித வாழ்விற்கு அடிப்படை ஆதாரமாக இருந்து வருகின்றது என்பது மேற்கண்ட பாடலடிகள் புலப்படுத்துகின்றன. மேலும் வையை ஆற்றினால் உலகம் வளம் பெற்றது எனும் செய்தியை,

*“ஆநா ணிறைமதி அலர்தரு பக்கம்போல்*
*நாளி னாளி னளிவரைச் சிலம்புதொட்டு*
*நிலவுப்பரந் தாங்கு நீர்நிலம் பரப்பி*
*உலகுபயம் பகர ஓம்பு பெரும்பக்கம்”* *(பரி.11: 31-34)*

எனும் அடிகளில் நல்லந்துவனார் பதிவு செய்துள்ளார். பிறைநிலவு தோன்றிய நாள் தொடங்கி நாளுக்கு நாள் வளர்கின்ற வளர்பிறையைப் போல் நாளுக்கு நாள் வளர்ந்து அதன் நிலவொளி உலகம் எங்கும் பரவுவதைப் போல, செறிந்த மலைச்சாரல் முதலாக நிலப்பரப்பு எங்கும் நீரைப்பரப்பி உலகத்திற்குப் பயனை விளைவித்துக் கொடுத்து பாதுகாத்து வரும் இயல்புடையது வையை ஆறு என்று வையை ஆற்றின் சிறப்பு கூறப்பட்டுள்ளது. மேற்கூறிய பாடல்களின் மூலம் சங்க காலத்தில் மழைவளம் குறைந்த காலக்கட்டத்தில் காவிரி, கங்கை, பொருநை, வையை போன்றவை நீரியல் மூலங்களாக இருந்தன. அவ்வாறுகளின் நீரினைக் கால்வாய் அமைத்தும் செப்பனிட்டும் நீர்மேலாண்மை செய்துள்ளனர். இதனால் வறட்சி போன்றவற்றால் ஏற்படும் பேரிடர் நீங்கியதை அறியலாம். மேலும் இயற்கை வளங்களை முறையாக மேலாண்மை செய்யும் திறமும் சங்கமக்கள் பெற்றிருந்தனர் என்பதை அறியமுடிகிறது.

## அணைகள் கட்டி நீரைத் தேக்கும் நீரியல் மேலாண்மை

இயற்கைச் சீற்றமான பெருவெள்ளத்திலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ள அணைகள் பயன்பட்டுள்ளதை,

*“மழைநீங்கிய மாவிசும்பின்*
*மதிசேர்ந்த மகவெண்மீ*
*னுருகெழுதிற லுயர்கோட்டது”* *(பட். 34-36)*

எனும் பாடலடியில் மடை மாசு நீங்கிய பெரிய ஆகாயத்தில் திங்களைச் சேர்ந்து விளங்கும், மகம் என்னும் வெண்ணிற நாள் மீனின் வடிவத்தைப் போன்ற வடிவத்தைக் கொண்டதாக வலிமையுடன் அமைக்கப்பட்ட உயர்ந்த கரைகளைப் பெற்ற நல்ல பொய்கை என்று நீர் மிகுதியால் அருகில் உள்ள நிலங்கள் பாழ்படாமல் இருக்க வெண்ணிற நாள் மீனின் தோற்றம் போன்று கரைகளை அமைத்துள்ளனர். மேலும்,

*“வருபுனல் கற் சிறை”* *(மதுரை. 725)*
*“வருவிசைப் புனலை”* *(தொல்.புறம்: 7.7)*
*“கொல்புனற் சிறையின் விலங்கியோன்”* *(புறம்.263: 8)*

எனும் அடிகளிலும், கரையை உடைத்துச் செல்லும் பெருவெள்ளத்தைத் தாங்கி நிற்கும் அணையைப் போன்று வீரன் செயல்பட்டான் என்று வீரத்தின் அடையாளத்தைக் குறிப்பதாயினும் ஆற்றின் இடையே அணைக்கட்டிய நிலையைப் புலப்படுத்துகின்றன.

“மழை வேளாண்மை தொடக்கம் நீரியல் வேளாண்மை வரை தமிழகத்தின் பாசன வளர்ச்சி தமிழர்களின் அறிவியல் திறனை எடுத்துக் காட்டுகிறது. மழை தொடர்பான வானியல் அறிவு, நீரியல் கோட்பாடுகள், ஏரிகள் அமைப்பதில் தேர்ந்த தொழில்நுட்பம், மணற்பாங்கான ஆறுகளிலும் அணை கட்டும் வடிவமைப்பும் நீரியல் வடிவமைப்புகளும் தமிழர்தம் பொறியியல் வல்லமையைக் காட்டுகின்றன”[3] என்ற பழ. கோமதிநாயகத்தின் விளக்கத்தின் மூலம் தமிழர்கள் நீரியல் மேலாண்மை செய்துள்ளது தெளிவாகின்றது.

வையை ஆற்றில் உடைப்பெடுத்து கரையை அடைத்த பின்னும் மீண்டும் ஊற்றுநீர் ஒழுகுவதை,

*“வையை உடைந்த மடையடைத்தக் கண்ணும்*
*பின்னு மலிரும் பிசிர்போல”* *(பரி.6: 82-83)*

என்ற பதிவின் மூலம், வையை அணைக்குக் கரையமைத்து நீரைச் சேமித்ததை உணர்த்துகின்றது. பாறைக் கல்லிணையுடைய நிலம் போன்று அசையாத பரந்த கல்லணையால் தடுக்கப்பட்டுத் தேக்கி வைத்த நீர் என்று நீரினைத் தேக்குவதற்குத் திடமான பாறை போன்ற கல்லினைக் கொண்டு அணைக்கட்டி நீரைத்தேக்கினார் என்பதை,

*“பாறைப் பரப்பின் பரந்த சிறைநின்று”* *(பரி.12: 83)*

இப்பாடலடிகளால் அறியலாம். கரிகாலனால் கட்டப்பட்டதாகக் குறிப்பிடப்படும் கல்லணையின் கட்டமைப்பைப் பற்றி, “ஆற்று மணல்படுகையில் மிகப்பெரிய பாறை போடப்பட்டது. பாறைக்கு அடியில் உள்ள மணல் ஆற்றுநீரில் அரித்து இழுத்துச் செல்லப்பட்டதால், பாறை மெதுவாக மணலுக்குள் புதைந்தது. அதன் மேல் களிமண்ணைப் பரப்பிவிட்டு மற்றொரு பெரிய பாறை வைக்கப்பட்டது. இப்போது அடியில் உள்ள பாறை மேலும் ஆழத்திற்குள் புதையும். இப்படி ஒன்றன் மேல் ஒன்றாகப் பெரிய பாறைகளை அடுக்கிப் புதைத்திருந்தனர். மணல் பகுதி முடிந்து கடினப்பகுதி வந்ததும் கீழ்மட்டத்தில் உள்ள பாறை இறங்காது. இப்படித்தான் கல்லணை கட்டப்பட்டிருந்தது”[4] என்று பழ. கோமதிநாயகம் குறிப்பிடுகின்றனர். இவ்விளக்கத்தின் வாயிலாக சங்கத் தமிழர்கள் அணைகள் கட்டி நீரினைத் தேக்கி, நீரியல் மேலாண்மைச் செய்த திறத்தை உணரலாம்.

ஆற்று நீரை அணைகள் கட்டி தேக்கிய நிலையில் அளவிற்கு அதிகமான வெள்ளப்பெருக்கு ஏற்பட்டு தடுப்புகள் உடைந்தது. அவ்வுடைப்பினால் பேரழிவு ஏற்படாமல் உயிர்களைக் காக்கும் பொருட்டு ‘பறை’ முதலிய கருவிகள் கொண்டு அணைக் காவலன் மக்கள் பாதுகாப்பான இடங்களுக்குச் செல்ல வெள்ள எச்சரிக்கை விடுத்ததை,

> ***“வரைச்சிறை யுடைத்ததை வையை வையைத்***
> ***திரைச்சிறை யுடைத்தன்று கரைச்சிறை அறைகெனும்***
> ***உரைச்சிறைப் பறையெழ வூரொலித் தன்று”*** ***(பரி.6: 22-24)***

என்ற பாடலில், வையையில் ஏற்பட்ட வெள்ளத்தினால் சிறகுகளாகிய அலைகள் காவலையுடைய மலை போன்ற அணைகளை உடைத்தன. உடைந்த கரைகளை அடைப்பதற்கு ஆள் எழுந்து வருக என்று கூறும் கரை காப்பாளரின் சொல்லாகிய ஒலியொடு பறையின் ஒலியும் எழுந்திட அவ்வொலிகளுடன் கிளர்ந்து எழும் ஊர் மக்களின் ஆரவாரமும் சேர்ந்து ஒலித்தன. இப்பாடலில் சங்ககாலத்தில், மழை பெய்யும் காலத்தே மிகுதியான நீரினை அணைகள் கட்டி தேக்கி வைத்ததோடு அணைகளுக்குக் காவலாக ஆட்கள் நியமித்து பாதுகாத்தனர் என்பதும் புலப்படுகிறது. அணை உடைந்ததை மக்களுக்கு அறிவித்து, மக்கள் அனைவரும், ஒன்று கூடி கரையை அடைக்க முற்பட்டனர் என்பதன் மூலம் சங்ககால மக்கள் ஒன்றிணைந்து அணைகளை உருவாக்கியிருக்கலாம் என்பதை அவதானிக்க முடிகிறது. மேலும், அதில் ஏற்படும் குறைபாடுகளை ஒன்று கூடி களைய முற்பட்டதன் மூலம் சங்கமக்கள் முறைசார் மேலாண்மை என்ற அமைப்பில் நீரியல் மேலாண்மை செய்துள்ளனர் என்பது தெளிவாகின்றது. மற்றொரு பதிற்றுப்பத்துப் பாடலில், தோலினால் போர்த்து முழக்கப்பட்ட பறை ஓசையால் உழவர்களை, ஊர் மக்களை அழைத்து புது வெள்ளத்தினால் மடைகள் உடைத்துக் கொண்டு செல்லாதபடி அவ்வெள்ளத்தை அடைப்பர் என்பதை,

*'போர்த்தெறிந்த பறையாற் புனல்செறுக் குநரும்'* *(பதிற்.22: 28)*

என்ற அடிகளால் உணரலாம். இதனை ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை, "புதுப்புனல் மிக்க கரையை யுடைத்துப் பெருகி வருங்கால் உடைமையைக் கட்டுவதற்குப் பறையறைந்து கடையரைத் தருவித்துத் தொடுத்தல் பண்டையோர் மரபாதலால் போர்த்தெறிந்த பறையால் புனல் செறுக்குநரும் என்றார். புனலடைக்கும் குறிப்பைத் தன்னோசையால் தெரிவித்ததற்குப் பறையே யேற்றதாதலால் அதனை விதந்தோதினார்"[5] என்று சங்கத் தமிழர்களின் புனல் சார்ந்த பேரழிவு ஏற்படா வண்ணம் மேலாண்மை செய்துள்ள திறத்தை தம் உரையில் குறிப்பிட்டுள்ளார். மேலும்,

"ஒரு நாட்டின் நீர்நிலைகள் என்பவை அந்நாட்டின் உயிர் நாடிகளாக அமைகின்றன. அவ்வகை நீர்நிலைகளை உருவாக்கினால் மட்டும் போதாது. அவற்றை இயற்கைச் சீற்றங்களிலிருந்தும், எதிரிகளிடமிருந்தும், விலங்குகளிடமிருந்தும், பாதுகாத்தல் வேண்டும். நீர்நிலைகளை உருவாக்குதலும், அவற்றைக் காத்தலும் நாட்டின் வளர்ச்சிக்கு ஏற்ற செயல்களாக அமைகின்றன. அவ்வகையில், இயற்கை சீற்றங்களிலிருந்து, எதிரிகள் மற்றும் விலங்குகளிடமிருந்து நீர்நிலைகளைக் காக்க, காவலர் அமர்த்தப்பட்டனர்."[6] இதன்மூலம் வெள்ளம் என்பது பெருக்கெடுத்து மிகுமானால் அது மக்களுக்கும், பிற உயிரினங்களுக்கும் பேரிடரை ஏற்படுத்தும் என்பதை அறிந்து அணைகளைக் கட்டி நீரைத் தேக்கி வறட்சிப் போன்ற தேவையானக் காலங்களில் அதனைப் பயன்படுத்தியுள்ளனர். மேலும், அணைகளை உயிரினங்களிடமிருந்தும் எதிரிகளிடமிருந்தும் பாதுகாக்க காவலாட்களை நியமித்து நீரியல் மேலாண்மை செய்துள்ளனர் என்பதை மேற்கண்ட பாடல்கள் மற்றும் விளக்கங்களின் மூலம் தெளிவாகின்றது.

## குளத்தின் தன்மை

சங்கால மக்கள் ஆற்றுநீர் மட்டுமல்லாது மழைக் காலங்களில் பெய்த மழை நீரினைக், குளங்கள் அமைத்துத் தேவைப்படும் காலங்களில் பயன்படுத்தி நீர் மூலம் பேரழிவுகள் ஏற்படாவண்ணம் நீரியல் மேலாண்மைச் செய்துள்ளனர். கோடை காலத்தினால் வறட்சி ஏற்படா வண்ணம் அமைத்த குளங்கள் ஆழம் நிறைந்ததாக இருந்தது. அக்குளங்களை காவல்புரிய காவலாளிகளைப் பணிக்கு நியமித்தனர் என்பதை,

***"கோடை நீடினும் குறைபட லரியாத்***
***தோடாழ் குளத்த கோடுகாத் திருக்கும்"*** *(பெரு. 272-273)*

இப்பாடலடிகள் உணர்த்துகின்றன. மண்ணால் தூர்ந்த குளங்களைத் தோண்டி நாட்டின் செல்வ வளத்தைப் பெருக்கியதோடு, ஒரு நாட்டிற்கு நீர் மிகவும் இன்றியமையாதது என்பதை உணர்ந்து, அந்நாட்டில் உள்ள குளங்களையெல்லாம் தூர் வாரி, செப்பம்

செய்து அதனுள் நீரினைத் தேக்கி வைத்து மக்களின் நீராதாரத்தைப் பெருக்கி வளமாக வாழ்ந்துள்ளனர் சங்கச் சான்றோர்கள் என்பதனை,

*"குளந்தொட்டு வளம் பெருக்கிப்"* *(பட். 284)*

*"நிலனெளி மருங்கிற் நீர்நிலைப் பெருக்கி"* *(புறம்.18: 28)*

எனும் அடிகள் உறுதிப்படுத்துகின்றது.

## குளத்தில் நீரைத் தேக்கி பயன்படுத்துதல்

பாறைகளையும், சிறு மலைகளையும் இடையிடையே அமைய இணைத்து எட்டாம் நாள் பிறை வடிவில் கரைகளை உடைய ஏரிகளின் தெளிந்த நீரை உடையது சிறுகுளம். அதனைப் பாதுகாப்பார் இல்லாமையால் உடைவது போன்ற பாரியின் பறம்பு மலை இருந்ததை,

*"அறையும் பொறையு மணந்த தலைய*
*எண்ணாட் டிங்க ளணைய கொடுங்கரைத்*
*தெண்ணீர் சிறுகுளங் கீள்வது"* *(புறம்.118: 1-3)*

என்று கபிலர் பதிவு செய்துள்ளார். இதில் சங்ககாலத்தில் மக்கள், தங்களுக்குத் தேவையான குடிநீர் ஆதாரத்தைத் தேவைக்கு அதிகமான போது, வறட்சி காலங்களில் நீரின் தேவைக்கருதி குளங்களில் அந்நீரினை வீணாக்காமல் தேக்கி வைத்துப் பாதுகாத்தனர் என்பதும், அந்நீரால் மக்களுக்கு எவ்வித தீங்கும் ஏற்படா வண்ணம் அணைகள் அமைத்து ஆட்களை நியமித்து பாதுகாத்தனர் என்பதும் புலப்படுகிறது. சங்க மக்கள் அமைத்த அணைகளின் உறுதி பற்றி, "ஏரிகள் அமைக்கும் போது இடத்தேர்வு, வடிவம், நீர்வளம் போன்றவை கவனத்துடன் தீர்மானிக்கப்பட்டதுடன், காரை, மடை, கலிங்கு போன்ற கட்டுமானங்கள் தொழில்நுட்ப அடிப்படையில் உலகத்தரம் வாய்ந்தவையாக இருக்கின்றன"[7] என்பதன் மூலம் சங்ககால மக்கள் அணைகளை மிகவும் உறுதிபட அமைத்துள்ளனர் என்பது புலப்படும். இதனால் சங்க மக்களின் நீர் சார்ந்த மேலாண்மைப் பாங்கு தெளிவாகிறது.

வேளாண் தொழிலுக்கு ஆதாரமாக இருப்பது மழை நீராகும் என்பதை நன்கறிந்த சங்ககால மக்கள் பருவமழை பெய்யும் காலங்களில், வேளாண்மை செய்தல் பொருட்டு ஆங்காங்கே குளங்கள் வெட்டி, மழைநீரைச் சேமித்து வைத்தனர். பருவ மழை பொய்த்த காலங்களில் அக்குளத்திலுள்ள நீரைக் கொண்டு தொழில் செய்து தங்கள் தேவைகளை நிறைவு செய்து கொண்டதற்கான பதிவாக,

*"………… குணகடல் கொண்டு குடகடல் முற்றி*
*…………………………………………*
*…………………………………………*
*நிவந்துசெ னீத்தங் குளங்கொளச் சாற்றி"* *(மதுரை. 238-246)*

இப்பாடலில் மேகங்கள் கீழ்த்திசைக் கடலில் நீரை முகந்து, மேற்றிசைக் கடலருகேயுள்ள மலைப்பகுதிகளில் தங்கின. இரவும், பகலும் எங்குச் செல்வது என அறியாமல் பள்ளமும் மேடுமாகிய பல நிலப்பகுதிகளில் உள்ள நீருடன் திரண்டு எழுந்தன. கவலைக் கிழங்கு தோண்டிய அழகிய குழிகளில் மழைநீர் வீழ்ந்தது. மழைநீரால் அருவிகள் பெருகி ஒலித்தன. மூங்கில் வளர்ந்த மலைப்பகுதிகளில் வாழும் யானைக் கூட்டங்கள், நடுங்குமாறு ஒலிக்கும் இடியுடன் பரந்து சிதறிப் பெருமழைப்பெய்தது. ஆறுகள் மழையின் பெருவெள்ளத்தைத் தாங்க இயலாமையால், ஆற்றிடைக் குளங்களில் ஓங்கிப் பெருகிற்று. அவ்வாறு வரும் நிறத்தை உடைய மழைநீர் இடைப்பட்ட குளங்களை நிறைத்து கீழ்த்திசைக் கடலை நோக்கிப் பரந்து சென்றது. முன்பு கிழங்கு எடுத்த குழிகளை மழைநீர் நிரப்பியது. இங்கு, குளங்களை மழைநீர் நிரப்பியது என்ற பதிவின் மூலம் தொடக்க நிலையில் இயற்கையான குழிகளில் மழைநீர் தேங்கியதை உணர்ந்த மனிதன் அதன் காரணமாகக் குளங்களை வெட்டத் தளைப்பட்டு, குளங்களின் மூலம் மழைக்காலங்களில் பெய்யும் அதிக அளவிலான மழையால் மழை நீரைச் சேமித்து வறட்சி காலங்களில் பயன்படுத்த முற்பட்டான் என்பது புலப்படுகிறது. இதன்மூலம் சங்ககால மாந்தர்களின் நீரியல் மேலாண்மை வளர்ச்சி தெளிவாகின்றது.

தொடக்ககாலத்தில் மழையின் அவசியத்தை அறிந்து வறட்சி ஏற்படும் காலத்தில் தேவையான நீரை மழைப் பெய்யும் காலத்திலேயே குழிகள் வெட்டி தேக்கினர். பல்வேறு குழிகள் ஒன்று சேர்த்தி பெரிய குளங்களை வெட்டினர் என்பதும், அக்குளங்களுக்குக் கரையமைத்தும் காவல் புரிந்தனர் என்பதற்கானச் சான்றுகள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றது.

> ***"வான்மடி பொழுதி னீர்நசைஇக் குழித்த***
> ***அகழ்சூழ் பயம்பின்........."*** ***(பெரும். 107-108)***

என்ற பாடலில், மழை வறண்ட காலத்தில் நீர்ப் பெரும் பொருட்டு தோண்டப்பட்ட பலப் பகுதிகள் காணப்படும் என்பதன் வாயிலாக நீரின்மையால் ஏற்படும் வறட்சியினால் பேரழிவு ஏற்படாவண்ணம், மேலாண்மை செய்த திறம் அறியப்படுகிறது. பின்வரும் பாடலிலும் நீரியல் மேலாண்மைக் குறித்த செய்திகளை,

> ***"திரையிரும் பனிப்பெளவம் செவ்விதா வறமுகந்***
> ***துரவுரு முடன்றார்ப்ப ஊர்பொறை கொள்ளாது***
> ***கரையுடை குளமெனக் குழன்றுவான்"*** ***(பரி.7: 1-3)***

மேகமானது முழங்கும் அலைகளையும், கரிய நிறத்தையும், குளிர்ச்சியையும் உடைய பெரிய கடல் வற்றிப் போகுமாறு அதன் நீரை முகந்து கொண்டு வந்து வலிமை மிக்க பெரிய இடி சினத்துடன் முழங்கும் படியாகச் செய்தது. தம்மேல் ஏற்பட்ட நீரின் பாரம்

தாங்க முடியாமல் தன் வயிறு கிழிந்தது போலவும் கரையுடைந்த குளத்தின் நீா் குளத்தினை விட்டு வெளியேறுவதைப் போலவும் மேகம் பெருமழைப் பெய்தது என்ற பதிவின் மூலம் மழைக்காலங்களில் நீரைத் தேக்கி வறட்சி போன்ற காலங்களில் பயன்படுத்த குளங்கள் போன்றவற்றை மக்கள் ஒன்றிணைந்து முறைசாா் மேலாண்மை செய்ததை இப்பாடல் வெளிப்படுத்துகின்றது.

குளிா்ந்த நீா் பரந்த ஓசையையுடைய உடைப்புகள் மண்ணால் அடைக்கப் பெறாமல் மீனால் அடைக்கின்ற வளத்தை,

***"தண்புனல் பரந்த பூசல் மண்மறுத்து***
***மீனிற் செறுக்கும்......"*** ***(புறம்.7: 11-12)***

என்ற பாடலில், நீரினைத் தேக்கி வைக்கும் வழக்கமும் அதற்கு மண்ணால் அணைகட்டும் திறத்தையும் அறியமுடிகிறது. இப்பாடலில் நீா் பெருக்கத்தால் பேரிழப்பு ஏற்படுவதைத் தடுக்க மண்ணால் அவ்வுடைப்பைச் சரி செய்யும் வல்லமைப் பெற்றுச் சங்கச் சான்றோா் திகழ்ந்துள்ளனா் என்பது புலப்படுகிறது. "ஏரிகளை ஈரமான களிமண் கலவையில் அமைப்பது அவசியம் என்ற ஆங்கிலேய பொறியாளா்களின் கருத்துக்கு மாறாகப் பண்டைய தமிழா்கள் எல்லாவிதமான விளைநிலங்களின் மண் எடுத்து பல்லாயிரக்கணக்கான ஏரிகளை மண் கரை கொண்டு கட்டியுள்ளாா்கள்"[8] என்ற சா். ஆா்தா். காட்டனின் கூற்றின் மூலம் மண்ணால் கட்டப்பட்ட அணைகளின் திடத்தன்மையினையும் சங்கத் தமிழா்களின் நீரியல் மேலாண்மையையும் அறியமுடிகின்றது. குளங்களில் கட்டிய அணைகள் உடைந்துவிடாது ஆட்கள் வைத்து பாதுகாத்தனா் என்பதனை,

***"...... ............ .................. ஈங்கைத்***
***துய் யவிழ் பனிமலா் உதிர வீசித்***
***தொழின்மழை பொழிந்த பானாட் கங்குல்,***
***எறிதிரைத் திவலை தூஉஞ் சிறுகோட்டுப்***
***பெருங்குளங் காவலன்"*** ***(அகம்.252: 9-13)***

இப்பாடல், ஈங்கையின் குளிா்ந்த மலா்கள் உதிருமாறு மேகம் பெருமழை பெய்த நள்ளிரவில், அலைகள் மோத அதன் துளிகள் பரத்தலால் சிறிய கரையினையுடைய பெரிய குளமானது உடைப்பு ஏற்பட்டு பேரழிவுகள் ஏற்படாவண்ணம் காவல் செய்யும் பொருட்டு காவலாட்களை அமைத்துள்ளனா்.

"செங்கல்பட்டு மாவட்டத்தில் இராமன்சேரி என்றோா் ஊா் உள்ளது. இதன் பழைய கல்வெட்டுப் பெயா் இராமதகு காவல்சேரி என்பதாகும். இரவிலும் மதகிலிருந்து நீா் வெளியேறுவதைக் கண்காணிக்கவும் மதகுகளைக் காக்கவும் பணிபுரிந்த பணியாளா்களின்

குடியிருப்பு இருந்ததையும் இது காட்டுகின்றது"[9] என்ற கல்வெட்டுச் சான்று மூலம் காவலமைத்து சங்கச் சான்றோர்கள் நீரியல் மேலாண்மை செய்தனர் என்பது புலப்படும். இவை அனைத்தும் நீர் சார்ந்த பேரிடர் ஏற்படும் முன்பே முறைசார் மேலாண்மை செய்ததை வெளிப்படுத்துகின்றன.

இன்றைய காலகட்டத்தில் நீர் இன்மையால் பெருவாரியான விளைநிலங்கள் வறட்சியுற்று அழிவை நோக்கிச் சென்று கொண்டிருக்கின்றன. மழை பெய்யும் காலத்தில் நீரைத் தேக்கும் பண்பு இக்கால கட்டத்தைவிட சங்க காலத்தில், வறட்சி, மற்றும் வெள்ளம் போன்ற பேரிடர் ஏற்படா வண்ணம் வளங்களையும், மக்களையும் பாதுகாத்துள்ளனர் என்பது தெளிவாகின்றது. இன்றைய அணைகட்டுதல் போன்ற கலைகளுக்கும் பேரிடர் தீர்க்கும் மேலாண்மைத் திறத்திற்கும் சங்கச் சான்றோர்களே முன்னோடியாகத் திகழ்ந்துள்ளனர் என்பதும் உறுதியாகிறது.

## கிணற்றுநீர் மூலம் நீர்மேலாண்மை

நாடோடி வாழ்க்கை வாழ்ந்த மனிதன் ஓரிடத்தில் நிலையான வாழ்க்கை மேற்கொள்ள எண்ணியதன் வளர்ச்சி நிலையே வேளாண்மைத் தொழிலாகும். காடுகளைத் திருத்தி பண்பட்ட நிலமாக மாற்றி அதனை தனக்குத் தேவையான உணவுப் பொருட்களை விளைவிக்கும் களமாக மாற்றினான். அதற்கு ஆதாரமான நீரைக் கிணறுகள் வெட்டி அவற்றிலிருந்து வன்புலத்தில் வேளாண்மை செய்தான்.

> ***"கல்லறுத் தியற்றிய வல்லுவர்க் கூவல்***
> ***வில்லேர் வாழ்க்கை"*** *(புறம்.331: 1-2)*

இப்பாடலில், கல்லைப் பிளந்து உண்டாக்கிய வலிய உவர்ப்புத் தன்மையுடைய நீரினைக் கொண்ட சிறிய ஊரில், விற்போறாகிய உழவுத் தொழிலால் வாழும் வாழ்க்கை என்று பதிவு செய்யப்பட்டுள்ளது. சங்க காலத்தில் கல்லைப் பிளந்து கிணறுகளையும், களங்களையும் தோண்டி புன்செய் நிலங்களில் நீர்ப்பாசனம் செய்து உணவினை உற்பத்தி செய்துள்ளனர் என்பது புலப்படுகிறது.

"மழைநீரை ஏரி, குளங்களில் தேக்கி வைத்துப், பாசனக் கால்வாய்கள் மூலம் தங்கள் விளை நிலங்களுக்குச் செலுத்தவும், கிணறுகளிலிருந்தும், நீர் ஊறும் காலங்களிலிருந்தும் நீரேற்றுவான் மூலம் நீரை மேலே கொணர்ந்து, தாங்கள் பயிரிடும் நிலத்துண்டுகளுக்குப் பாசனம் அளிக்க வல்லவரும், பெய் எனக் கூறும்போது பெய்யுமாறு கார்மேகங்கள் மீது ஆட்சி செலுத்த வல்லவருமாகிய காராளர் ஆற்றுப்படுகைக்கு அப்பாற்பட்ட மேட்டுப்பகுதிகளில் வாழ்ந்திருந்தனர்."[10] இக்கூற்றின் மூலம் சங்ககாலத்தில் ஆற்றுப்படுகைகளை விடுத்து

வன்புலங்களாகிய மேட்டுநிலப்பகுதிகளில் கிணற்று நீரைக் கொண்டு நீர்ப்பாசனம் செய்தனர் என்பது புலப்படும். மழையின்மை வறட்சி போன்ற காலங்களில் ஏற்படும் பேரழிவு இதன் மூலம் தவிர்க்கப்பட்டுள்ளது என்பதை உணரமுடிகிறது.

வன்னிலத்தில் கூழ் உண்ணும் கோவலர்கள் வலிய வாயினையுடைய குந்தாலியால் வெட்டிக் கிணறுகள் தோண்டியதை,

***"வல்லூற் றுவரி தோண்டி"*** ***(பெரும். 97)***

இப்பாடலடியானது உணர்த்துகின்றது. வன்புலமாகிய புன்செய் நிலங்களில் மழையினை நம்பியே வேளாண்மை செய்து தங்களின் வாழ்வை நடத்தினார்கள். மழையானது பொய்த்துப் போகும் காலத்தில், மக்கள் குடிப்பதற்கு நீரின்றி, கிணறுகளைத் தோண்டி வளமை அடைந்திருப்பதை,

***"பரல்மண் சுவல முரணிலம் உடைத்த***
***வல்வாய்க் கணிச்சிக் கூழார் கூவலர்***
***ஊறா திட்ட உவலைக் கூவல்"*** ***(அகம்.21: 21-23)***

என்ற, பதிவு கிணற்று நீரினால் வளம் பெற்று வாழ்ந்துள்ளனர் என்பதை உணர்த்துகின்றது. கொங்கர் நாட்டின் உவமையைச் சுட்டும் பாடலில் நீர் மேலாண்மை செய்தமைக் குறித்து,

***"பொன்செய் கணிச்சித் திண்பிணி யுடைத்துச்***
***சிரறுசில வூறிய நீர்வாய்ப பத்தற்***
***கயிறுகுறு முகவை மூயின மொய்க்கும்***
***ஆகெழு கொங்கர் நாடு"*** ***(பதிற்.22: 12-15)***

இரும்பினால் செய்த கணிச்சி எனும் குந்தாலியால் திண்ணியதாகச் செறிந்த பாறையினை உடைத்தமையால், சிதறின போல சிலவாக ஊறிய நீரினைத் தம் இடத்தே பெற்ற குழியின் பக்கத்தே நீண்ட கயிற்றோடு கூடிய பாத்திரத்தைச் சுற்றி அப்பாத்திரத்தை மறைத்துக் கொண்டவை போன்று பசுக்கள் மொய்த்து நிற்கும் தன்மை கொண்டது. சங்ககாலத்தில், வன்நிலமாகிய நீர் இல்லாத நிலத்தில் நீரின் வேட்கையினால் நிலத்தில் உள்ள பாறைகளைக் 'கணிச்சி' எனும் பொன்னால் செய்த கோடாரியால் உடைத்து கேணியை உருவாக்கினர். கயிறு கொண்டு முகவையின் மூலம் நீரினைப் பெற்று தானும் தன்னைச் சார்ந்த நிரைகளாகிய பிற உயிரினங்களையும் பாதுகாத்து நீர்மேலாண்மை செய்துள்ளனர்.

"பல்லவர் காலத்துக்கு முன் இரும்பின் பயன்பாடு மிகுதியும் வேளாண் கருவிகள் உற்பத்தியைச் சார்ந்தாக இருக்கவில்லை என்றே தோன்றுகிறது. மருதநில நாகரிக அரசுகளின் தேவைக்கும் அன்னிய வர்த்தகத்துக்கும் இரும்பு பெருமளவு பயன்பட்டதாகவே

அறிய முடிகிறது. ஏரிகளையும், கிணறுகளையும் வெட்ட பெருமளவு இரும்புக் கருவிகள் பயன்பட்டன. கணிச்சி என்ற கருவி மூலம் கிணறு தோண்டப்பட்டது"[11] என்பதன் மூலம் சங்க காலத்தில் இரும்பானது தொடக்க நிலை வேளாண்மைத் தொழிலின் தேவையை முன்வைத்து பயன்படுத்தப்பட்டு பின்பு வேந்தர் மரபுருவாக்கம் இரும்பின் பயன்பாட்டை அடுத்த நிலைக்குக் கொண்டு சென்றுள்ளதை உணரமுடிகிறது.

வெப்பத்தின் காரணமாகச் சூடேறிய பரல்கள் மிகுந்த பள்ளம். அத்தகு பக்கத்தில் கோடாரியால் தோண்டப்பட்ட கிணறு, அக்கிணற்று நீரின் மூலம் பசுக்களுக்கு நீரை அளிக்கும் ஆயர்கள் நீர் நிரப்பினர். அத்தகைய பள்ளத்திலுள்ள நீரை யானைகள் வரிசையாகச் சென்று குடிப்பதை,

***"வெயில்வெய் துற்ற பரலவல் ஒதுக்கில்***
***கணிச்சியிற் குழித்த கூவல் நண்ணி***
***ஆன்வழிப் படுநர் தோண்டிய பத்தல்***
***யானை இனநிரை வௌவும்"*** *(நற்.240: 6-9)*

பாலை நில வெப்பத்தின் கொடுமையினால் நீரின்றி வன்புலமான நிலத்தில் கிணறு தோண்டி அதன் மூலம் தான் நீரினைப் பெற்றதோடு, அங்கு வாழும் உயிர்களுக்கும் நீரினைக் கொடுத்து அவை உயிர் வாழ வகை செய்துள்ளனர். இப்பண்பு சங்ககாலத்து மக்களின் இரக்கவுணர்வினையும், நீரியல் மேலாண்மைத் திறத்தையும் வெளிப்படுத்துவதாக உள்ளது.

"மேலே அகலமாக அகழ்வது கூவலென்றும், அதனுள்ளே குறுகிய வாயுடைத்தாய ஆழமாய்த் தோண்டப்படுவது பத்தலென்றும் கொள்க. இப்பத்தலைப் பிள்ளைக் கிணறு என்றும் கொங்கு நாட்டவர் கூறுவர். முகவை நீர் முகக்கும் கருவி, இது மரத்தால் செய்யப்படுவது. நீரின் சின்மை குறித்தும் நீரும் மிக்க ஆழத்திலிருப்பது பற்றியும் குறுமுகவை கொள்ளப்பட்டது. பத்தல் இயல்பாகவே ஆழ்ந்திருப்பதுடன் நாடோறும் சுரண்டுதலால் அவ்வாழம் மிகுந்த வண்ணமிருப்பதால், நீண்ட கயிறு கொண்டு முகத்தலல்லது இறங்கி முகந்து கோடல் கூடாமையின் கயிறு குறுமுகவை யென்றதற்கு நீண்ட கயிறு கொண்டு நீர் சேந்தப்படும் குறுமுகவையெனப் பொருள் கூறப்பட்டது."[12] இவ்வாறு மழையில்லாத இடங்களில் கிணறுகளை வெட்டினர். கிணறுகளை வெட்டுவதற்கு 'குந்தாலி' எனும் கருவியையும் அந்நீரினை முகக்க மரத்தால் செய்யப்பட்ட நீர் முகக்கும் கருவிகளையும், கயிறுகளையும் பயன்படுத்தினர் என்பதன் மூலம் சங்ககாலத்திய நீரியல் மேலாண்மைப் பண்புத் தெளிவாகின்றது.

## நிலத்தடி நீர் மூலம் நீரியல் மேலாண்மை

மழைநீரை நிலத்தடியில் சேமித்து மழை பெய்யாத காலங்களில் அதனை முறையாகப் பயன்படுத்தும் நிலையினையும் அக்கால மக்கள் அறிந்திருந்தனர் என்பதற்கான பதிவினை,

*"நீரற வறியா நிலமுதற் கலந்த*
*கருங்குர னொச்சிக்"* *(புறம்.271: 1-2)*

என்ற பாடலில், நிலத்தின் நீர் தொலைவு அறியாத நிலமாகிய முதற்பொருளோடு ஒன்றி நிற்கும் கரிய கொத்துக்களை உடையது நொச்சியாகும். நிலத்தின் நீர் 'நீரறவறிய' என்றும் நிலத்தடி நீரைத் தேடிச் செல்லும் வேரை ஊன்றி வளர்ந்துள்ளது நொச்சிமரம் என்றும் நிலத்தடி நீர் பற்றிய செய்தியினைப் புலவர் பாடுபொருளாக்கியுள்ளார். "பழஞ்செவ்வியல் நூல்களில் தமிழர்கள் கடினமாக உழைப்பவர்களாகவும் சுறுசுறுப்பானவர்களாகவும் படைக்கப்பட்டுள்ளனர். இப்போதிருப்பதைவிட, சங்க காலத்தில் நிலவளம் மிகுதி. ஆனால் இப்போது தேவைப்படும் உழைப்பைவிட மிகக் குறைவான ஆற்றலும் உழைப்பும் தேவைப்படும் அளவுக்கு அவ்வளவு வளமிக்கதாக இல்லை. பஞ்சம், வறட்சி, வறுமை யாவும் அறிய வராதவை அல்ல"[13] என்ற கூற்றின் மூலம் சங்ககால மக்கள் தங்கள் வாழ்வின் இயல்பை நிலைநிறுத்த பல்வேறு நிலைகளில் மேலாண்மை செய்து வாழ்ந்துள்ளனர் என்பதை இவ்விளக்கம் உறுதிப்படுகின்றது.

ஆற்றுநீர், மழைநீர் என்பதைப் போன்று சங்க காலத்தில் நிலத்தடி நீரினைப் பற்றிய அறிவைப் பெற்றிருந்தனர். மழைப் பெய்யும் காலங்களில் பெறப்படும் மழைநீர், விவசாயத்திற்காக நிலங்களில் பாய்ச்சப்படும் நீர், ஏரி, குளம், அணைகள் போன்ற நீர் நிலைகளில் தேங்கியுள்ள நீர் ஆகியவை மண்ணிற்குள் ஊடுருவி நிலத்தடி நீராக உள்ளது என்ற உண்மையை அறிந்தும் அந்நீரினைப் பயன்படுத்தியும் நீரியல் மேலாண்மை செய்து சிறந்த மேலாண்மைவாதிகளாக சங்கச் சான்றோர்கள் செயல்பட்டனர் என்பதும் புலப்படுகின்றது.

## கடலினையும் காற்றினையும் மேலாண்மைச் செய்தல்

பஞ்ச பூதங்களில் ஒன்றாகிய காற்று மனிதனின் உயிர்சக்தியாகத் திகழ்கின்றது. காற்றின் அதீத தன்மையால் பேரழிவுகள் ஏற்படினும் பெரும்பான்மையும் மனித வாழ்வின் அடிப்படை ஆதாரமாகவே விளங்குகின்றது. கடலின் தன்மை அறிந்து காற்றின் மூலம் வாணிபம் மற்றும் பிற தேவைகளுக்குக் கலங்களைச் செலுத்திப் பேரழிவுகள் ஏற்படாவண்ணம் சங்கச்சான்றோர்கள் மேலாண்மை செய்துள்ளனர். காற்றின் திசை மற்றும் அதன் வேகத்தை நன்குணர்ந்து தம் தேவைக்குப் பயன்படுத்தியதை,

*“நளியிரு முந்நீர் நாவா யோட்டி*
*வளிதொழி லாண்ட வுரவோன் மருக”* *(புறம்.66: 1-2)*

எனும் பாடலில், நீர் செறிந்த பெரிய கடலிடத்தே மரக்கலம் செலுத்திக் காற்றினை ஏவல் கொண்ட வலிமையுடைய வழித்தோன்றல் என்று புகழ்ந்துள்ளார். காற்றினை மேலாண்மை செய்து அதில் கலம் என்னும் மரத்தால் அமைந்த விறகினைச் செலுத்திப் போக்குவரத்திற்கும், பண்டமாற்றத்திற்கும் வழி செய்து வாழ்ந்தவர்கள் நம்முடைய சங்கச் சான்றோர்கள் என்பது புலப்படும். மேலும்,

*“கடன்மண்டு தோணியின்”* *(புறம்.299: 3)*

எனும் அடிகளில் கடல் நீரைப் பிளந்து செல்லும் தோணிகள் என்று குறிக்கப்பட்டிருப்பதன் மூலம் கடலின் தன்மையை அறிந்து வணிகத்திற்குத் தோணிகளைப் பயன்படுத்தியதை அறியமுடிகிறது.

## கடலில் மரக்கலம் பயன்படுத்தல்

கடலால் சூழப்பட்ட உலகத்தில் சங்ககால மக்கள் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குக் கடல் கடந்து வணிகம் செய்வதற்கு மரக்கலத்தைப் பயன்படுத்தி தங்கள் உணவு, உடைமை சார்ந்த பொருட்களைப் பரிமாற்றம் செய்து வாழ்ந்துள்ளனர். சினம் மிகுந்த படையையுடைய சேரன் மேலைக் கடலில் பொன்னைத் தரும் மரக்கலம் செலுத்தியதை,

*“சினமிகு தானை வானவன் குடகடற்*
*பொலந்தரு நாவா யோட்டிய”* *(புறம்.126: 14-15)*

எனும் புறப்பாடலில், பதிவு செய்யப்பட்டுள்ளது. இதன் மூலம் வளங்களைப் பரிமாற்றம் செய்ததும், இயற்கையாய் அமைந்த கடலினைத் தனக்கு ஏற்ப, மரக்கலத்தால் அதன்மீது பயணம் செய்து பிற நாடுகளுடன் வாணிபம் செய்ததும் புலப்படுகிறது.

உலகில் நான்கில் மூன்று பங்கு கடல் சூழ்ந்துள்ளது. ஒரு பகுதி நிலத்தில் வாழும் மக்கள், தங்களின் வணிக உறவை கடல் கடந்து மேம்படுத்தினர். கடல் ஆழமானது அளவிடற்கரியது. ஆகவே அத்தகு கடலினைக் கடக்க மரக்கலத்தைப் பயன்படுத்தினர். அம்மரக்கலம் காற்று செல்லும் திசையில் விரைந்து செல்லும் திறமுடையது. வாணிகத்தின் காரணமாக அம்மரக்கலத்தில் கடற்பயணம் மேற்கொண்டு பல்வேறு பயன்களைப் பெற்றுள்ளனர். இதனை,

*“வானியைந்த விருமுந்நீர்ப்*
*பேஎநிலைஇய விரும்பௌவத்துக்*
*கொடும்புணரி விலங்கு”* *(மதுரை. 75-77)*

எனும் பாடலில், மேகங்கள் நீரைப் பருகுவதற்காகப் படிந்த பெரிய மூன்று நீர்மையுடைய, அச்சம் நிலைபெற்று விளங்கும் கரிய கடலில், கடிய காற்றினால் வளைந்து வீசும் அலைகளின் குறுக்கே பிளந்து செல்லுமாறு நாவாய்களின் பாய்கள் விரிக்கப்படும் என்று கடலின் கொடுந்தன்மையும், காற்றினால் அலைகள் பெருக்கெடுத்து தன்னிலையிலிருந்து மாறுபடும் நிலையினையும் பதிவு செய்துள்ளார் புலவர். மேலும் இங்கு முந்நீர் என்றதற்கு, “நெடுங்கடலும் தன்நீர் குன்றும் என்பதானால் அதுவும் மேனீர் இன்றி அமையாமையின் ஆகாது. ஆனால் முந்நீர்க்குப் பொருள் யாதோ எனின் முச்செய்கையுடைய நீர் முந்நீர் என்பது, முச்செய்கையான மண்ணைப் படைத்தலும், மண்ணை அழித்தலும், மண்ணைக் காத்தலும் ஆம்”[14] என்று விளக்கம் கொள்ளப்படுகின்றது. கடலானது தம்மியல்பில் இருக்கும் பொழுது மனிதர்களுக்குப் பல்வேறு வளங்களை அருளி படைத்துக் காத்தது அதன் தன்மை மாறும் பொழுது அழித்தல் தொழிலை மேற்கொள்கிறது என்பதை உணரமுடிகிறது. ஆகவே கடலின் ஆழத்தைத் தாண்டிப் பிற இடம் செல்ல மரக்கலத்தைப் பயன்படுத்தினர். இது ஒருவகையான நீர்மேலாண்மை ஆகும். மேலும்,

***“நளிகட லிருங்குட்டத்து***
***வளிபுடைத்த கலம்போல”*** ***(புறம்.26: 1-2)***

எனும் அடிகள் கடல்வழிப் போக்குவரத்து மேற்கொண்டதற்கானத் தகுந்த சான்றாகும். சங்ககாலத்தில் கடலின் தன்மை உணர்ந்து வணிகத் தொடர்பை ஏற்படுத்தினர். இதனால் ஒரு நாட்டில் உள்ள வளத்தை மற்றொரு நாடு பயன்படுத்திக் கொள்ள முடிகிறது. வாணிபம் பெருகியதற்குக் கடலையும் காற்றினையும் உரிய முறையில் மேலாண்மை செய்துள்ளனர் என்பது புலப்படுகின்றது. சங்க காலச் சான்றோர் இயற்கையைப் போற்றியதோடு, அதன் தன்மைக்கேற்ப அதனைப் பயன்படுத்தி மேலாண்மை செய்த திறத்தையும் உணரமுடிகிறது.

**நில மேலாண்மை (உழவுத்தொழிலும் - நீர்ப்பாசன முறையும்)**

வேட்டையாடி நாடோடியாகத் திரிந்த மனிதன் வேளாண்மையின் காரணமாக நிலையான சமூக வாழ்வினை மேற்கொண்டான் இதன், எச்சமாக சங்கப் பாடல்கள் அமையப் பெற்றுள்ளன. நிலத்தின் தன்மை அறிந்து காலம் உணர்ந்து அதன் பயன்பாட்டை முழுமையாக முறையாகப் பயன்படுத்தி மேலாண்மை செய்து வெற்றி கொண்டவர்கள் தமிழர்கள். இதனை,

***“வெப்புள் விளைந்த வேங்கைச் செஞ்சுவற்***
……………………………………
……………………………………
***வாலிதின் விளைந்த புதுவர கரிய”*** ***(புறம்.120: 1-9)***

என்ற பாடலடியில், வெம்மை மிகுதியாகக் காணப்பட்ட வேங்கை மரத்தை உடைய சிவந்த மேட்டு நிலத்தே கார்காலத்து மழை பெய்தது. அம்மழையால் பதமாகிய ஈரநிலத்தில், புழுதி கலக்கும்படி பலசால்பட உழுது விதைக்கப்பட்டது. தாளியடிக்கப்பட்ட பல கிளையையுடைய செவ்வியின்கண் களையுடைய அடியினின்றும் களைதலான், இலை தழைத்துப் பெருகி மகவீன்ற மயிலினது பேடையை ஒப்ப ஓங்கி வளர்ந்தது. அதன் கரிய தண்டு நீண்டு எல்லாம் ஒருங்கே சேர்ந்து சூழ் விரிந்து கதிரின் அடியும் தலையும் ஒழியாமல் வரகானது மிக காய்த்துச் சீரிதாக விளைந்தது. அவ்வாறு விளைந்த புதிய வரகை பறம்பு மக்கள் அறுத்தனர் என்று பறம்பின் சிறப்பினைப் பாடுகின்றார் கபிலர்.

இப்பாடலில் 'செஞ்சுவல்' என்பது செம்மணலாகிய நீர் தேக்கி வைக்க முடியாத மேட்டு நிலத்தில் மழையின் மூலமே பயிர்கள் விளையும் தன்மை கொண்டது. மழைப் பொழிவு காலமாகிய கார்காலத்தில் பயிர்களை உழுது களை பறித்து வேளாண்மை செய்தனர் என்பதன் மூலம் சங்கச் சான்றோர் இயற்கையின் உன்னதத்தை உணர்ந்து, பருவத்தின் தன்மைக்கேற்ப, நிலத்தின் வளத்தை அறிந்து பயிர் செய்து தங்கள் வாழ்வினை வளமாக்கிக் கொண்டதை அறியமுடிகிறது. இயற்கையில் உள்ள நிலத்தினில் அப்படியே பயிர்த்தொழில் செய்தல் இயலாது என்பதைத் தொடக்க காலத்தில் அறிந்திருந்தனர். "கட்டாந்தரையில் விதைகளைப் போட்டால் பறவைகள் அவற்றைப் பொறுக்கித் தின்று விடுதல் கூடும் எறும்புகளும் இழுத்துச் சென்றுவிடும், மேலும் மழை பெய்யும் காலங்களில் அரித்துச் சென்றுவிடுதல் கூடும். எனவே நிலத்தைக் கிளறிப் புழுதியாக்கி அப்புழுதியில் விதைகளை விதைக்க வேண்டும் என்பதைத் தெரிந்து கொண்டான். ஆனால் காட்டு மிராண்டியாக அநாகரிக நிலையில் வாழ்ந்த அவனுக்கு உழவுத் தொழில் பற்றி எதுவும் தெரியாது."[15] இவ்வாறு தொடக்க நிலையில் காட்டாந்தரையில் உணவு உற்பத்தி செய்த மனிதர்கள் பின்பு வேளாண்மைத் தொழிலை அறிந்து உழு கருவிகளைப் பயன்படுத்தி எருதினை வைத்து உழுதனர். நிலத்தைப் பண்படுத்தி வளமிக்க நிலமாக மாற்றி மக்கள் தங்களுக்குத் தேவையான முதன்மை ஆதாரமான உணவுப் பொருளைப் பெருக்கினர் என்பதை,

***"உழுத நோன்பக டழிதின் றாங்கு"*** *(புறம்.125: 7)*

எனும் அடிகளால் அறியமுடிகிறது. 'உழுனர் காளை' எனும் அடிகள் காளை கொண்டு நிலத்தை உழுதுப் பயிரிட்டதை உறுதிசெய்கிறது. இதன்மூலம் சங்கச் சான்றோர் நிலத்தை உழுது பயிர் விளைவித்து பசி மற்றும் வறுமையைப் போக்கி அழிவிலிருந்து மேலாண்மை செய்து தங்களைக் காத்துக் கொண்டனர் என்பது புலப்படுகிறது.

1889 – ல் டாக்டர் ஜான் அகஸ்டஸ் லோல்க்கர் இந்திய வேளாண்மை பற்றி அளித்த அறிக்கையில் "சாதாரண வேளாண்மை நடைமுறையில், நிலத்தை களைகள் இல்லாமல் சுத்தமாக வைப்பதில், தன்னிச்சையான நீர்ப்பாசன முறைகளைப் பின்பற்றுவதில்,

மண்வளம் பற்றிய அறிவியல், எப்போது விதைக்க வேண்டும், எப்பொழுது அறுவடை செய்ய வேண்டும் என்பது குறித்த அனுபவத்தில் இந்திய வேளாண்மையை விட சிறந்த ஒன்றைக் கண்டுபிடிப்பது மிகக் கடினமான செயல்"[16] என்று விளக்கியுள்ளார். உழவுத்தொழிலின் மேன்மையினைக் குறித்து வள்ளுவரும்,

***"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்***
***தொழுதுண்டு பின்செல் பவர்"*** ***(குறள்.1033)***

என்று உழவுத் தொழிலையும், உழவர்களையும் சிறப்பித்து கூறியுள்ளார். சங்க காலத்தில் மழைக்காலங்களில் உழவு செய்தனர் என்பதும், உழவு செய்யும் பொழுது சிறந்த எருதுகளை வைத்து உழவுத் தொழிலை மேற்கொண்டனர் என்பதும், உணவின் உற்பத்தியால் மக்களின் பசியைப் போக்கி முறைசார் மேலாண்மை செய்துள்ளனர் என்பது புலப்படுகின்றது.

## உணவுப் பயிர்களைப் பாதுகாத்தல்

சங்ககால மக்கள் நிலத்தை உழுது உணவை உற்பத்திச் செய்வதோடு மட்டுமல்லாது அவ்வுணவுப் பயிர்களை முறையாகப் பாதுகாத்தனர். உணவுப் பயிர்கள் முற்றி பயன்பெறும் காலங்களில் விலங்குகளாலும் மனிதர்களாலும் இடையூறுகள் ஏற்பட்டது. அத்தகைய காலங்களில் ஒலிகளை எழுப்பி அவ்விலங்குகளை விரட்டியடித்து, தங்கள் உற்பத்தியைப் பாதுகாத்துக் கொள்ளும் வல்லமை கொண்டவர்களாகத் திகழ்ந்துள்ளனர். இதனை,

***"கலிகெழு மிரமிசைச் சேணோ னிழைத்த***
***புலியஞ் சிதண மேறி யவண***
***சாரற் சூரற் றகைபெற வலந்த***
***தழலுந் தட்டையுங் குளிரும் பிறவுங்***
***கிளிகடி மரபின வூழூழ் வாங்கி***
***உரவுக்கதிர் தெறூஉ முருப்பவி ரமயத்து"*** ***(குறி. 40-45)***

இப்பாடலில், ஆரவாரம் பொருந்திய மரத்தின் உச்சியில் இராக் காலத்தில் அமர்ந்திருப்பவன் தனக்கென அமைத்துக் கொண்ட, புலி அஞ்சுவதற்குக் காரணமாகியதும், மலைப் பகுதிகளில் விளைந்த பிரம்புகளால் அழகுறப்பின்னி அமைக்கப்பட்டதும் ஆகிய பரண் மேல் ஏறித் தழல், தட்டை, குளிர் போன்ற கருவிகளையும், பிறவற்றையும் கொண்டு மிடுதலையுடைய ஞாயிற்றின் கதிர்கள் சுடுகின்ற வெம்மை விளங்கும் பகற்பொழுதில், கிளிகளை ஓட்டும் முறையறிந்து, அவ்வக் கருவிகளைக் கொண்டு முறையாக ஓட்டினோம் என்ற பதிவின் மூலம், மக்கள் தங்களின் உணவிற்காக விதைத்த தினைகள் முற்றிய பின்பு அதனை யானை முதல் கிளி வரையிலான உயிரினங்களினால் ஏற்படும், அழிவிலிருந்து பயிர்களைக் காக்க தினைப்புனம் காவல் செல்லுவர் என்பதும் அக்காவலின் போது புலி, யானை போன்ற விலங்கினத்தால் அழிவு நேராமல் காத்தற் பொருட்டு, மலைப் பகுதிகளில் விளைந்த பிரம்புகளால் பரண்களை

அமைத்து அதன் மேல் அமர்ந்து தினைப்புனம் காவல் செய்வர் என்பதும் புலப்படுகிறது. மக்களின் வாழ்வாதாரமான உணவினை விளைவித்து அதனை அறுவடை செய்யும் வரை பல்வேறு விதமான மேலாண்மைகளைச் செய்து பசித்துன்பத்திலிருந்து தங்களைக் காத்துக் கொண்டனர். மற்றொரு பாடலில், தினைப்புனம் காத்த நிகழ்வினை,

> ***"இருவி வேய்ந்த குறுங்காற் குரம்பைப்***
> ..............................................
> ..............................................
> ***மடிவிடு வீளையர் வெடிபடுத் தெதிரக்"*** *(குறி. 153-161)*

தினைக் கதிர்களை அரிந்த தாளால் வேயப்பெற்ற குறுகிய கால்களையுடைய குடிலில் இருக்கும் பெண்மானைப் போன்ற மருண்ட பார்வையினையுடைய மனைவி, தேனால் சமைத்த கள்ளினை எடுத்துக்கொடுப்ப, அதனை உண்ட கணவன் மகிழ்ச்சி மிகுதியால் தன் காவல் தொழிலை மறந்தனன். அச்சமயத்தில் பெரிய தினைப் புனத்தில் வேழம் புகுந்து கதிர்களைத் தின்று தீர்த்து வருவதைக் கண்டு, எஞ்சிய கதிர்களின் அழிவு குறித்த சிறுமையைப் பொறுத்துக் கொள்ளாமல் மிக்க வருத்தம் அடைந்தான். சினத்தையுடைய பாம்பு போன்ற அழகிய தன் வில்லில் நாணை ஏற்றினான் தன்னுடைய உடல் வலியாலும், கோபத்தால் பிறந்த சினத்தாலும் மயங்கி அம்பை எய்தனன். தட்டையைப் புடைத்தனன், காடெல்லாம் கல் என்னும் ஓசை உண்டாகுமாறு வாயை மடித்து விடுகின்ற சீழ்க்கை ஒலியராய்க் கானவர் மிக்க ஓசையை உண்டாக்கி அக்களிற்றைத் தினைப்புனத்தினின்றும் ஓட்டினான். இவ்வாறு சங்ககால மக்கள் யானை போன்ற விலங்குகளிடமிருந்து தங்களின் வாழ்வாதாரமான தினைகளைப் பாதுகாத்துக் கொள்ள அம்பு எய்துதல், தட்டையைப் புடைத்தல், சீழ்கை ஒலியெழுப்புதல் போன்ற செயல்களைச் செய்தனர்.

விளை நிலங்களில் சேம்பு, மஞ்சள் விளைந்த பின்பு அவற்றிற்கு அழிவு ஏற்பாடாதிருக்க பன்றிகள் அப்பகுதிக்கு வராமல் இருக்க அச்சுறுத்தும் வகையில் பறைகளை அடித்ததை,

> ***"சேம்பும் மஞ்சளும் ஓம்பினர் காப்போர்***
> ***பன்றிப் பறையும்"*** *(மலை. 343-344)*

என்ற அடிகளால் அறியலாம். உணவுக்கான தானியங்களை மூட்டைகளிலும் 'குதிர்' என்ற சேமிப்பின் மூலமும் சேமித்து தைத்துக் கொண்டு மீண்டும் அறுவடைக்காலம் வரும் வரை பயன்படுத்தியுள்ளனர். இதனை,

> ***"கூனிக் குயத்தின் வாய்நெல் லரிந்து***
> ..............................................
> ..............................................
> ***காவிரி புரக்கு நாடு"*** *(பொரு. 242-248)*

என்ற பாடலில், உழத்தியர் தம் உடல் வளைந்து குனிந்து நின்று அரிவாளின் வாயால், முதிர்ந்து விளைந்த நெற்றாளை அரிந்து, தாள் அரிந்து திரட்டிய சூட்டினைச் சுமையாகக் கட்டிக்கொண்டு போய், மலையாகப் போராக்கி நாள்தோறும் கடாவிட்டு பிணையலடித்து மலையெனக் குவிப்பார். அள்ள அள்ளத் தொலையாத அந்நெற்போலி நன்கு தைத்த மூட்டைகளிலே 'குதிர்' முதலியவற்றில் இடமில்லாமல் யாண்டும் கிடக்கின்ற செந்நெல் விளைகின்ற வரம்பு கட்டப்பட்ட ஒரு வேலி நிலம் ஆயிரங்கால் நெல் விளையும்படி காவிரியாற்றால் பாதுகாக்கின்ற நாடு என்று கூறப்பட்டுள்ளது. இதன் மூலம் காவிரியின் காரணமாகப் பயிர்விளைவித்து விளைந்த நெல்லை மூட்டைகளிலும் குதிர்களிலும் பாதுகாப்பாக வைத்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது. மேலும்,

***"பொய்யா வெழிலி பெய்விட நோக்கி***
***முட்டை கொண்டு வற்புலஞ் சேரும்***
***சிறுநுண் ணெறும்பின் சில்லொழுக் கேய்ப்பச்"*** ***(புறம்.173: 5-7)***

எனும் பாடலடியில் காலம் பொய்யாது மழை பெய்யும் காலத்தைப் பார்த்துச் சிறிய எறும்பு தம் முட்டைகளைக் கொண்டு மேட்டு நிலத்தினைச் சாரைசாரையாக வரிசையாகச் சென்று தம் கூட்டை அடையும் என்று பதிவு செய்துள்ளார். வறட்சி, பெரும் மழைகள் போன்றவற்றால் விளைதல் இல்லாக் காலங்களில் பேரழிவுகள் ஏற்டும் முன்பே உணவினை பாதுகாத்து மேலாண்மை செய்துள்ளனர் என்பதனை இதன் வாயிலாக அறியமுடிகிறது. மேலும், நெல்லினைப் பாதுகாத்து சேமித்து வைத்த செய்தியினை,

***"கடுந்தெற்று மூடையின்"*** ***(புறம்.285: 5)***
***"களமலி நெல்லின் குப்பை வேண்டினும்"*** ***(புறம்.171: 9)***
***"யாணர் நன்மனைக் கூட்டுமுத னின்றனென்"*** ***(புறம்.376: 6)***

எனும் அடிகளின் வழி அறியலாம். உணவுக்காக வேளாண்மைத் தொழில் மூலம் பெறப்பட்ட நெற்பயிர்களை கடாவிட்டு அடித்தல் பற்றி,

***"குன்றுகண் டன்ன நிலைப்பல் போர்பு***
***நாட்கடா வழித்த நனந்தலைக் குப்பை"*** ***(புறம்.353: 8-9)***

என்ற பாடலடிகளில், மலையைக் கண்டாற் போன்று நிலையினை உடைய பல நெற்போர்களை நாள்தோறும் காலையில் கடாவிட்டு அடித்து குவித்து வைத்துள்ள நெல் என்று மருதநிலத்தின் விளைச்சலை பதிவு செய்துள்ளார். மேற்கூறிய விளக்கங்களின் மூலம் சங்கத் தமிழர்கள் உணவுத் தேவையான நெல் முதலியவற்றை உழுது விதைத்து, அறுவடை செய்து, எருதுகள் பூட்டி நெல்லை அடித்து வீடுகளில் பாதுகாத்தனர். வறுமை மற்றும் வறட்சியான காலங்களில் பசியைப் போக்க அந்நெல்லினைப் பயன்படுத்தினர்.

முல்லை, குறிஞ்சி, நெய்தல் போன்ற பிற நில மக்களுக்கும் பண்டப்பரிமாற்றம் செய்து உணவுத் தேவையினால் ஏற்படும் பேரழிவுகளிலிருந்து முறைசார்ந்து மேலாண்மை செய்து வாழந்துள்ளனர் என்பதை உணரமுடிகிறது.

### பொருள் பாதுகாவல் மேலாண்மை

வேளாண்மைத் தொழிலின் பயனாக விளைந்தப் பொருட்களைப் பகைவர்களிடமிருந்து பாதுகாத்துள்ளனர். நாட்டில் வாழும் மக்களுக்கு அடிப்படை ஆதாரமாக விளங்கும் உணவுப் பொருட்களைப் பாதுகாக்க சுங்கம் அமைத்து காத்துள்ளனர். இதனை,

> ***"நல்லிறைவன் பொருள்காக்குந்***
> ***தொல்லிசைத் தொழின்மாக்கள்***
> ***காய்சினத்த கதிர்ச்செல்வன்***
> ***தேர்பூண்ட மாஅபோல***
> ***வைகல்தொறும் அசைவிஇன்றி***
> ***உல்குசெயக் குறைபடாது"*** *(பட். 120-125)*

எனும் பாடலடியில், நல்ல அரசனின் பொருள்களைப் பிறர் கொள்ளாமல் இருத்தலே ஒரு நாட்டிற்கு முதன்மையானது என்பதை அறிந்து, பகைவர்கள் பொருளினைக் கவர்ந்து செல்லாதவாறு காக்கின்ற பழைய புகழினை உடைய சுங்கம் கொள்பவர் மேற்கொண்டனர். அவர்கள் எரிகின்ற சினம் கொண்ட கதிர்களையுடைய கதிரவனின் தேரில் பூட்டப்பட்ட குதிரைகளைப் போல ஒரு பொழுதும் மடிந்திராமலும், இளைப்பில்லாமலும், குறையாமலும் நாள்தோறும் சுங்கத்தினைப் பெறுவர் என்பதன் மூலம் பொருளியல் சார்ந்த மேலாண்மையை மேற்கொண்டு பொருளின்மையால் பேரழிவுகள் ஏற்படா வண்ணம் பாதுகாத்தனர்.

சங்கச் சான்றோர்கள் உணவின் அவசியத்தை உணர்ந்து நிலத்தின் வளத்திற்கேற்ப குறிஞ்சி நிலத்தில் தினைகளையும், நீர் வளம் மிகுந்த மருதநிலத்தில் நெற்கதிர்களையும் விளைவித்ததோடு, தேவை போக மீதமுள்ளவற்றைச் சேமித்து வைத்தும் அவ்வுணவினைப் பிறர் களவு கொள்ளாதபடி காத்தும் உணவுத் தட்டுப்பாடு ஏற்படா வண்ணம் வாழ்ந்துள்ளனர்.

### வாழ்விட மேலாண்மை

### இருப்பிடங்கள் அமைத்தல் (மேலாண்மை)

சங்ககால மக்கள் தங்கள் வசதிக் கேற்பவும், கால மாற்றத்திற்கேற்பவும் இருப்பிடங்களை அமைத்து வாழ்ந்துள்ளனர் என்பதை,

> ***"வானுற நிவந்த மேனிலை மருங்கின்***
> ***வேனிற் பள்ளித் தென்வளி தரூஉம்***

*நேர்வாய்க் கட்டளை திரியாது திண்ணிலைப்*

*போர்வாய்க் கதவந் தாழொடு துறப்ப"* (நெடு. 60-63)

விண்ணுலகத்தைத் தீண்டும்படி உருவாக்கப்பட்டுள்ள எழுநிலை மாடங்களில், இளவேனிற் பருவத்து உறங்குவதற்காகப் படுக்கைகள் இருக்கும். மாடங்களில் உள்ளோர் தென்றல் காற்றை வழங்கும் சாளரங்கள் ஓரமாகக் குளிரின் மிகுதியால் உலவச் செல்வதில்லை. மாடத்தின் இப்பகுதியில் அமைந்துள்ள கதவுகள் நெருக்கமாகக் காற்றுப்புக வழியின்றி உருவாக்கப்பட்டவை. அவை கூதிர்காலத்தில் மூடப்பட்டுத் தாழிடப்படும் என்று பதிவு செய்யப்பட்டுள்ளது. வெள்ளம் மற்றும் பிற காரணங்களினால் எழுநிலை மாடங்கள் போன்ற உயர்ந்த கட்டிடங்களைக் கட்டி அவற்றில் சாளரங்கள், கதவுகள் என்று வேனிற் காலத்திற்கும், கூதிர்காலத்திற்கும் ஏற்றவாறு அமைத்திருந்தனர். சங்க காலத்தில் ஒரு வகை மக்கள் உயர்ந்த நிலையில் இருப்பவர்கள் தங்களைப் பாதுகாக்க இது போன்ற வீடுகளை அமைத்து வெள்ளம் மற்றும் மழையினால் பாதிப்பு ஏற்படா வண்ணம் தங்களைப் பாதுகாத்து கொண்டிருக்கலாம் என்று எண்ணத்தோன்றுகிறது. மேலும் மக்களின் வாழ்வாதாரத்திற்கு ஏற்ப தங்களது உறைவிடமாகிய இல்லத்தை அமைத்துக் கொண்டனர் என்பதும் புலப்படும். இவ்வாறு அமைக்கப்படும் இருப்பிடங்களைத் திட்டமிட்டு அதற்குரிய வல்லுநர்களின் ஆலோசனைகளைக் கேட்டு சரியாகவும், முறையாகவும் கட்டினர் என்பதனை,

*"................. போதே மாதிரம்*

*விரிகதிர் பரப்பிய வியல்வாய மண்டில*

*மிருகோற் குறிநிலை வழுக்காது குடக்கோர்*

*பொருதிறஞ் சாரா அரைநா ளமயத்து*

*நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டுத்*

*தேஎங் கொண்டு தெய்வ நோக்கிப்*

*பெரும்பெயர் மன்னர்க் கொப்ப மனைவகுத்து"* (நெடு. 72-78)

எனும் பாடலடிகளில் எல்லாத் திசைகளிலும் தன்னுடைய விரிந்த கதிர்களைப் பரப்பும் அகன்ற இடத்தையுடைய கதிரவன், மேற்குத் திசை நோக்கிச் செல்வதற்காக விண்ணில் எழுந்தது. வடக்கிலும், தெற்கிலுமாகிய இரண்டு இடங்களில், இரு கோள்கள் நடப்பட்டு, அவற்றின் இடையே இடப்பட்ட குச்சிகளின், கிழக்கு, மேற்காகத் தாரையாக ஓடும், ஞாயிற்றின் கதிர்பட்டு உண்டாகும் நிழல், ஓடுபக்கத்தைச் சாராமல், நேர் ஒழுங்காக வீழும் அமையம் குறித்துக்கொள்ளப்படும். அந்நாளில் அவ்வமையத்தில் அரசனுடைய அரண்மனை அமைப்பதற்காகத் 'திருமுனைச் சார்த்து' எனும் சடங்கு செய்யப்பெறும், சிற்ப நூலை அறிந்த தச்சர்கள், நுட்பமாக நூல் பிடித்துப் பார்த்துக் கட்டடங்கள் அமைப்பர். அவர்கள் அரண்மனையின் ஒவ்வொரு பகுதியும், அமைய வேண்டிய திசைகளைக் கருத்தில் கொண்டு அத்திசைகளில் காவலாக நிற்கும் தெய்வங்களால் எக்குறையும் நேராவண்ணம், அவற்றிற்கு

வழிபாடுகளை நிகழ்த்துவர். பெரும் புகழுடைய மன்னர்களின் தகுதிக்கும், தேவைக்கும் ஏற்ப மனைகளும் மண்டபங்களும், வாயில்களும் பாகுபடுத்தப்பட்டு அமைக்கப்பெறும். சங்ககாலத்தில் வீடு, அரண்மனைகள், மண்டபங்கள் கட்டும் போது முறையாக நல்ல நாளில் சிற்ப நூல் அறிந்த வல்லுநர்க் கொண்டு சரியாக அளந்து எவ்வித குறையும் நிகழாதவாறு கடவுள்களை வணங்கி கட்டினர். கட்டடங்களைக் கட்டுவதற்குத் தச்சர் போன்ற கலைஞர்களைப் பயன்படுத்தினர். கட்டடங்கள் முறையின்றி கட்டினால் அழிவைச் சந்திக்க நேரிடும் என்பதை அறிந்து தெய்வ வழிபாடு மேற்கொண்டனர் என்பதிலிருந்து நிலநடுக்கம் போன்றவற்றால் பேரழிவுகள் ஏற்படா வண்ணம் இருப்பிடங்களை அமைத்து மேலாண்மை செய்துள்ளனர் என்பது புலப்படுகிறது. மேலும்,

"தங்கள் நிலப்பகுதியின் தன்மையை அறிவியல் நோக்காலும், மனஇயல் மேம்பாட்டாலும், மேலும் முதிர்ந்த அனுபவத்தினாலும் முன்கூட்டியே உணர்ந்து எதிர்வரும் காலம் எப்படியாக இருக்கும் என்பதைத் தீர்மானித்து நில அதிர்வுகளையும், உணர்ந்து மனத்தில்கொண்டு இயற்கையின் சீற்றத்தை வெல்லும் வகையால் வீடுகளையும், ஊர்களையும் அமைத்தனர்"[17] என்ற கூற்றின் வாயிலாகவும் உறுதிப்படுகிறது.

சங்க மக்கள் நிலநடுக்கத்தால் பாதிக்கப்படாத உறுதியான கட்டடங்களைக் கட்டி பாதுகாப்பாக வாழ்ந்துள்ளனர் என்பதனை,

***"வரைகண் டன்ன தோன்றல வரைசேர்பு***
***வில்கிடந் தன்ன கொடிய பல்வயின்***
***வெள்ளி யன்ன விளங்குஞ் சுதையுரீஇ***
***மணிகண் டன்ன மாத்திரட் டிண்காழ்ச்***
***செம்பியன் றன்ன செய்வுறு நெடுஞ்சுவர்"*** ***(நெடு. 108-112)***

என்ற அடிகளில், அந்தப்புரப் பகுதிகள், மனைகளைக் காண்பது போன்ற உயர்ந்த தோற்றம் உடையவை. மலைகளைச் சார்ந்து வானவில் கிடப்பது போலப் பல நிறக் கொடிகள், அம்மாடங்களில் தொங்கி அசையும், அந்தப்புரத்தின் பல இடங்கள் வெள்ளியைப் போன்ற சாந்தினால் பூசப்பட்டவை. அவை நீல மணியைக் காண்பது போன்ற கரிய திரண்ட வலிமை வாய்ந்த தூண்களைக் கொண்டவை. செம்பினால் உருவாக்கப்பட்டது போன்ற, தொழில் நிறம் விளங்கும்படி அமைக்கப்பட்ட நீண்ட சுவர்களையுடையவை என்பதன் மூலம் சங்ககாலத்தில் கட்டப்படும் கட்டடங்கள் மலைகளைப் போல திடமாக உயரமாக எழுப்பப்பட்டது. இன்றைய காலத்தில் நிலநடுக்கத்தால் பாதிக்கப்படா வண்ணம் இருக்க (பில்லர்) 'தூண்கள்' அமைப்பது போல வலிமையான தூண்கள், செம்பைப் போன்று வலிமையின் நீண்ட சுவர்களைக் கொண்டு

கட்டடங்கள் உருவாக்கி வண்ணம் பூசியுள்ளனர். கடலலைகளாலும், நிலநடுக்கத்தாலும் பாதிக்கப்படா வண்ணம் உறுதியான சுவர்களை எழுப்பி பேரழிவுகளில் இருந்து தங்களை மேலாண்மை செய்து கொண்ட சங்க மக்களின் திறத்தை உணரமுடிகிறது.

## ஆட்சி மேலாண்மை

### மன்னனுக்குரிய இலக்கணம்

மன்னன் என்பவன் மக்களின் உயிராகக் கருதப்பட்டான். அத்தகைய மன்னன் மற்றவர்களைக் காட்டிலும் நற்பண்புகளைக் கொண்டவனாகவும், தலைமைப்பண்பால் சிறந்து விளங்குபவனாகவும் கருத்துருவை ஏற்படுத்தினர். மன்னனுக்குரிய இலக்கணமாகப் பாலைக் கௌதமனார்,

*"சினனே காமங் கழிகண் ணோட்டம்*
*அச்சம் பொய்ச்சொ லன்புமிக வுடைமை*
*தெறல்கடு மையொடு பிறவு மிவ்வுலகத்*
*தறந்தெரி திகிரிக்கு வழியடை வாகும்*
*..............................................*
*..............................................*
*ஊழி யுய்த்த வுரவோ ரும்பல்"* *(பதிற்.22: 1-11)*

மிகுந்த கோபமும் மிகுந்த காமமும் அளவறிந்த கண்ணோட்டமும் பகைவர்க்கு அஞ்சலும் பொய்கூறுதலும் பொருளினிடத்து அளவுக்கு மிஞ்சிய பற்று வைத்தலும் அளவுக்கு மிஞ்சிய தண்டனை அளித்தலும் இவைபோன்ற பிறவும் இவ்வுலகில் அறவழியில் ஆட்சி செலுத்துதற்குரிய அரசனது ஆணைச் சக்கரத்திற்குத் தடையாக நிற்கின்றது. இத்தீமைகளெல்லாம் தம்மை நெருங்காது சேய்மையிலே விட்டு நீங்கி நன்மை பயப்பனவற்றையே செய்தனர். இதனால் கடலும் கடலினையடுத்த காடாகிய முல்லை நிலங்களும் காட்டையடுத்த நிலங்களும் பல பயன்களையும் உதவுமாறு செய்து குடிமக்கள் பிறரை வருத்தாமலும் பிறர் பொருளை விரும்பாமலும் குற்றமற்ற அறிவினராய்ச் செந்நெறியில் ஒழுகினர். தம்மை விரும்புகின்ற தம் மனைவியரைப் பிரியாது தம் இல்லம் நாடி வரும் விருந்தினருக்குத் தமக்குள்ளதைப் பகுத்தளித்துத் தாமும் உண்டு, குடிமக்கள் முதுமையும், நோயும் இல்லாமல் நல்லுடம்போடு நெடுநாள் வாழும் வகையில் ஆட்சி செலுத்தினார். இவ்வாறு ஆட்சி செலுத்துபவர்களையே சிறந்த மன்னர்களாக அடையாளம் காணப்பட்டனர்.

புலவர் மன்னனின் அறவழியில் ஆட்சி செய்தல் வேண்டும் என்பதை அறிவுறுத்த அம்மன்னர்களின் முன்னோர்கள் வாழ்வியலை எடுத்துக்கூறி அத்தகைய அறம் சார்ந்த குடிப்பிறப்பில் பிறந்தவனாகிய அம்மன்னனையும் பண்டுபோல் தம் முன்னோர்கள் நடத்திய

அறவழி ஆட்சியினை மேற்கொள்வதற்குக் குறிப்பினால் உணர்த்துகின்றனர். இத்தகைய மறைபொருள் கூறும் புலவர்களின் செறியறிவுறுத்தல் என்பது சங்க மன்னர்களின் ஆட்சி அதிகாரத்தை அறவழியில் நடத்துவதற்கு ஒரு கருவியாக அமைந்திருந்தது என்பது இப்பாடல் அடியின் மூலம் அறியமுடிகிறது.

"அரச அதிகாரங்களை நேரடியாகக் கட்டுப்படுத்தும் அதிகார அமைப்புகள் ஏதும் சங்க காலத்தில் இல்லை தான் ஆனாலும், தான்தோன்றித்தனமாகவும், 'சொன்னதே சட்டம் நின்றதே கோலம்' என்ற எதேச்சதிகாரங் கொண்டு சங்ககால அரசர்கள் செயல்படவில்லை அறக்கட்டுப்பாடும் சுயக்கட்டுப்பாடும் ஏற்று, 'அரசியல் பிழையாது, அறநெறி காட்டிப் பெரியோர் சென்ற அறவழிப் பிழையாது' ஆள்வதற்கு உள்ளத்தால் உறுதி ஏற்று நின்றுள்ளனர்"[18] என்ற கூற்று சங்ககால மன்னர்கள் அறநெறிப்பட்ட ஆட்சி செலுத்தியதை விளக்குகின்றது.

### வேந்தன் எனும் நிர்வாகி

சங்க காலத்தில் முடிவேந்தர்களின் ஆட்சியமைப்பில், மன்னனை உயிராகக் கொண்டே மக்கள் வாழ்ந்ததால் அம்மக்களைக் காக்கும் பொறுப்பு அம்மன்னர்களுக்கும் இருந்தது. சங்ககால மன்னர்கள் ஆட்சியமைப்பிலும் பாதுகாப்பிலும் பல்வேறு அமைப்புகளை ஏற்படுத்தினர்.

- ***புலவர்கள்***
- ***அமைச்சர்கள்***
- ***படைப்பிரிவுகள்***

போன்ற அமைப்புகள் நிறுவப்பட்டன. ஒருநாட்டை திறம்பட ஆட்சி செய்பவனை சிறந்த மன்னனாகப் போற்றினர். அத்தகு மன்னனே சிறந்த மேலாளன். சங்க மன்னர்கள் தாம் ஆட்சி செய்யும் நிலப்பகுதியை அப்பகுதியில் வாழும் மக்களின் நலன் கருதி நிர்வாகத்திற்காகத் தன் குடைகீழ் குறுமன்னர்களை உருவாக்கினார்கள். ஏனெனில், மன்னனிடமே அனைத்திற்குமான அதிகாரமும் ஆட்சியும் இருந்தது. இக்குறு மன்னர்கள் பெருவேந்தனின் கட்டளைகளை நிறைவேற்றும் பணியாட்களாகவும், இவர்களுக்கென படையமைப்புகள் என்ற முறையில் மன்னனின் நிர்வாக அமைப்பானது 'முறைசார் மேலாண்மை' என்பதை மையமிட்டதாக அமைந்திருந்தது.

"மேலாண்மையின் அனைத்து துறைகளிலும் மனிதவளம் என்பது முக்கியப் பங்காற்றுகிறது. இம்மனிதவளம் என்பது நிறுவனத்தின் குறிக்கோள்களை மையமிட்டே அமைகின்றது."[19] இவ்வாறு கட்டமைக்கப்பட்ட நிறுவனமாக்கப்பட்டு தன்நாட்டில் வாழும் மக்களுக்கும் பிற விலங்கினங்களுக்கும் பேரழிவுகள் ஏற்படாவண்ணம் முறைசார் மேலாண்மை வழி நிர்வாகம் மேற்கொண்டனர்.

*"வலிமிகு வெளியான் வாளுற்ற மன்னரை*
*நயனாடி நட்பாக்கும் வினைவர் போல"* *(கலி.45: 7-8)*

*'புகழெ னின் னுயிருங் கொடுக்குவர்'* *(புறம்.182: 5)*

*"மெல்ல வந்தென் னல்லடி பொருந்தி*
*ஈயென விரக்குவ ராயிற் சீருடை*
*முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்*
*இன்னுயி ராயினுங் கொடுக்குவென்"* *(புறம்.73: 1-4)*

எனும் பாடலடிகளில், சங்ககால மன்னர்கள் தன் புகழை நிறுத்த தன்னிடம் இரவலர்கள் வந்து தன்னிடம் சேறுதல் ஆயின் அவருக்காகத் தன் நாட்டையும், தன் உயிரையும் கொடுக்க முன் வந்தனர். இதன் மூலம் சங்ககாலம் என்பது தன் புகழை நிலைநாட்ட, தன் அரசாட்சியை நிலைநிறுத்த பெருவேந்தர்கள் முற்பட்ட திறம் இங்கு வெளிப்படையாகிறது.

## போரியல் மேலாண்மை

பகைமன்னனின் படையெடுப்பினால் போர் என்பது கட்டாயமானது. போரினால் தன் நாட்டு மக்களையும் வளங்களையும் காக்கும் பொருட்டு பல்வேறு வகையான மேலாண்மை உத்திகளை மேற்கொண்டனர். பகை மன்னனின் படையெடுப்பிலிருந்து தம்மையும், தம்நாட்டு மக்களையும் காக்கும்பொருட்டு குதிரை, யானை, வேல், வீரர் என்று படைகளை அமைத்தனர். அத்தகு படைகளின் தாக்குதலிலிருந்து மேலாண்மை செய்யத் தகுந்த நடவடிக்கையாக மதில்கள், காவற்காடுகள், கேடயம், அம்பு என்று இவற்றைப் பயன்படுத்தினர். பெரும் போர் ஏற்படுவதற்கு முன்பாகவே பேரிடர் ஏற்படா வண்ணம் பாதுகாத்தல் வேண்டி, தன் மீது போர்த்தொடுக்கும் மன்னனை எதிர்த்துப் போர் புரியப்போகும் மன்னன் அந்நாட்டு மக்களுக்கு அறிவிக்கும் முறையாக,

*"ஆவும் மானியற் பார்ப்பன மாக்களும்*
*பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்*
*தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்*
*பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்*
*எம்மம்புக டிவிடுதும் நும்மரண் சேர்மின்னென*
*அறத்து தாறு நுவலும் பூட்கை"* *(புறம்.9: 1-6)*

இப்பாடலில், பசுவும், பசுவியல்பை ஒத்த பார்ப்பனரும், பெண்களும், நோயுற்றவரும், தென்புல வாழ்நருக்கு அரிய சடங்கு முறையைச் செய்யும் புதல்வர்களைப் பெறாதீரும் என்ப பலரும் கேட்பீராக, யாம் எம் அம்புகளை விரைவுபடச் செலுத்திப் போரிட உள்ளோம். நீவீர் யாவும் நுமக்குப் பாதுகாப்பான இடத்தை அடையுங்கள் என்னும் அறநெறியைக் கூறும் மன உறுதி

உடையவன் முதுகுடுமிப் பெருவழுதி என்று பாடியுள்ளாா். இப்பாடலடிகள் மூலம் போரிடும் போது பிற உயிா்களுக்கு ஆபத்து ஏற்படா வண்ணம் தடுக்கும் பொருட்டு, போரினால் ஏற்படும் பேரிடரைத் தடுத்து மேலாண்மை செய்துள்ளான் என்பது தெளிவாகிறது.

ஒரு மன்னன், மற்றொரு மன்னன் மீது மண், மற்றும் பொன் ஆசையால் போரிடுதல் என்பது தவிா்க்க இயலாத ஒன்று. மேலும் தம் குடிகளைப் பேணுதல் எனும் தலையாய கடமைக்குத் தன்னை முதன்மைப்படுத்திப் போா்த்தொழிலை மேற்கொண்டனா். மன்னா்களின் போா்த்தொழிலுக்குப் படைகளை முதன்மைப்படுத்தினா். சங்ககாலத்தில் யானை, தோ், குதிரை, மறவா் என நால்வகைப் படைப்பிரிவு இருந்தது. தன்னை எதிா்த்து வரும் பகை மன்னனின் பெரும் படையை எதிா்த்து தன் குடிகளையும், தன் நாட்டு வளங்களையும் காக்கும் பொருட்டு மேற்கூறிய படைப்பிரிவுகளை அமைத்தனா் என்பதை,

*"படுமணி யிரட்டும் பாவடிப் பணைத்தாள்*
*நெடுநல் யானையுந் தேரு மாவும்*
*படையமை மறவரு முடையம் யாமென்"* *(புறம்.72: 3-5)*

இப்பாடல் அடிகளின் வாயிலாக அறியலாம்.

### யானை, குதிரை (போா்த்தொழிலுக்குப் பழக்குதல்) படையமைப்புகள்

பகை மன்னரிடமிருந்து நாட்டை காக்க வலிமை மிகுந்த யானைகளுக்கும், குதிரைகளுக்கும் அதற்குரிய ஆட்களை நியமித்து போா்பயிற்சி செய்து போரில் ஈடுபடுத்தியுள்ளனா். யானைகளைப் போருக்கு அழைத்துச் செல்லும் முன்பு, அதற்கு கடுமையான பயிற்சிகளைக் கொடுத்துள்ளனா்.

*"திருவீழ் மாா்பின் தென்னவன் மறவன்*
*குழியிற் கொண்ட மராஅ யானை*
*மொழியின் உணா்த்துஞ் சிறுவரை"* *(அகம்.13: 6-8)*

இப்பாடலில், பாண்டியனின் படைத்தலைவன் பண்ணி என்பான் அவன் பள்ளங்களில் யானைகளை வீழ்த்திப் பிடித்த பழகா யானைகளை உரிய மொழிகளால் தொழிலைப் பயிலப்பண்ணும் சிறுபொழுது என்று பதிவிடப்பட்டுள்ளது.

சங்ககாலத்தில் பகைமன்னரின் படையெடுப்பிற்கு அஞ்சாது, தானும் எதிா்த்துப் போரிடப் போா் படைகளை அமைத்திருந்தனா். அதற்குப் படைத்தலைவனையும் நியமித்திருந்தனா். நால்வகைப் படைகளுள் ஒன்றான யானைகளுக்குப் பள்ளங்கள் தோன்றி அவற்றில் யானைகளை விழச்செய்து அவ்யானைகளை அதற்கேற்ப பலமொழிகள் பேசி பழக்கி படைகளில் ஈடுபடுத்தினா் என்பதன் மூலம் ஒரு நாடு அழியா வண்ணம் காத்தல் பொருட்டுப் பலவகையான போரியல் மேலாண்மை செய்துள்ளனா் என்பது தெளிவு. மேலும்,

***"நெடுஞ்சுழிப் பட்ட கடுங்கண் வேழத்***
***துரவுச் சினந் தணித்துப் பெருவெளிற் பிணிமார்***
***விரவுமொழி பயிற்றும் பாக ரோதை"*** ***(மலை. 325-327)***

எனும் பாடலடியில், காட்டாற்றின் நெடிய சுழியில் விழுந்து அகப்பட்ட தறுகண்மையுடைய யானையின் வலிய சினத்தைத் தணியச் செய்து, பெரிய கம்பத்தில் பிணித்து தாம் ஏவிய தொழிலை அவை செய்வதற்குக் காரணமான மொழிகளைப் பேசி அவற்றைப் பழக்கும் பாகருடைய ஆரவாரம் என்று இப்பாடலில் கூறப்பட்டுள்ளது. மன்னர்கள் யானையைத் தம்முடைய போர்த்தொழிலில் ஈடுபடுத்த, அவ்யானைகளுக்குப் பாகர்கள் போர்ப் பயிற்சி அளித்துள்ளதை,

***"விரவு மொழி பயிற்றும் பாகம்"*** ***(மலை. 327)***

என்ற பாடலடியின் மூலம் உணர்த்தலாம். இவ்வாறு பகைமன்னரின் ஆளுகைக் காரணமாக நடக்கவிருக்கும் போரிலிருந்து மக்களைப் பாதுகாக்க இது போன்ற போர் பயிற்சி மேற்கொண்டுள்ளனர். மேலும்,

***"கோலோர்க் கொன்று மேலோர் வீசி"*** ***(மதுரை. 381)***

சினம் மிக்க யானைகள் பரிக்கோல் காரரைக் கொன்று பாகரை, வீசி எறியும் என்ற அடிகளின் மூலம் யானைகளைப் போரில் ஈடுபடுத்த, அதனைப் பழக்குவதற்குப் பரிக்கோல்காரர் மற்றும் பாகன் ஆகியோரை நியமித்திருந்தனர் என்பது புலப்படுகிறது.

கையில் எடுத்த மத்திகையையுடைய குதிரையை வழிப்படுத்தி நடத்த வல்லவன் (வாசி ஆசிரியன்) ஐந்து கதிகளிலும், பதினெட்டுச் சாரிகைகளும் அக்குதிரைகளுக்குப் பயிற்சி அளித்துள்ளமையால், தங்கள் குளம்புகள் அழுந்திய வட்டமான இடத்திலும் ஆதி என்னும் கதியில் அவை ஓடின. அவை ஒழுங்குபட்ட பிடரியினையும் இடுமயிரினையும் கொண்டவை என்று குதிரைகளைப் போர்ப் பயிற்சிகள் வழங்கி முறையாகப் போரில் ஈடுபடுத்தியதை,

***"கொண்ட கோலன் கொள்கை நவிற்றலி***
***னடிபடு மண்டிலத் தாதி போகிய***
***கொடிபடு சுவல விடுமயிர்ப் புரவியும்"*** ***(மதுரை. 389-391)***

என்ற பாடலடிகளின் வழி அறியமுடிகின்றது. இதன் மூலம் உயிரினங்களாகிய யானை, குதிரைகளுக்குப் போர் பயிற்சியளித்துப் பகைவர்களினால் ஏற்படும் போர் அழிவுகளிலிருந்து படைகளை அமைத்து முறைசார் மேலாண்மை மேற்கொண்டதை அறியமுடிகிறது.

## காலாட்படை அமைப்புகள்

பகைமன்னரிடமிருந்து மக்களைக் காக்க சங்ககால அரசர்கள் மறவர்களைக் கொண்ட பெரும்படைகளை நிறுவினர். போர் நிமித்தம் மறவர்கள் படைகள் திரண்டு சென்ற நிலையினை,

*"தலையோர் நுங்கின் றீஞ்சேறு மிசைய*
*இடையோர் பழத்தின் பைங்கனி மாந்தக்*
*கடையோர் விடுவாய்ப் பிசிரொடு சுடுகிழங்கு நுகர*
*நிலமலர் வையத்து வலமுறை வளைஇ*
*வேந்துபீ டழித்த வேந்துவேற் றானையொ*
*டாற்ற லென்பதன்"* *(புறம்.225: 1-6)*

என்ற பாடலடியில், சோழன் நலங்கிள்ளியின் காலட்படையில் முன் செல்வோர் பனை மரத்தின் நுங்கினது இனிய செறிவை அருந்துவர். இடையிலே செல்வோர் பழத்தினது செம்மையான பகுதியை நுகர்வர். பின் செல்வோர் நீங்கிய வாயைக் கொண்ட பிசிருடனே சுடப்பட்ட கிழங்கை உண்பர். இவ்வாறு நெடியபடை ஒழுங்குற உலகத்தை வலமுறையாகச் சூழ்ந்து பகை மன்னரின் வலிமையைப் போக்கும், மேம்பாடு மிக்க வேலை கொண்ட சேனையோடு கூடிய ஆற்றலை உடையவன் என்று புகழப்பட்டுள்ளது. இதன் வாயிலாக, மன்னரின் காலாட் படைச்சிறப்பும், பகை மன்னரிடமிருந்து பாதுகாக்கும் தன்மையும் உய்த்துணரமுடிகிறது. போரில் நால்வகைப் படைகளும் போர் புரியும் நிகழ்வினை,

*"விழுச்சூழிய விளங்கோடைய*
*....................................................*
*....................................................*
*தோண்முறையான் வீறுமுற்றவு"* *(மதுரை. 43-54)*

எனும் பாடலடியில், போர்த் தொழிலில் பழகிய பெரிய யானைகள் சிறந்த முகபடாத்தை உடைய நெற்றிப்பட்டம் அணியப் பெற்றவை. மிகுந்த சினத்தை உடையவை. மணம் கமழும் மதநீர் ஒழுகுவதால் சேறுபடிந்த வண்ணம் உயர்ந்த தோற்றம் உடையவை. இவை சினம் மிகுந்து போர்க்களத்தில் உள்ள வீரர்களைக் கொன்று திரிவன என்று யானைப் படையின் தொழில் பற்றிக் கூறப்பட்டுள்ளது. குதிரைக் கூட்டங்கள் பகைவர்மேல் செல்லும் போது எழுந்த மிக்க நிறத்தையுடைய துகள்கள் எங்கும் பரவுவதால் கதிரவனின் வெயில் ஆகாயத்தில் மறைக்கப்படும் என்று குதிரைப்படைப் பற்றியும், தாவும் குதிரைகள் பூட்டப்பட்ட விரைந்து செல்லும் வலிய தேர்கள், காற்றுச் சுழன்று வீசுவதுபோல விரைவாகப் போர்க்களத்தில் சுற்றிவரும் என்று தேர்ப்படையின் செயலினைப்பற்றியும், வாட்போர் புரிந்து தம்முடைய வீரத்தை மிகுத்துக்காட்டும் வீரர் தம் தோளின் வெற்றி, அவர்கள் பகைவர்களை முறையாக வெட்டுவதால் முற்று பெறும் என்று காலாட்படையின் பணியையும் கூறுவதன்

வாயிலாக பகை மன்னனின் படை எடுப்பினால் பேரழிவினைச் சந்திக்காதவாறு தம்நாட்டு மக்களையும், வளங்களையும் காக்க நால்வகைப் படை அமைப்புகளை நிறுவியுள்ளனர் என்பது புலப்படுகின்றது.

## நகரத்தின் அமைப்பு

சங்ககாலத்தில் நகரமானது இயற்கையினாலும் மனிதர்களாலும் பேரழிவுகள் ஏற்படாவண்ணம் கட்டமைத்திருந்தனர். நகரில் அமைந்துள்ள வீடுகளின் அமைப்பு குறித்துப் பின்வரும் பாடல்,

*"ஊகம் வேய்ந்த உயர்நிலை வரைப்பின்*
*வரைத்தேன் புரையம் கவைக்கடைப் புதையொடு*
*கடுந்துடி தூங்கும் கணைக்காற் பந்தர்த்*
*தொடர்நா யாத்த துன்னருங் கடிநகர்*
*வாழ்முள் வேலிச் சூழ்மிளைப் படப்பைக்*
*கொடுங்கந் தழீஇய புதவிற் செந்நிலை*
*நெடுநுதி வயக்கழு நிரைத்த வாயில்*
*கொடுவில் எயினக் குறும்பிற்"* *(பெரும். 122-129)*

ஊகம் புல்லால் வேயப்பட்ட உயர்ந்த மதில் அங்கு மலையில் உள்ள தேன் இறாலை ஒக்கும் அம்புக் கட்டுகள் கடிதாய் ஒலிக்கும் துடிகள் தாங்குகின்ற திரண்ட காலையுடைய பந்தர் சங்கிலியால் நாய்களைக் கட்டி வைத்துள்ள காவல் அமைந்த வீடுகள் உயிர்வாழ் முள்வேலியையும், அதனைச் சூழ்ந்த காவல் காட்டினை உடைய பக்கத்தினையும், திரட்சியையுடைய கணைய மரத்தாலான கதவினையும் செவ்வேள் நிற்கின்ற நெடிய முனையை உடைய வலிய கணுக்களை நிரைந்த ஊர் வாயிலையும் உடைய, கொடிய வில்லினையுடையது எயினர் அரண்கள் என்று பகைவர் மற்றும் இயற்கையிலிருந்து பாதுகாக்க மதில் காவல் அமைந்த வீடு, திரண்ட கதவு, பெரிய அரண்கள் அமைத்து பேரழிவுகள் ஏற்படா வண்ணம் பாதுகாத்துக் கொண்டனர்.

## பாதுகாவல் மேலாண்மை

ஆதி மனிதர்கள் வாழ்ந்த இனக்குழுச் சமூக வாழ்க்கை மாறுபட்டு தனியுடைமைச் சமூகத்திற்கு மனித மாற்றம் அடைந்த காலகட்டமாகச் சங்ககாலம் அமைந்துள்ளது. பெரும்பான்மையும் மருதநிலத்தின் அடிப்படையிலேயே அரசுருவாக்கம் ஏற்பட்டது. தனியுடைமை அரசதிகாரமானது பொதுவுடைமையை எதிர்த்து தனக்கென ஓர் அதிகாரத்தை ஏற்படுத்திக் கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டது. இவ்வாறு ஏற்பட்டதன் விளைவே போர் போன்ற நிகழ்வுகள் ஆகும்.

போரின் போது பல வகையில் பேரிடர் ஏற்பட்டு பல்வேறு வகையில் மனிதர்களும் இயற்கை வளங்களும் அழிவைச் சந்தித்தன. மண்ணைப் பிடிக்கும் நோக்கில் போர்புரிய வரும் மன்னனிடமிருந்து தன்னையும், தன் மக்களையும் காத்துக் கொள்ளும் விதமாக மதில், ஆழி போன்றவற்றை ஏற்படுத்தி அரண்களை உண்டாக்கினர். பாதுகாவலரன் பற்றி,

> ***"மணிநீரும் மண்ணு மலையும் அணிநிழற்***
> ***காடும் உடைய தரண்"*** *(குறள். 742)*

என்று வள்ளுவர் குறிப்பிடுகின்றார். "பண்டைய நாட்களில் பாதுகாவலரணாக நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண் என நான்கு வகை அரண்கள் அமைத்தல் வழக்கம்"[20] என்று பாதுகாவல் மேலாண்மைப் பற்றிய பொ.வே. சோமசுந்தரனார் விளக்கியுள்ளார்.

> ***"கராஅங் கலித்த குண்டுகண் ணகழி***
> ***இடங்கருங் குட்டத் துடன்றொக் கோடி***
> ***யாமங் கொள்பவர் சுடர்நிகற் துரிஉம்***
> ***கடுமுரண் முதலைய நெடுநீ ரிலஞ்சிச்***
> ***செம்புறழ் புரிசைச் செம்மல் மூதூர்"*** *(புறம்.37: 7-11)*

இப்பாடலில் கராம் நிறைந்த ஆழ்ந்த இடமுடைய அகழி, இருள் பெற்ற ஆழ்ந்த இடத்தில் சேர்ந்து திரண்டோடியதும், இடையாமத்து இரவுக்காலத்தில் தம் விளக்குகளின் நிழல் படிந்ததும் கடுமையான மாறுபாடுடைய முதலைகள் நீர் மிகுந்த மடு செம்பினால் அமைந்த மதில் என்று செயற்கையில் உண்டாக்கப்பட்ட அகழியையும், அதில் பாதுகாப்பு கருதி முதலையையும் கொண்டு விளங்குவதை விளக்கியுள்ளனர். பகை நாட்டினர் படை எடுத்து வரும்பொழுது அகழி மற்றும் மதிலைக் கடந்து வருதல் என்பது கடினமானது ஆகையால் அழிவிலிருந்து தம்மைக் காத்துக்கொள்ள இவ்வாறு அரண்களை அமைத்தனர். சங்க மன்னர்கள் தங்கள் குடிகளைச் சுற்றி பகைவர் அணுகா வண்ணம் பாதுகாவலை அதிகரித்து மக்களையும் நாட்டின் வளங்களையும் காத்துள்ளனர்.

> ***"மன்ற விளவின் மனைவீழ் வெள்ளில்***
> ***கருங்க ணெயிற்றி காதன் மகனொடு***
> ***கான விரும்பிடிக் கன்றுதலைக் கொள்ளும்***
> ***பெருங்குறும் புகுத்த வன்புல விருக்கைப்***
> ***புலாஅ வம்பிற் போரருங் கடிமிளை***
> ***வலாஅ ரோனே"*** *(புறம்.181: 1-6)*

இப்பாடலில், ஊர் மன்றத்தில் உள்ள விளாமரத்தின் பழம் மழையிடத்து முற்றத்தில் வீழ்ந்தால், கரிய கண்ணையுடைய எயிற்றியின் காதல் மகனான சிறுவனும், காட்டு யானையின் சிறு கன்றும் ஒன்றாக வந்து எடுப்பர். அத்தகைய அரண் சூழ்ந்த வன்னிலத்தில்

அமைந்தது புலால் நாறும் அம்பினையும் பொருதற்கரிய காவற் காட்டினையுமுடைய ‘விலார்’ எனும் ஊர். மன்னன் தன் ஊரில் வாழும் மக்களுக்குப் பாதுகாவலைக் கொடுக்கும் கடமையுடையவன். ஆதலால் விலார் எனும் ஊரில் பாதுகாவலான அரணும், காவற்காடும் உள்ளதால் மக்கள் பகைவர்களால் எவ்வித அழிவும் ஏற்படாமல், மகிழ்வுடன் வாழ்கின்றனர்.

“தங்கள் நாட்டையும், நகரையும், தங்கள் வாழும் இடத்தையும் பகைவரிடமிருந்து காக்கவேண்டும் என்ற எண்ணம் மக்களுக்கு எழுந்தது நனிமிகப் பழைய காலத்தில். ஆனால், அவ்வுணர்வு உண்டாகிய அந்தக் காலத்திலேயே, அவர்கள் அத்தகைய அரண்களைத் தாமாகவே ஆக்கும் முறையினை அறிந்து கொண்டாரல்லர். அதனால் அரண்களைத் தாமாகவே அமைந்திருக்கும் இடந்தேடித் தங்கள் வாழிடங்களை வகுத்துக் கொண்டனர்.”[21] இதன் மூலம் தொடக்க காலத்தில் பாதுகாவலைத் தேடி அலைந்ததன் விளைவே பிற்காலத்தில் செயற்கையில் அரண்கள் அமைத்து ஊரினைப் பாதுகாவலுடன் பகைமன்னர் அழிக்கா வண்ணம் பாதுகாத்துப் பேரழிவு ஏற்படா வண்ணம் மேலாண்மை செய்துள்ளனர் என்பது புலப்படும். மேலும்,

***“துஞ்சுமரந் துவன்றிய மலரகன் பறந்தலை***
***ஓங்குநிலை வாயில் தூங்குபு தகைத்த***
***வில்விசை மாட்டிய விழுச்சீ ரையவிக்***
***கடிமிளைக் குண்டு கிடங்கின்***
***நெடுமதில் நிரைப்பதணத்***
***தண்ணலம் பெருங்கோட் டகப்பா”*** ***(பதிற்.22: 21-26)***

மதிலின் வாயில்களை மரத்தால் செதுக்கப்பெற்று அகன்ற வெளியில் அமைந்திருந்தன. அவ்வாயிலில் வில்லின் விசையோடு பொருந்திய மேலான சிறப்புகளையுடைய அம்புக்கட்டுகள் பொருந்தப் பெற்றிருந்த ஐயவித்துலாம் தொங்குமாறு கட்டப்பெற்றிருந்தது. பறந்தலையை அடுத்துக் காவலையுடைய காட்டையும், ஆழமான அகழியையும், உயரமான மதிலையும், மதிலினுள் மேடையையும் கொண்டிருந்தன. இத்தகைய பகைவர்களிடமிருந்து பாதுகாக்கும் வண்ணம் சிகரங்களோடும் அமையப்பெற்றது அகப்பா எனும் ‘அரண்’. இவ்வாறு சங்ககால மன்னர்கள் அரண்களை அமைத்து பகை மன்னரிடமிருந்து தன் நாட்டை அழியா வண்ணம் முறையாக மேலாண்மை செய்துள்ளனர் என்பதை உணரமுடிகிறது.

## மதில்களின் அமைப்பு மற்றும் வகைகள்

மதில்கள் பகைவர்கள் நுழைவதற்கு மிகவும் அரிதான ஒன்றாக அமைந்திருந்தது. மேலும், மதில்களை எவ்வாறு அமைக்க வேண்டும் என்பதற்கான குறிப்பினை,

*"வான்றோய்வு வன்ன புரிசை விசும்பின்*
*மீன்பூத்தன்ன வுருவ ஞாயில்*
*கதிர்நுழை கல்லா மரம்பயில் கடிமிளை*
*அருங்குறும்பு டுடைத்த கானப் பேரெயில்"* *(புறம்.21: 2-6)*

இப்பாடலில் கானப்பேரெயில் நிலத்தின் எல்லை கடந்த ஆழத்தைப் பெற்ற அகழியையும், விண்ணைத் தொடுவது போன்ற வடிவத்தை ஒத்த மதில் உச்சியையும், ஞாயிற்றின் கதிர் நுழையாத காவல் மரம் செறிந்த காவற்காட்டையும் கடத்தற்கு அரிய சிறு அரண்களையும் உடையது என்று குறிப்பிட்டுள்ளார். மன்னன் இருக்கும் அரண்மனையைச் சுற்றி அகழி, உயரமான மதில், மதில் உச்சி, காவற்காடு, சிறு அரண் என ஒன்றன்பின் ஒன்றாக அமைத்துப் பாதுகாப்பினை ஏற்படுத்தியுள்ளனர். பகை மன்னனின் படையெடுப்பினால் ஏற்படும் பேரழிவினைத் தடுத்து பேரிடர் ஏற்படும் முன்பே அரண்களை அமைத்து பாதுகாவலுடைய ஆட்சியை ஏற்படுத்தியுள்ளனர். மேலும், சங்க மன்னர்கள் மனிதனால் ஏற்படும் பேரிடரைத் தீர்க்கும் மேலாண்மையைத் திறம்பட பெற்றிருந்தனர் என்பது புலப்படும்.

பகைமன்னர்கள் மற்றும் பிறரால் தம் நாட்டினை எளிதில் தாக்கா வண்ணம், வன்மையான மதில்களை அமைத்திருந்தனர். மதில்களின் அமைப்பினை,

*"கோடுறழ்ந் தெடுத்த கொடுங்க ணிஞ்சி*
*நாடுகண் டன்ன கணைதுஞ்சு விலங்கல்*
*துஞ்சு மரக்குழாந் துவன்றிப் புனிற்றுமகள்*
*பூணா வையவி தூக்கிய மதில*
*நல்லெழி னெடும்புதவு முருக்கிக் கொல்லுபு"* *(பதிற்.16: 1-5)*

எனும் பாடலடிகள்,

- ❖ பகைவர் நாட்டில் மலையொடு மாறுபட்டுத் தோன்றுமாறு கட்டிய வளைந்த இடங்களையுடையது புறமதில்.
- ❖ மதில் நீண்ட நாட்கள் அடைக்கப்பட்டுக் கிடக்கும் காலத்தில் வளைத்துக் கொள்வதற்கு ஏற்ப வயலும் குளமும் உள்ளதால் பெரிய நாட்டினையே காண்பாற் போன்ற பரந்த இடத்தினையுடையதும் அம்புக்கட்டுகள் பொருத்தப் பெற்றதுமாகிய மலை போன்ற இடைமதில் உள்ளது.
- ❖ மதிற்கதவின் பின்புறத்தே பொருத்தப்பட்ட கணை மரங்கள் நெருங்கியிருப்பதும், அண்மை காலத்தில் மகவை ஈன்றுள்ள மகளிர் பூசிக் கொண்ட ஐயவி ஆகிய துலாமரம் கதவிற்குக் காவலாகப் புறவாயிலிலே தொங்கவிடப்பட்டிருப்பதும் ஆகிய

மதில் உள்ளது என்று ஒரு நாட்டை பகை மன்னரிடமிருந்து காத்தல் பொருட்டு மூன்று வகையான மதில்கள் அமைத்து பகைவர்களினால் பேரழிவு ஏற்படா வண்ணம் பாதுகாவல் மேலாண்மை செய்துள்ளனர் என்பதை உணர்த்துகின்றது.

*'கொளற்க ரியதாய்க் கொண்டகூழ்த் தாகி அகத்தார்*
*நிலைக் கெளிதாம் நீரது அரண்'* (குறள். 745)
*'சிறுகாப்பிற் பேரிடத்த தாகி உறுபகை*
*ஊக்கம் அழிப்ப தரண்'* (குறள். 744)

என்று மதில் பற்றியக் குறிப்பினைத் திருவள்ளுவரும் பின்னாளில் குறிப்பிட்டுள்ளார்.

## பகைவர்களால் அழிவு உண்டாகும் போது அதனைத் தடுத்தல்

பாதுகாவல் அமைந்த மதிலிடத்தே புகுந்து அதனைக் கொள்ளவரும் பகைவர்களின் செருக்கை அழித்து அவர்கள் மாறுபாட்டை அழிப்பதால் நகர்புறத்தைக் கைவிடாது காக்கும் நெடுந்தகையின் பெருமை உடையவன் நொச்சி வீரன் என்பதை,

*"காப்புடைப் புரிசை புக்குமா றழித்தலின்*
*ஊர்ப்புறங் கொடாஅ நெடுந்தகை"* (புறம்.272: 6-7)

என்று படைக்கப்பட்டுள்ளது. நகரில் வரும் மக்கள் மற்றும் பிற வளங்களைப் பாதுகாக்கும் நோக்கில் மதில்கள், அரண்கள் அமைக்கப்பட்டுள்ளன. அத்தகைய மதில்களையும் பகைவர்கள் தாக்கி நகரை அழிக்கும் தன்மையில் மன்னனின் படைவீரர்கள் எதிரி மன்னரின் தாக்குதலிருந்து நகரை காக்கும் மரபு இருந்தமையையும், இதன் மூலம் நகருக்கு ஏற்படும் பேரழிவைத் தடுத்தமை குறித்தும் அறியமுடிகின்றது.

இதில் மதில், நொச்சி வீரராகிய படையமைப்பு போன்றவை மக்களுக்கும், வளங்களுக்கும் பாதுகாவல் அளிக்கும் வகையில் மண்ணால் அமைக்கப்பட்ட காவல் அமைப்பாகும். இது பகைவரிடமிருந்து மக்களைக் காக்கும் மன்னனின் பாதுகாவல் மேலாண்மையாகும். இதன் மூலம் சங்ககாலத்தில் பகைவரிடமிருந்து தம்மையும், தம் நாட்டு மக்களையும் பேரழிவிலிருந்து காத்துக்கொள்ள அழிவு ஏற்படும் முன்பே தற்காப்பு நடத்தை போல அரண்களை அமைத்து மேலாண்மை செய்திருந்தனர் என்பதை உணரமுடிகிறது.

மதிலின் வாயில்கள் அழகிய வேலைப்பாடுகளுடன் கூடிய கலைநயத்துடன் உயர்ந்ததாகவும், வலிமையானதாகவும் காணப்பட்டன. இதனை,

*"திரைபடக் குழிந்த கல்லகழ் கிடங்கின்*
*வரைபுரை நிவப்பின் வான்றோ யஞ்சி*
*யுரைசெல வெறுத்தவென் மூதூர்"* (மலை. 91-93)

இரையைத் தேடி உலாவும், வளைந்த காவலையுடைய முதலைகளுடன் திரையுண்டாகும்படி ஆழமாகக் கல்லை அகழ்ந்து உண்டாக்கப்பட்ட அகழியையும், மலையைப் போன்ற உயர்ச்சியையுடைய வானைத் தீண்டும் மதிலையும் கொண்டு புகழ் எங்கும் பரவுமாறு செறிந்த அவனது பழைய ஊர் என்று பகை நாட்டின் பேரழிவிலிருந்து காக்க முதலைகளைக் கொண்ட ஆழமான அகழியையும் உயர்ந்த மதிலையும் பாதுகாவலாகக் கொண்டு ஊரினை பேரழிவிலிருந்து மேலாண்மை செய்துள்ளனர். மேலும், பின்வரும் பாடலும் மதிலின் வலிமையை,

> ***"பெரும்பெயர் மன்னர் கொப்ப மனைவகுத்து***
>
> ……………………………………………….
>
> ……………………………………………
>
> ***குன்றுகுயின் றன்ன வோங்குநிலை வாயிற்"*** ***(நெடு. 78-88)***

பெரும்புகழுடைய மன்னர்களின் தகுதிக்கும் தேவைக்கும் ஏற்ப மனைகளும், மண்டபங்களும் தம்முள் கொண்டதாக மதிலின் கோபுர வாயில் உருவாக்கப்பட்டது. மதிலின் வாயிலில் அமைக்கப்பட்டுள்ள கதவுகள் ஆணிகளும், பட்டயங்களுமாகிய பருத்த இரும்புகளால் பிணிக்கப்பெற்றவை. அவை சாதிலிங்கக் குழம்பினால் செவ்வண்ணம் பூசப் பெற்றவை. தாழ்ப்பாளுடன் சேர்த்து அமைக்கப்பட்ட இவ்விரு கதவுகளும் தம்முள் சிக்கென இணைந்து பொருந்துபவை. இருபத்தேழு விண்மீன்களில் உத்திரம் என்ற பெயரைக் கொண்ட கற்பலகை வாயிலின் இரு கதவுகள், குவளையின் புதிய மலர்களை உயர்த்தித் தங்கள் துதிக்கைகளால் ஏந்திய பிடிகளின் உருவங்களும், அவற்றின் நடுவில் திருமகள் உருவம் பொறிக்கப்பட்டிருக்கும். கைத்தொழில் வல்ல தச்சனால், இடைவெளி தோன்றாமல் பல மரங்களைச் சேர்த்து அடுக்கி மதிலின் வாயில் உருவாக்கப்படும். அவ்வாயில் நிலை நெய் பூசப்பட்டு, வெண்சிறு கடுகினால் தூவப்பெற்ற அழகுடையதாகும். அரசனின் வெற்றியைக் குறிக்கும் வண்ணம் யானைகள் அரண்மனைக்குள் நுழைவதற்கு ஏற்றவாறு கோபுரவாசல் அகலமாகவும் உயரமாகவும் அமைந்திருக்கும். இவ்வாயில் மலையின் நடுவில் வெளியிடம் உண்டாகுமாறு திறந்தது போன்ற தோற்றமுடையதாகும்.

இவ்வாறு பகை மன்னரிடமிருந்து தம்மையும் தம் நாட்டையும், நாட்டு மக்களையும் காக்க, பகைவரின் ஊக்கத்தைக் கெடுப்பதாக அரண் அமைத்துள்ளனர். மேலும், வாயிலானது வலிமை பெற்று, விளங்குவதற்காக ஆணிகள், பட்டங்களாகிய பருத்த இரும்புகளால் கைவலிமைமிக்க கம்மியனால் உருவாக்கப்பட்டது என்ற குறிப்பினால், பகைவர்களால் தன் நாட்டிற்குப் பேரழிவு ஏற்படா வண்ணம் பாதுகாவல் மேலாண்மை செய்துள்ளனர் என்பது புலப்படுகின்றது.

## மக்களின் குறைதீர்ப்பதில் அமைச்சர்களின் பங்கு

மக்களின் குறைகளை அறிந்து வந்து மன்னர்களுக்குக் கூறியதோடு, அதை களைய வேண்டிய அறிவுரைகளைக் கூறி, சிறந்த வழிகாட்டியாளர்களாவும் திகழ்ந்தவர்கள் சங்ககாலத்து அமைச்சர்கள். இதனை மெய்ப்பிக்கும் விதமாக,

> ***"நன்றுந் தீதுந் கண்டாய்ந் தடக்***
> ***யன்பு மறனு மொழியாது காத்துப்***
> ***பழியொரீஇ யுயர்ந்து பாய்புகழ் நிறைந்த***
> ***செம்மை சான்ற காவிதி மக்கள்"*** ***(மதுரை. 496-499)***

என்ற பாடலில், அரசனிடம் உள்ள நன்மைகளையும், தீமைகளையும் மனத்தால் கண்டு, அத்தீங்குகளை ஆராய்ந்து அவற்றில் ஒழுகாமல் அடக்குபவர். அன்பையும், அறனையும், நீங்காமல் பாதுகாப்பவர். பழி தம்மிடம் வராமல் நீக்கி, ஏனை போரினும் உயர்ந்து விளங்குபவர். பரவிய புகழால் நிறைந்தவர். விளங்குகின்ற மயிர்க்கட்டுக்கட்டி அரசனால் தலைமை அமைந்த காவிதிப்பட்டம் பெற்ற அமைச்சர் என்று சங்ககாலத்தில் மன்னர்கள் தவறான வழியில் செல்லாது அவர்களுக்கு மக்களின் நிலையை எடுத்தோதி, மக்களுக்கும் மன்னர்களுக்கும் இணைப்புபாலமாக அமைச்சர்களாகிய காவதி மக்கள் விளங்கினர்.

"அரசவைக் களத்தில் சான்றோர், அங்குக் கொண்டு வரப்படும் வழக்குகளை விசாரித்து அரசனுக்கு உதவினர். மக்கள் துயர் துடைத்தனர். அரசவையில் மக்கள் முறையீடு செய்தனர். அறங்கூறு அவையத்தார் எனப் பாராட்டப் பெற்றனர். அரசவைக் களத்தில் சான்றோரை அரசனே அமர்த்தினான்."[22] இத்தகைய காவிதி மக்களாக புலவர்களும் இருந்தனர். போரினால் ஏற்படும் தீங்கு அதிக வரிப்பணம் வசூலிப்பதால் மக்கள்படும் துன்பங்கள் போன்றவற்றை மன்னர்களுக்கு எடுத்துரைத்து மேலாண்மைச் செய்துள்ளனர் என்பதன் மூலம் அமைச்சர்களாகிய காவிதி மக்கள் ஒருவகையில் மேலாண்மை வாதிகளாக செயல்பட்டுள்ளனர் என்பதையும் மன்னனின் கீழ் நடைபெற்ற அரசியல் சார்ந்த மேலாண்மை திறத்தையும் உணர முடிகின்றது.

## பிணி போக்கும் மேலாண்மை

பிணிகளில் மிகவும் கொடுமையானது பசிப்பிணியாகும். அதனால்தான் வள்ளுவரும்,

> ***"உறுப்பசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்***
> ***சேரா தியல்வது நாடு"*** ***(குறள். 734)***

என்று, பசிப்பிணியை முதலில் வைத்துக் கூறியுள்ளார். ஔவையாரும் இளமையில் வறுமை கொடியது என்று பாடியுள்ளார். அத்தகைய வறுமையின் பிடியில் ஒரு சமூகமே இருந்துள்ளதை,

*“பாணர் காண்கிவன் கடும்பின திடும்பை*
*யாணர்ப் பழுமரம் புள்ளிமிழ்ந் தன்ன*
*..............................................................*
*சோறுடைக் கையர் வீறுவீ றியங்கும்*
*இருங்கிளைச் சிறாஅர்க் காண்டுங் கண்டும்*
*மற்று மற்றும் வினவுதுந் தெற்றெனப்*
*பசிப்பிணி மருத்துவ னில்லம்*
*அணித்தோ சேயத்தோ கூறுமி னெமக்கே”* *(புறம்.73: 2-12)*

இப்பாடலில், புது வருவாய் உடைய பழுமரத்தில் பறவையினம் ஒலித்தாற் போல, உணவு உண்பதால் உண்டாகிய ஆரவாரம் கேட்கும். சோறுடையக் கையினராய் வேறு வேறு போகின்ற பெருஞ்சுற்றத்தோடு கூடிய பிள்ளைகளைக் காண்போம். அவ்வாறு கண்டும் பசி வருத்தத்தாலும் வழி நடந்த வருத்தத்தாலும் பின்னரும், பெருவிதுப்புற்றுக் கேட்கின்றோம், பசிநோய் தீர்க்கும் மருத்துவனாகிய பண்ணன் இல்லம் பக்கமோ, தூரமோ தெளியச் சொல்லுங்கள், என்று பதிவு செய்துள்ளார். இப்பாடலில் சங்ககால மக்களின் ஏழ்மையினையும் வறுமையினால் ஏற்படும் பசியின் கொடுமையினையும் கூறியுள்ளார். மேலும், மக்கள் ஆரவாரம் கேட்கும் அளவிற்கு வறுமையில் உள்ளதை உணர்த்துவதால், பசியினால் ஒரு குறிப்பிட்ட இனமக்கள் ஒவ்வொருநாளும் இருந்துள்ளதை உணரமுடிகின்றது.

வறுமைச் சூழல் நிலவிய காலத்தில் மன்னனே மக்களுக்கு முதன்மையாகக் கருதப்பட்டான். இதனை,

*“நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே*
*மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்*
*அதனால் யானுயிரென்ப தறிகை*
*வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே”* *(புறம்.186: 1-4)*

உடல், உயிரை ஆக்கும் நெல்லும், நீரும் செழிப்படைவது மன்னன் முறை செய்து காக்கும் ஆட்சித் திறத்தால் ஆகும். நாட்டின் அரசு முறை இன்றியமையாமையின் அதனைச் செலுத்தும் அரசனே உலகினிற்கு உயிராவான். உயிர் தான் இருக்கும், உடம்புக்கு வந்த நோயைத் தாங்கிக் கொண்டு அதனைப் பேணுதல் போல அரசன் உலகைக் காப்பதன் பொருட்டு வரும் துன்பம் அனைத்தையும், உயிராகிய தான் ஏற்று, உடலாகிய மக்களைக் காப்பது கடன். இதனால் உலகில் மக்கள் உயிர் வாழ்வதற்கு நெல்லும், நீருமே முதன்மையானது. அத்தகைய முதன்மையான, உயிர் போன்றதை மன்னன் செங்கோல் ஆட்சி நடத்தி, மக்களைக்

காக்கும் கடமை உணர்வுடன் செயல்பட வேண்டும் என்பதை இங்கு வெளிப்படுத்தியுள்ளார். மக்களின் நோயைப் போக்கும் பாதுகாப்பை அளிப்பவன் மன்னன் என்பது சங்ககால அரசியல் நிலையின் பாற்பட்டதால், இந்த கருத்தை முதன்மைப் படுத்தியுள்ளார் புலவர்.

ஆய் அண்டிரனின் புகழைப்பாடக் கருதிய மோசிக்கீரனார் இமயமலையுடன் ஒப்பிட்டுக் காட்டியுள்ளார். இமயமலை இயற்கை வளம் நிரம்பியது. அது வானத்திலுள்ள தேவருலகத்துடன் ஒப்பானது. அத்தகைய இமயத்தைத் தாங்க யாவரும் வேண்டியதில்லை. தென்திசைக்கண் ஆய்குடி அங்கு வாழும் மக்களையும், மற்ற உயிர்களையும் தாங்கி நிற்கின்றது. அவ்வாறு இல்லையாயின் இவ்வுலகம் அழிந்துவிடும் என்பதை,

*"வடதிசை யதுவே வன்றோ யிமயம்*
*தென்றிசை யாஅய்குடி யின்றாயிற்*
*பிறழ்வது மன்னோவிம் மலர்தலை யுலகே"* *(புறம்.132: 7-9)*

என்று பாடியுள்ளார். இதில் இயற்கை வளமிக்க இமயத்தை அது தானாகவே காத்துக் கொள்ளும். ஆனால் தென்திசையில் வாழும் மக்களை ஆய் ஒருவனே காப்பான். அவ்வாறு அவன் இல்லாமல் போனால் நிலமானது தன்நிலைக் கெட்டு மேல் கீழாக அழியும் என்று பாடியுள்ளார். இயற்கை வளம் பொருந்திய இமயத்தையொத்து ஆய்அண்டிரனும் மக்களைப் பேணுதலால் மட்டுமே உலகம் அழியாமல் நிலைத்துள்ளது என்பதனைக் கூறுவதால் சங்க மன்னர்கள் மக்களின் துயரைப் போக்கும் மேலாண்மைவாதிகளாய் செயல்பட்டுள்ளனர் என்பதைக் குறிப்பால் உணரமுடிகின்றது.

இயற்கையாகிய வான்மேகம் பசிப்பிணி போக்குவதற்கு மழைநீரால் மக்களுக்கு வளங்களைக் கொடுக்கும் தன்மையுடையது. அத்தகைய வான்மழை நாணும்படிக் கொடை வழங்குபவர்களாகப் பண்டைய வேந்தர்கள், வள்ளல்கள் செயல்பட்டனர்.

*"வான நாண வரையாது சென்றோர்க்*
*கானா தீயுங் கவிகை வண்மைக்*
*கடுமான் கோதை............................."* *(புறம்.54: 6-8)*

இப்பாடலில் இயற்கையில் கிடைக்கும் வளங்கள் சில நேரங்களில் குறைவாக இருப்பினும் அதனால் ஏற்படும் அழிவுகளைத் தடுக்கும் வகையில் மன்னர்கள் கொடைகளை வழங்கி மக்களின் அழிவைப் போக்கியுள்ளனர். சங்க காலத்தில் இயற்கைப் பொய்த்து நின்றாலும் மன்னன் அதனை ஈடுசெய்து மக்களை அழிவிலிருந்து காக்கும் பேரிடர் மேலாண்மைப் புலப்படுகிறது.

## புலவர்களின் வறுமையைப் போக்கும் அரசர்கள்

சங்க காலத்தில் பல்வேறு இன மக்கள் தங்கள் பொருளாதார நிலைக்கேற்ப வாழ்வினை மேற்கொண்டனர். நால்வர்ண அடிப்படையில் மரபு வழியாக அரச மரபில் வாழ்ந்தவர்கள் தனக்குக் கீழ் வாழ்ந்த மற்ற குலத்திலனருக்கு இரவல் கொடுத்து வாழும் புரவலராகக் காணப்பட்டனர்.

சமூகத்தில் விளிம்பு நிலையில் வாழும் விறலியர், பொருநர் போன்ற மக்கள் தங்கள் வாழ்வில் உணவிற்காகத் தேவையான பொருட்கள் கிடைக்கப்பெறாது குப்பையில் முளைந்த கீரையை அரித்துண்ட வறுமையின் உச்ச நிலையை சங்கப் பாடல்களில் காணமுடிகிறது.

***"வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த***

**..........................................**

**..........................................**

***பெருங்களிறு நல்கி யோனே"*** ***(புறம்.140: 3-8)***

இப்பாடலிலும் மனைப்பக்கத்தில் பறித்த கீரை இலைக்குத் தேவையான துவரை, அரிசி இல்லாமல் இரவல் கேட்கும் நிலை காணப்பட்டது. மழையின்மை வறட்சி போன்ற காரணங்களால் இக்கொடிய வறுமை ஏற்பட்டிருக்கலாம். நாஞ்சில் வள்ளுவனாகிய குறுநில மன்னன் வறுமையைப் போக்கி அவர்களின் நிலைகண்டு தேவையான உணவினை அளித்தான் என்று பதிவு செய்யப்பட்டுள்ளது. அதற்கு உறுதுணையாக ஔவையார் இருந்துள்ளார். மேலும், பசி, பட்டினி போன்ற கொடிய நோயால் இறந்துபடாமல் காக்க மன்னர்கள் பசிப்பிணி போக்க ஆங்காங்கே உணவுச்சாலைகள் அமைத்திருந்த நிகழ்வினை,

***"திருத்துஞ்சுத் திண்காப்பிற்***

**................................**

***யாறுபோலப் பரந்தொழுகி"*** ***(பட். 41-45)***

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. இம்மை வாழ்விற்கு ஏதுவாகிய புகழ் நிலைபெற்ற சொல் எங்கும் பரவி விளங்கவும், மறுமை வாழ்விற்கு ஏதுவாகிய அறம் நிலைபெற்று விளங்கவும், காவிரிப் பூம்பட்டினத்தில் அகன்ற உணவுச்சாலைகள் இருந்தன. அவற்றில் சோற்றை வழங்கும் போது, ஒழுகும் வளமான கஞ்சி ஆறு போல எங்கும் பரவி ஓடும் என்ற குறிப்பினால், மக்களின் வாழ்வில் முதன்மை நோயான பசிப்பிணியைப் போக்க உணவுச் சாலைகள் அமைத்திருந்தனர் என்பதும் அவ்வுணவுச் சாலையில் வழங்கப்பட்ட கஞ்சி ஆறுபோல் ஓடியது என்பதன் மூலம் குறையாது பசியால் வாடுபவரின் துயர் நீக்கிப் பசிப்பிணியால் பேரழிவு ஏற்படா வண்ணம் மேலாண்மை செய்துள்ளான் என்பது புலப்படுகிறது.

### இரவலரின் பசியைப் போக்க ஆற்றுப்படுத்தல்

உயிர்களின் வாழ்வாதாரத்திற்குக் காரணமாக மழை உள்ளது என்றால், அவ்வுயிர்களில் மக்களுக்குப் பாதுகாவலாக இருப்பவன் மன்னன் ஆவான். கைமாறு கருதாது கொடுப்பது மழை ஆதலால் மன்னனை உயர்வாகப் போற்ற புலவர்கள் மழையை உவமையாகக் கூறுவதை,

*"பெருவறங் கூர்ந்த கானம் கல்லெனக்*
*கருவி வானம் துளிசொரிந் தூங்குப்*
*பழம்பசி கூர்ந்தவெம் இரும்பே ரொக்கலொடு*
*வழங்கத் தவாஅப் பெருவள னெய்தி*
*வாலுளைப் புரவியொடு வயக்களிறு முகந்துகொண்டு*
*யாமவ ணின்றும் வருதும்"* *(பெரு. 23-28)*

கொடிய பஞ்சம் சூழ்ந்த காட்டகத்தே ஆரவாரம் உண்டாகும்படி முகில் ஞெரேலென மழையைப் பொழிந்தது என்று பஞ்சத்தினால் ஏற்படும் பேரழிவைப் போக்குவது மழைநீரே என்று மழையின் சிறப்பினைப் பதிவு செய்துள்ளனர். தொன்று தொட்டு 'பழம்பசி'யாலே வருந்திய எம்முடைய பெரிய சுற்றத்தோடு, பிறர்க்குக் கொடுக்கக் கொடுக்கக் குறையாத அளவிறந்த செல்வத்தையும் ஒப்பசைன் செய்யப்பட்ட குதிரைகளையும், வலிமையுடைய களிறுகளையும் அவ்வள்ளல் வழங்க நாங்கள் வாரிக் கொண்டு அவ்வள்ளலின் ஊரினின்று வருகிறோம் என்று நெடுங்காலமாகத் தன் சுற்றத்துடன் வறுமையால், வாழ்ந்தவர்களுக்கு, மன்னர்கள் பொருள்கள் வழங்கினர் என்பதும், அவ்வாறு பெற்றவர்கள் வறுமையில் வருவோரை ஆற்றுப்படுத்தி வறுமை, பசிப்பிணியால் பேரழிவு ஏற்படா வண்ணம் மேலாண்மை செய்துள்ளனர் என்பதும் புலப்படுகிறது. ஆற்றுப்படுத்துதலும் ஒரு வகை மேலாண்மை ஆகும். புலவர்கள் தம் வறுமையைப் போக்க பாடிப்பரிசில் பெற்றுவருவதோடு, தன் இனம் சார்ந்த வறுமையில் வாழும் புலவர்களுக்கும் தான் பரிசில் பெற்று வந்த மன்னனின் புகழினைக்கூறி ஆற்றுப்படுத்துதலைச் செய்து அவர்தம் வறுமையைப் போக்கிக்கொள்ள வழியமைத்துக் கொடுத்துள்ளனர். இதனை,

*"நளிந்துபலர் வழங்காச் செப்பந் துணியின்*
*முரம்புகண் ணுடைந்த பரலவற் போழ்விற்*
*கரந்துபாம் பொடுங்கும் பயம்புமா ருளவே*
*குறிக்கொண்டு மரங்ங் கொட்டி நோக்கிச்*
*செறிதொடி விறலியர் கைதொழூஉப் பழிச்ச*
*வறிதுநெறி யொரீஇ வலஞ்செயாக் கழிமின்"* *(மலை. 197-202)*

செறிந்து பலரும் போகாத வழியில் போகத்துணிவீராயின் அவ்விடம், மேட்டு நிலம் பிளந்ததால் ஏற்பட்ட பரற்கற்களையுடைய பள்ள நிலத்தில் உண்டாகிய வெடிப்புக்களில் பாம்பு மறைந்து கிடக்கும் குழிகளும் உள்ளன. அக்குழிகளை மனத்தால் குறித்துக்கொண்டு விலங்குகளிலிருந்து தப்புவதற்கு மரங்களின் மீது ஏறிக்கொட்டிப் பார்த்து செறிந்த வளையலையுடைய விறலியர், அப்பாம்புகள் மனம் மகிழும்படி கையால் தொழுது வாழ்த்த விலங்குகள் வதியும் வழியைச் சிறிது அகன்று போய் வலப்பக்கத்து வழியை நுமக்கு வழியாகக் கொண்டு செல்வீராக என்று ஆற்றுப்படுத்தும் போது எவ்வித ஆபத்தும் ஏற்படா வண்ணம் செல்ல வழியைக் கூறி ஆற்றுப்படுத்தினர் என்பது புலப்படுகின்றது. மேலும்,

> ***"போற்றிக் கேண்மதி புகழ்மேம் படுந***
> ***ஆடுபசி யுழந்தநின் இரும்பே ரொக்கலொடு***
> ***நீடுபசி யொராஅல் வேண்டி னிடின்***
> ***றெழுமதி வாழி ஏழின் கிழவ"*** ***(பொரு. 60-63)***

என்ற பாடலில், புகழால் மேம்பட்டவனே கொல்வது போன்ற பசியாலே உன் சுற்றத்தார் பெரிதும் வாடியிருக்கின்றனர். நீயும் நெடுநாட்களாகப் பெரும்பசியால் வாடியிருக்கிறாய் நீயும், நின் சுற்றத்தினரும் தொன்றுதொட்டு நீண்ட காலமாக உள்ள பெரும் பசிப்பிணியிலிருந்து நீங்குதலை வேண்டி காலம் நீட்டித்தல் இன்றி உடனே எழுந்து புறப்படுவாயாக என்று கூறப்பட்டுள்ளது. இதில் பசியின் கோரத்தன்மையை 'நீடுபசி' என்றும் நெடிது காலமாக நிலை நின்ற பசிப்பிணி என்றும் உரையாசிரியர்கள் கூறுவதிலிருந்து சங்ககால விளிம்புநிலை மக்கள் பசியினால் அடைந்த துன்பத்தை உணர முடிகின்றது. இவ்வாறு நீண்ட பசியைப் போக்க ஆற்றுப்படுத்தி பேரிழப்பு ஏற்படா வண்ணம் மேலாண்மை செய்துள்ளனர் என்பது புலப்படுகின்றது.

### முறைசாரா மேலாண்மை

### இயற்கை தன்னுள் நிகழ்த்தும் மேலாண்மை

### ஊழிகளால் உருவான இயற்கை

உலக உருவாக்கம் என்பது எளிதாக நிகழவில்லை. பால்வெளி மண்டலத்தில் உள்ள பல்வேறு கோள்கள் நட்சத்திரங்கள் ஆகியவற்றில் ஏற்பட்ட மோதல்கள் போன்ற நிகழ்வினால் உலகம் உருப்பெற்றது. இவ்வாறு பல்வேறு ஊழியின் காரணமாக உருப்பெற்ற உலக உருவாக்கத்தினை,

> ***"தொன்முறை யியற்கையின் மதியொ....***
> ***...................... மரபிற் றாகப்***
> ***பசும்பொன் னுலகமு மண்ணும் பாழ்பட***

*விசும்பி லூழி யூழுழ் செல்லக்*
*கடுவளர் வானத் திசையிற் றோன்றி*
*உருவறி வாரா வொன்ற னூழியும்*
*உந்துவளி கிளர்ந்த வூழூ ழூழியும்*
*செந்தீச் சுடரிய வூழியும் பனியொடு*
*தண்பெய றலைஇய வூழியும் மவையிற்*
*றுண்முறை வெள்ள மூழ்கி யார்தருபு*
*மீண்டும் பீடுயர் பீண்டி யவற்றிற்கும்*
*உள்ளீ டாகிய விருநிலத் தூழியும்"* *(பரி.2: 1-12)*

என்ற வரிகளில், தொன்றுதொட்டு மாறிவரும் இயல்பினையுடைய திங்களும் ஞாயிறும் அழிந்து ஒழியவும், விண்ணுலகமும், மண்ணுலகமும் பாழ்பட்டொழியவும், இறுதியில் அழகிழந்த இயல்பினையுடைய வானமும் அழிந்திருக்கும்படியான ஊழிகள் பல முறை முறையாகக் கழிந்தன. ஊழிகள் பல கழிந்த பின்னர் மூலப்பொருளிலிருந்து தன் குணமாகிய ஒலியுடனே தோன்றி எவ்வகை உருவமும் காணப்படாத காற்று முதலான ஏனைய பூதங்களின் நுண் அணுக்கள் வளர்வதற்கு இடமாகிய 'வானம்' எனும் முதல் பூதத்தினது ஊழியும், அப்பூதத்திலிருந்து உலகப் பொருள்களை இயங்கச் செய்யும் காற்றுத் தோன்றிய முறைமுறையாகிய ஊழிக்காலமும், அக்காற்றிலிருந்து சிவந்த தீத்தோன்றிய ஊழியும், அத்தீயிலிருந்து நீர் தோன்றிய பின்பு பனியும் குளிர்ந்த மழையும் பெய்த ஊழியும், அப்பூதங்களுக்குப் பின்பு அந்நீரிலேயே தோன்றியதால் மீண்டும் அவ்வெள்ளத்தினுள் மூழ்கிக் கரைந்து கிடந்த நில அணுக்கள் மீண்டும், தம் சிறப்பாற்றலால் செறிந்து திரண்டு, முன் தோன்றிய நான்கு பூதங்களுக்கும் உள்ளீடாகிய பெரிய நிலம் ஆகிய ஊழியும் என்று ஊழிகள் தோன்றியது. இவ்வாறு உலகத் தோற்றத்தின் முதன்மை உருவாக்கமாக பஞ்ச பூதங்கள் அனைத்தும் தோன்றியதே ஒரு வகையான ஊழ் ஆகிய அழிவின் காரணமாகும். மேலும், நிலம், நீர், தீ, வளி, விசும்பு என்ற பஞ்ச பூதங்களும், ஒரு நிலையிலிருந்து தம்மை மாற்றத்திற்கு உட்படுத்தி ஒன்றினால் ஒன்றைத் தோற்றுவித்து ஊழியை ஏற்படுத்தி உலகம் உருப்பெற்றது, பேரழிவினாலே என்பதை மேற்கண்ட விளக்கங்கள் மூலம் உணரமுடிகிறது.

இயற்கையானது ஊழிகளால் உருப்பெற்றிருப்பினும் ஒருவாறாக நிலைப்பெற்று ஒன்றுடன் ஒன்று இணைந்துள்ளது. இவ்விணைதலில் பஞ்ச பூதங்களாகிய நிலம், நீர், தீ, வளி, விசும்பு ஆகியவை முதன்மையிடம் பெறுகின்றன. பஞ்ச பூதங்கள் இணைந்து செயல்படுவதினாலே உலகில் உள்ள உயிர்கள் அனைத்தும் உயிர்ப்பெறுகின்றன. இவ்வாறு இயற்கை தன்னுள் இணைந்து செயல்படுதலைப் பற்றி அறிவியல் வளர்ச்சி பெறாத காலத்திலேயே சங்கப் புலவர்கள் தம் பாடல்களில் பதிவுசெய்துள்ளனர்.

*"மண்டிணிந்த நிலமும்*
*நிலனேந்திய விசும்பும்*
*விசும்புதைவரு வளியும்*
*வளித்தலைஇய தீயும்*
*தீமுரணிய நீரு மென்றாங்கு*
*கைம்பெரும் பூதத் தியற்கை"* *(புறம்.2: 1-6)*

என்ற பாடலில், நுண் அணுக்களால் நிறைந்த நிலம், நிலத்தின் மீது ஓங்கி இருக்கும் வானம், வான் பொருந்திய காற்றும், காற்றினால் பெருகும் தீயும், தீயில் மாறுபட்ட நீர் என பஞ்சபூதத்தால் ஆனது இயற்கை என்று உலகத்தின் முதன்மை முழுமுதல் தோற்றம் பற்றி விளக்கப்படுகிறது. ஒன்றை ஒத்து மற்றொன்று விளங்கும் பண்பு இயற்கைக்கு உண்டு. பஞ்ச பூதங்களின் மாறுதலைப் பற்றி,

"நிலம், நீர், தீ, வளி ஆகிய பூதங்கள் காலத்தின் தாக்குதலால், மாற்றத்தால் சில மாறுதல்களை அடைகின்றன. இவற்றை இயற்கை நிகழ்ச்சிகள் என்கின்றோம்"[23] என்ற ஆர். பார்த்தசாரதியின் கூற்று கவனிக்கத்தக்கது. இத்தகு இயற்கை நிகழ்வுகளால் மண், வானம், வளி, தீ, நீர் என ஒவ்வொன்றும் ஒன்றின் நீட்சியாக அமைந்துள்ளன என்பதை,

*"நிலம்தீ நீர்வளி விசும்போடு டைந்துங்*
*ஐந்தும் கலந்த மயக்கம் உலகம் ஆதலின்"* *(தொல். மர: 91)*

என்று தொல்காப்பியரும் குறிப்பிட்டுள்ளார். கபிலர் எழுதிய குறிஞ்சிப்பாட்டில் இவ்வுலக (இயற்கைக்கு) இயக்கத்திற்குப் பஞ்ச பூதங்களே முதன்மைக் காரணமாய் உள்ளது என்பதை,

*"நிறையிரும் பௌவங் குறைபட முகந்துக் கொண்டு*
*அகலிரு வானத்து வீசுவளி கலாவலின்"* *(குறி. 48-49)*

என்ற பாடல் வரிகளில், நீர் நிறைந்த கடலின் நீர் குறையும்படி மேகங்கள் முகந்து கொண்டன. ஏனைய நான்கு பூதங்களும் (நிலம், நீர், நெருப்பு, வானம்) தம்மில் விரிவதற்குக் காரணமாகிய கரிய ஆகாயத்தில் வீசுகின்ற காற்று அம்மேகங்களுடன் கூடுதலால் தொகுதியாகிய அவற்றின் கூட்டம் கலங்கி மலை மிசை மழையைப் பொழிந்தன. இதன் மூலம் பஞ்சபூதங்கள் இணைந்து முறையே செயல்படுதலினாலே இவ்வுலகம் வளம் பெற்று நிலைபெற்றுள்ளது என்பதை வெளிப்படுத்தியுள்ளார். மேற்கூறிய அடிகள் இயற்கை ஒவ்வொன்றும் ஒன்றின் தொடர்பைப் பெற்று ஓரமைப்பில் நிகழ்வதால், உலகில் பேரழிவுகள் நிகழாமல் மேலாண்மை செய்து உலகம் நிலைப்பெற்று இயங்குதலைப் பிரதிபலித்துள்ளன. இத்தகு பஞ்சபூத சீர்மை சங்ககாலத்தில் உணரப்பட்டுள்ளது என்பது வெளிப்படுத்துகின்றது.

**மழை உருவாக்கமும் இன்றியமையாமையும்**

புவியல் உயிரினங்கள் உயிர் வாழ்வதற்கு இன்றியமையாதாக மழை விளங்குகின்றது. இதன் முக்கியத்துவத்தை உணர்ந்த சங்கத் தமிழ்ப் புலவர்கள் பெரும்பான்மையான பாடல்களில் பதிவுசெய்துள்ளனர். மழை பெய்வித்தல் என்பது ஒரு பருப்பொருளின் காரணமாக மட்டுமே நிகழ்வதில்லை. கடல், மேகம், சூரியன், காற்று என்ற பஞ்சபூதங்களுடன் இணைந்து நிகழும் சுழற்சியினால் உருவாகின்றது. இதனை,

*"வான்முகந்தநீர் மலைப்பொழியவு*
*மலைப்பொழிந்தநீர் கடற்பரப்பவு*
*மாரிபெய்யும் பருவம்"* *(பட். 126-128)*

கடல் தாம் முகந்த நீரை, மலையில் சொரிவதற்காகவும் மலையில் சொறிந்த நீரை மீண்டும் கடலில் சேர்ப்பதற்காகவும் மேகங்கள் மழைக்காலத்தில் இடையறாது செய்யும் தொழில் என்று மேகமானது கடலில் நீரைமுகந்து, மலையில் பொழிந்து, மழையிலிருந்து ஆறாகப் பெருகி மீணடும் கடலை அடைகின்றது. அவ்வாறு அடைந்த நீர் மீண்டும் மழைமேகம் பெறுகின்றது என்று நீர் சுழற்சியின் மூலம் உலக உயிர்கள் வளங்களைப் பெற்றுத் திகழ்கின்றன என்பதைக் குறிப்பினால் அறிய முடிகிறது. இயற்கையில் அமைந்த கடல், சூரியன், மேகம் போன்றவை தன்னுள் மேலாண்மை செய்து மழையைப் பெய்விக்கின்றது. மழை வளத்தின் காரணமாகவே உலகில் உள்ள உயிர்கள் அனைத்தும் உயிர்ப் பெறுகின்றன. மேலும்,

*"தெண்ணீர் பரப்பி னிமிழ்திரைப் பெருங்கடல்*
*உண்ணா ராகுப நீர்வெட் டோரே*
*ஆவு மாவுஞ் சென்றுணக் கலங்கிச்*
*சேறோடு பட்ட சிறுமைத் தாயினும்*
*உண்ணீர்.........."* *(புறம்.204: 5-9)*

என்ற அடிகளில், தெளிந்த நீர்பரப்பை உடைய ஒலிக்கும் திரையை உடைய பெரிய கடலினது நீரைத் தாகமுற்றோர் உண்ணமாட்டார். ஆவும் மற்ற விலங்குகளும் சென்று நீரை உண்ணக் கலங்கிச் சேற்றோடு கூடிய சிறுமையை உடையதே ஆயினும் அந்நீரை மக்கள் உண்பர். இதன்மூலம் பெரிய கடலாக இருந்தாலும் அது மக்களின் தேவைக்குப் பயன்படாது. ஆகையால் நன்னீர் ஆகிய மழைநீர், மக்களின் வாழ்வியலுக்கு இன்றியமையாதது என்பதைத் தெளிவுப்படுத்தியுள்ளார்.

கடல்நீரை முகந்ததினால் சூல்கொண்டு எழுந்த மேகங்கள், ஞாயிறும், திங்களும் தோன்றுகின்ற விண்ணிடத்தே நிறைந்து இன்று மழையைப் பொழிந்தன என்பதனை,

***"கார்கோள் முகந்த கமஞ்சூல் மாமழை***
***வாள்போழ் விசும்பில் உள்ளுறை சிதறித்"*** ***(திரு. 7-8)***

என்ற திருமுருகாற்றுப்படை பாடலடிகளில், கடல் நீர் மக்களும் பிற உயரினங்களும் வாழ்வதற்குப் பயனற்று இருப்பதால் மேகங்கள் அக்கடல் நீரை எடுத்துக்கொண்டு நல்ல மழை நீரைக் கொண்டு உலகில் உள்ள அனைத்து உயிரையும் காத்தலால் நீர் மூலம் ஏற்படும் பேரழிவுகளை இயற்கைத் தனக்குள்ளே நிகழ்த்தும் மேலாண்மையினால் தவிர்க்கப்படுகின்றன. மழையின் காரணமாக உலக உயிர்கள் வளம் பெற்றதை,

***"நிறைகடன் முகந்துராய் நிறைந்துநீர் துளம்புந்தம்***
……………………………………………………..
……………………………………………………..
***தாயிற்றே தண்ணம் புனல்"*** ***(பரி.6: 1-10)***

மேகம் நீர் நிறைந்த கடலில் உள்ள நீரை முகந்து கொண்டு விண்ணில் போய் எங்கும் பரவி, நீர் நிறைந்ததால் ததும்பி சுமந்து நிற்கும் பாரம் தீர்ந்து இளைப்பாற்றிக்கொள்ளும் பொருட்டு பெய்வது போல மழையால் நீர் பெருகி வெள்ளமாகி நிலத்தை மறைத்து மூழ்கச் செய்யுமாறு எங்கும் ஓடி நிறைந்தது. அதனால் மலையின் மேல் வாழும் மான் முதலிய விலங்கினக் கூட்டமெல்லாம் கலங்கின. மலையில் தங்கியுள்ள மயில்கள் அகவின. மலையின்மேல் படிந்துள்ள அழுக்குகள் நீங்கும்படி விரைவாக விழும் அருவியைப் போன்று அவ்வெள்ளம் பெருகியது. வெள்ளம் ஓடுதற்குரிய வழிகள் பல பொருந்திய மலைச் சாரலில் குளிர்ச்சியும், அழகும் பொருந்திய அந்நீர், குற்றமற்ற பாடல்களைப் படைக்கும் புலவர்கள், உயர்ந்தோரால் புகழப்படும் அறிவினையுடைய தம் நாவினால் வையையைப் பற்றிப் பாடிய நல்ல கவிதைகள் பொய்யாகாமல் நிலை நாட்டுமாறு, எங்கும் பரவி விரைந்து சென்று உழவு முதலான தொழில்கள் பெருகும் வகையில் தாவிச்சென்றது. இயற்கை, கடலின் நீரை எடுத்துச்சென்று மேகங்கள் மழை பொழிந்ததால், நிலவுலகில் வாழும் உயிர்கள் தமக்கு வேண்டிய பயிர்களை உற்பத்தி செய்து மகிழ்வுடன் வாழ வழி செய்துள்ளது. இவ்வாறு இயற்கை தன்னுள் நிகழ்த்தும் மேலாண்மையை உணரமுடிகின்றது.

நன்னன் செய் நன்னனை பெருங்கௌசிகனார் பாடிய பாடலில் விதைத்த நெல் வளமைபெற மழையே முதன்மையானது எனும் கருத்தை,

***"மிகுவளம் பழுநிய யாணர் வைப்பிற்***
***புதுவது வந்தன் றிதுவதன் பண்பே***
***வானமின்னு வசிவுபொழிய"*** ***(மலை. 95-97)***

நிலத்தில் இட்ட விதைகள் யாவும், நிலத்தில் தங்காமல் இவ்வாறு விளைய வேண்டும் என்று விரும்பிய வாறே விளையும் வண்ணம் மேகம் மின்னலால் மழையைப் பெய்தது. என்பதன் மூலம், மக்கள் உயிர்வாழ முதன்மையானது உணவு, அத்தகைய உணவினை விளைவிக்க நெல் நன்கு வளர மழையே முதன்மையானது ஆதலால் மழையை வேண்டி நின்றனர் என்ற கூறுவதிலிருந்து மழையின் இன்றியமையாமை உணரமுடிகின்றது. மழையின் வளத்தை எண்ணியே தமிழகம் வேளாண்மைத் தொழிலைச் சார்ந்துள்ளது. அதனாலேயே இலக்கியங்களில் ஆற்று வளத்தை விட அதிக இடங்களில் வறட்சியைப் போக்குவது மழை என்று மழையின் சிறப்பை புலவர்கள் எடுத்தியம்புகின்றனர். இதன் மூலம் மக்கள் பசியின்றி வாழும் இன்பமான வாழ்க்கைக்கு உணவுப்பொருட்கள் விளைவிக்க மழையானது தன்னுள் நிகழ்த்தும் மேலாண்மையே காரணமாகிறது என்பதை உணரமுடிகிறது.

## மழையால் வறட்சி நீங்குதல்

இயற்கை தன்னுள் நிகழ்த்தும் மேலாண்மையில் மழை உருப்பெற்று மண்ணில் உயிரினங்கள் வாழ்வதற்கு வழி செய்கின்றன. மலை இடம் பொடிய காடு தீ மிக நீரெல்லையுடைய நீர் நிலைகள் பலவும் தூய கோடை மிகுந்த பசுமையற்ற காலத்துப் பெரிய நிலம் குழியும்படி திரண்ட உருமேறு முழங்கும் மின்னல் முதலாயின தொகுதியையுடைய மழைசொறிந்தது என்பதை,

***“கல்கண் பொடியக் கானம் வெம்ப***
***மலர்குநீர் வரைப்பிற் கயம்பல வுணங்கக்***
***கோடை நீடிய பைதறு காலை***
***இருநில நெளிய வீண்டி***
***உருமுரறு கருவிய மழைபொழிந் தாங்கே”*** ***(புறம்.174: 24-28)***

என்ற பாடலில், இவ்வுலகில் வாழும் உயிர்களுக்கு நீரானது முதன்மையானது, கோடையில் வெப்பமிகுதியால் மலையே பொடியாகும் படியும், காட்டுத் தீ பெறுகியதைக் கூறுவது அதனைத் தவிர்க்க மழை வந்தது என்று கூறுவதன் மூலமும் மழையின் அருமையும், இயற்கை தன்னுள் நிகழ்த்தும் மேலாண்மையும் உய்த்துணர முடிகிறது. மேலும்,

***“கான நந்திய செந்நிலப் பெருவழி***
***வானம் வாய்த்த வாங்குகதிர் வரகின்***
***திரிமருப் பிரலையொடு மடமா னுகள்”*** ***(முல். 97-99)***

காடு செழித்த முல்லை நிலப்பெரிய வழியிலே வேண்டும் பருவத்தே மழைபெய்யப் பெற்றதால் நன்கு விளைந்த கதிரினை உடைய வரகிடத்தே முறுக்குண்ட கொம்புகள் கொண்ட இரலை மான்களுடன், மடப்பத்தையுடைய மான்கள் துள்ளி விளையாடுகின்றன. வானம் தேவையான

பருவத்தே மழை பொழிந்தால், உலகில் வாழ்விற்குத் தேவையான உணவினை விளைவிக்க முடியும். மழை பெய்தமையால் மக்களுக்கு மட்டுமல்லாமல் பிற உயிர்கள் வாழ்வதற்கும் தேவையான ஆதாரங்கள் கிடைக்கின்றன. இதனால் உலகில் வாழும் உயிர்கள் அனைத்தும் இன்பமுடன் வாழ முடியும் என்று மழையினால் மக்கள் மற்றும் பிற உயிர்களின் செயல்பாட்டினைப் புலவர் பதிவு செய்துள்ளார்.

பெரிய நிலம் தோன்றாமல் மறையுமாறு அழகிய மேகம் மிகுதியான மழையைப் பொழிந்தது. உலக உயிர்கட்குப் பாதுகாவலான நீரினை நிரைய வீழ்த்தியது என்பதை,

***"மாநிலந் தோன்றாமை மலிபெயல் தலைஇ***
***ஏமநீர் எழில்வான மிகுத்தரும் பொழுதினான்"*** ***(பரி.தி.2: 1-2)***

எனும் பாடல் அடிகளில் பதிவுசெய்யப்பட்டுள்ளது. இதன் மூலம் சங்ககாலத்தில் பருவமழையானது மக்களின் வாழ்வினைச் செழிப்படைய பெய்திருக்க வேண்டும். மேலும், உலகில் வாழும் அனைத்து உயிர்களையும் வறட்சி போன்ற காலங்களில் ஏற்படும் பசிப்பிணியிலிருந்து பேரழிவுகள் ஏற்படாமல் காத்த நிலையினையும் மேற்கூறிய பதிவுகள்மூலம் அறியமுடிகின்றது. இதேபோல் மற்றொரு பாடலிலும், எம்மை வருத்துகின்ற பசியைப் போக்குவதற்கு மேகம் அறிந்து பெய்தது என்பதனை,

***'வானறி யலவென்ப ராடுபசி போக்கல்'*** ***(புறம்.390: 26)***

அதியனை அவ்வையார் பாடிய பாடலிலும் மழையானது பசிபோக்கும் அருமருந்தாகவும், உலக உயிர்கள் அனைத்தும் உய்யவும் வழிவகை செய்து வருவதை உணர்த்தப்பட்டுள்ளது. இதே போல்,

***"உருகெழு ஞாயிற் றொண்கதிர் மிசைந்த***
***முளிபுற் கானங் குழைப்பக் கல்லென***
***அதிர்குர லேறொடு துளிசொரிற் தாங்குப்"*** ***(புறம்.160: 1-3)***

எனும் பாடலடியும் வறட்சி போக்கும் மழையின் தன்மை காட்டப்பட்டுள்ளது. ஞாயிற்றின் தன்மையால் கதிர்கள் சுடுதலால் காய்ந்த புல்லையுடைய காடுகள் தளிர்க்கும்படி இடியேறு இடித்து மழையைப் பொழிந்தது. இப்பாடலடியில் ஞாயிற்றின் கொடூரத் தன்மையால் நிலங்களில் பயிரிடப்பட்டுள்ள பயிர்கள் காய்ந்துவாடும். மேலும் வறட்சி ஏற்படும் காலங்களில் உயிர்கள் உணவின்றி அழிவைச் சந்திக்க நேரிடும், அவ்வாறு நிகழாமல் மழையானது இடியுடன் கூடிப் பெய்தது என்று பதிவுசெய்துள்ளார்.

முன்பு பயிர்விளைவித்து பின்பு சுடப்பட்டுக் கரிந்த புனத்தை உழுத அகன்ற இடமுடைய கொல்லையில் வேடர் ஐவன நெல்லோடு விதைத்து இருட்சியுற அழகுபெற்றுக்

கோடை மிகுதியால் வாடிய கதிர் ஈனாத தினைக்கு, இழுமெனும் ஒலியுடன் மின்னும் இடியும் முதலாகிய தொகுதியையுடைய மழைத்துளியை வான் சொரிந்ததை,

*"கரிபுன மயக்கிய வகன்கட் கொல்லை*
*ஐவனம் வித்தி மையுறக் கவினி*
*ஈனம் செல்லா வேனற் கிழுமெனக்*
*கருவி வானந் தலைஇ யாங்கும்"* *(புறம்.159: 16-19)*

எனும் பாடலடிகள் மூலம் உணர முடிகின்றது.

*"விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே*
*பசும்புல் தலைகாண் பரிது"* *(குறள். 16)*

என்ற குறளில், விண்ணிலிருந்து மழை பெய்யாவிட்டால் மண்ணுலகில் பயிர்கள் விளையாது வறட்சி ஏற்பட்டு பசி போன்றவற்றால் பேரிடர் ஏற்படும் என்பதைக் குறிப்பால் உணர்த்தி அத்தகைய வறட்சியான பகுதியில் வான் மழையால் பயிர் விளைந்தது என்று குறிப்பிடப்பட்டுள்ளது. வன்புலமானது வான் மழையினை நோக்கி பயிர் செய்யக்கூடிய நிலம். இதிலிருந்து மழையின் உன்னதம் உணர்த்தப்படுகிறது. ஏனெனில் வன்புலத்தில் வாழும் மக்களுக்கு மழையே ஆதாரமாக இருப்பதால் அவர்கள் மழையைக் கடவுளாக வணங்கினர். மேற்கூறிய பாடல்களின் வாயிலாக மழையின் இன்றியமையாமையும் மழையினால் நிலவளம் பெற்று உயிர்கள் உயிர்பெற்றதையும் இயற்கை தன்னுள் நிகழ்த்தும் மேலாண்மை என்பதன் வழி அறியமுடிகின்றது.

### உணவு மேலாண்மை

### வளங்களைப் பகிர்தல் (பண்டமாற்று முறை)

சங்ககாலத்தில் நிலப்பாகுபாடு என்பது வளத்தின் அடிப்படையிலேயே பகுக்கப்பட்டது. நிலத்தில் கிடைக்கப்பெறும் இயற்கைப் பொருட்கள் முதன்மையாக்கப்பட்டது. ஆற்றுவளம் மிக்க மருதநிலத்தில் வளங்கள் மிகுந்து காணப்பட்டன. குறிஞ்சி, முல்லை நிலத்தில் வாழ்வியலுக்கே போதுமான உணவுத் தேவை முழுமையடையாத நிலை காணப்பட்டது. இதனால் ஒரு நிலப்பகுதியில் உள்ள மக்கள் செழிப்புடனும், மற்றையப் பகுதி மக்கள் வறட்சி, பசி போன்றவற்றால் ஏழ்மைநிலையும் அடைய வேண்டிய சூழல் நிலவியது. தனிமனிதன் மட்டுமல்லாது ஓர் இனக்குழுவே உணவுத்தேவைக் கருதி அழியும் காரணத்தினால் இதனைப் பேரழிவாகக் கொள்ளும் நிலையில், இந்நிலைப் போக்கும் வண்ணம் எல்லோரும் எல்லா வளங்களையும் பெற்று வாழத் தங்கள் நாட்டிலுள்ள வளங்களைப் பண்டமாற்று முறையில் பகிர்ந்து கொண்டு வாழத்தலைப்பட்டனர். வளங்களைப் பரிமாறுவதன் காரணத்தை,

***"விளைவதை வினையெவன் மேன்புல வன்புலக்***
***களமர் உழவர் கடிமறுகு பிறசார்"*** ***(பரி.தி.1: 26-27)***

என்ற அடிகளுக்கு "விளையும் பொருள்களை விளைவித்துத் தரும் உழவர்கள் மருதமும் நெய்தலுமாகிய மென்புலத்திலும், குறிஞ்சி முல்லையுமாகிய வன்புலத்திலும் தொழில் செய்தனர். 'மருதமும், நெய்தலுமாகிய மென்புலத்தினும், குறிஞ்சியும் முல்லையுமாகிய வன்புலத்தினும் தொழில் செய்வோராகிய களமர் தெருக்களும் உழுவித்து உண்போராகிய வேளாளர்கள் இருந்து வாழும் காவலையுடைய தெருக்களும் உள்ளன"[24] என்று உரை விளக்கம் அளித்து, "இதில் 'களமர்' என்பதற்கு, 'களமர் - உழுதுண்ணும் வேளாளர், உழவர் என்பது உழுவித்துண்ணும் வேளாளர் என்க. களமர் என்பதற்கு 'மருத நிலமக்கள்' 'உழவர்க் கீழ்க்குடிகள்' என்பர் அடியார்க்கு நல்லார்" என்று பொ. வே. சோமசுந்தரனார் விளக்கமளிக்கிறார்.

குறிஞ்சியும், முல்லையும் வன்புலமான வளங்கள் குறைந்த நீர் குறைவான வறண்ட வானம் பார்த்த பகுதியாகவும், மருதமும், நெய்தலும் ஆறுகளின் மூலம் வளம் பெற்று மக்கள் மகிழ்வுடன் வாழும் செழிப்பான வேளாண் செய்வதற்கு ஏதுவான மென்புலமாகவும் இருந்துள்ளது என்பதைப் பதிவு செய்துள்ளார் புலவர். இதன் மூலம் நிலங்கள் இயற்கையாகவே வெவ்வேறு வளங்களைப் பெற்றிருப்பதால் வளம் நிறைந்த நிலங்களில் கிடைக்கும் பொருட்களைத் தங்களின் வாழ்வாதாரத்திற்காக வளம் குறைந்த பகுதிகளில் வாழும் மக்கள் பெற்று தங்கள் வாழ்வினை நடத்தியிருக்கக்கூடும்.

"பண்டமாற்றுக்களில் பரிமாறிக்கொள்ளப்பட்டவை பெரிதும் உணவோடு தொடர்புடையவை. யானைக் கொம்பு கானக்குறவர், வேடர் ஆகியோரால் அரியல் பெண்டிர் வீடுகளில் விற்ற நறவுக்கு விலையாய்த் தரப்பட்டது. பாணன் வரால் மீனைத் தூண்டிலில் பிடித்துக் கள்ளுக்கு விலையாகத் தந்தான். வேடர்கள் இரவில் கைப்பற்றிய பசுக்கூட்டங்களை நறவுக்கு விலையாகத் தந்து வாங்கினார்கள். இத்தகைய பண்டமாற்றுக்களால் அரசனுக்கு வருவாய் அளவில் செல்வம் ஈட்டுகின்ற இலாபகரமான தொழிலாக மேற்படி நிலங்களில் நடைபெறவில்லை. அங்கே தொன்மை வாய்ந்த இனக்குழுப் பொருளாதார – கலாச்சார நடவடிக்கைகள் மேலோங்கியிருந்தன. ஓரிடத்தில் கிடைத்த – விளையத்தக்கவற்றைக் கொண்டு, கிடைக்காத – விளையவைக்க முடியாத உணவுப் பொருட்களை (நெல்) அவை கிடைக்கும் இடம் சென்று மாற்றி வருவதில் இலாப – நட்டக் கணக்கு இருப்பதாகத் தெரியவில்லை"[26] என்ற கூற்றின் மூலம் உணவுப் பறிமாற்றம் என்பது வளத்தின் அடிப்படையில் தேவையை நிறைவு செய்வதற்காக நிகழ்த்தப்பட்டதை மெய்ப்பிக்கின்றது. உணவுப் பரிமாற்றத்தினை,

***“கான்னுறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன்***
***மான்றசை சொரிந்த வட்டியும் ஆய்மகள்***
***தயிர்கொடு வந்த தசும்பும் நிறைய***
***ஏரின் வாழ்நர் பேரில் லரிவையர்***
***குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெல்***
***முகந்தனர் கொடுப்ப உகந்தனர் பெயரும்”*** *(புறம்.33: 1-6)*

என்ற பாடலில், வேட்டையாடும் தொழிலையுடைய வேட்டுவன் காட்டில் வாழ்பவன் அவன் மான் தசையைக் கொண்ட கடகப் பெட்டியையும் ஆய்மகள் தயிர் கொண்டு வந்து தந்த பானையையும் உடையவன். அவனுக்கு ஏரினால் உழுது வாழும் உழவர்தம் பெரிய வீட்டிலுள்ள மகளிர், களத்திற்குக் கீழாக விளைந்த களத்திலிருந்து பெற்ற வெண்ணெல்லை முகந்து தருவர். அதனைப் பெற்று மகிழ்ந்து தன்னிருப்பிடத்திற்கு மீள்வான் என்று இருவேறு திணைவாழ் மக்கள் தங்களது உணவிற்காக வளங்களைப் பரிமாறும் தன்மையை இப்பாடல் பிரதிபலித்துள்ளது. இவ்வாறு வளங்களைப் பகிர்ந்து தங்களுக்குத் தேவைப்படும் பொருள்களைப் பெற்று இல்லாமை, பசி, வறட்சி போன்றவற்றிலிருந்து தம்மை மேலாண்மை செய்து நிறைவான வாழ்க்கை வாழ்ந்ததோடு தம் இனக்குழுவையும் வறுமைப் பஞ்சம் எனும் பிணியிலிருந்து காத்து மேலாண்மை செய்துள்ளனர் என்பது தெளிவாகின்றது.

சங்க காலத்தில் கடல் கடந்து வாணிபம் நடைபெற்றதை விளக்கும் வண்ணம்,

***“…………………………………….. கூம்பொடு***
***மீப்பாய் களையாது மிசைப்பரந் தோண்டாது***
***புகாஅர்ப் புகுந்த பெருங்கலற் தகாஅர்***
***இடைப்புலப் பெருவழிச் சொரியும்***
***கடற்ப.:. றரத்த நாடு கிழவோயே”*** *(புறம்.30: 11-15)*

இப்பாடல் பேரிடர் தீர்க்கும் ஒருவகையான மேலாண்மையாகும். சங்க காலத்தில் ஐவகையான நிலங்கள் இருந்தன. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று அந்நிலத்திற்கேற்ப வளங்கள் அமைந்திருந்தன. மேலும் கடல் கடந்த நாடுகளிலும் பல்வேறு வகையான வளங்கள் நில அமைவிற்கு ஏற்ப இருந்தது. ஓரிடத்தில் உள்ள வளத்தை மற்றொரு இடத்தில் உள்ளவர்களுக்குக் கொடுத்து அதற்கொப்ப பொருளை வாங்கிச் செல்லும் பண்டமாற்று முறையானது வளம் இல்லா பல்வேறு இடர்களால் அழியும் மக்களைப் பாதுகாத்து அவர்களின் தேவையைப் பூர்த்தி செய்யும் விதமாக அமைந்தது. கீழ்க்காணும் பாடலடிகள்,

*"நீரினின்று நிலத்தேற்றவும்*
*நிலத்தினின்று நீர்ப்பரப்பவும்*
*அளந்தறியாப் பலபண்டம்*
*வரம்பறியாமை வந்தீண்டி"* *(பட். 129-132)*

பொருள் வளத்தைக் கடல் கடந்து பரிமாறும் வாணிப முறை குறித்துப் பேசுகின்றது. பேரிடர் ஏற்பட்ட காலங்களிலும், ஏற்படும் முன்பும் வளங்களைப் பரிமாற்றம் செய்து வறுமை, பசி, பஞ்சம், இல்லாமை போன்றவை நிகழா வண்ணம் மேலாண்மை செய்துள்ளனர் என்பது புலப்படுகிறது. வாணிகத்தால் நல்லதொரு நட்புறவு ஏற்படுவதோடு, படை கொண்டு நாட்டைக் கைப்பற்றி வளங்களை அழிக்கும் தன்மையும் அழிந்துபடுகிறது.

பண்டைய நிலப்பிரிவில், அந்நிலத்தின் வளத்தினைத் தன் தேவைக்கேற்ப கொடுத்தும், வாங்கியும் வளங்களைப் பரிமாறும் பண்டமாற்று முறையைக் காணமுடிகிறது. குறிஞ்சி, முல்லை, நெய்தல் போன்ற குறைந்த வளங்களைப் பெற்ற நிலப்பகுதியில் வாழும் மக்கள் தேன், வேட்டைப்பொருள்கள், நெய், தயிர், மீன், உப்பு போன்றவற்றைக் கொடுத்து மருதநில மக்களிடம் நெல் முதலிய உணவிற்குத் தேவையானப் பொருட்களைப் பரிமாற்றம் செய்தனர். உற்பத்தியான உணவுப் பற்றாக் குறைவினால் ஏற்படும் பசிப்பிணியைப் போக்க தங்களுக்கு அதிகமாக கிடைக்கூடிய பொருட்களைக் கொடுத்து அதற்குப் பதிலாக அவர்களிடம் அதிகமுள்ள பொருட்களைப் பெற்றுள்ளனர்.

பெரிய மலைகள் பொருந்திய நல்ல நாடுகட்கு உப்பங்கழிகளில் உள்ள சிறிய வெண்மையான உப்பினைக் கொண்டு சென்று கூவி உப்பினை விற்றச் செய்தியை,

*"கழியே சிறுவெள் ளுப்பின் கொள்ளை சாற்றி*
*பெருங்க னன்னாட் டுமனொலிக் குந்து"* *(புறம்.386: 16-17)*

எனும் பாடலடிகளால் அறியலாம். மேலும்,

*"வெள்ளை யுப்பின் கொள்ளை சாற்றி*
*நெல்லொடு வந்த வல்வாய்ப் ப.்றி*
*பணைநிலைப் புரவியி னணைமுதற் பிணிக்குங்*
*கழிசூழ் படப்பை"* *(பட். 29-32)*

எனும் பாடலடிகள் உப்பிற்கு விலை நிர்ணயம் செய்து விற்றதைக் குறிப்பிடுகிறது. உமணர்கள் வெண்ணிறமுடைய உப்பின் விலையைக் கூறி விற்றுத் தாங்கள் பெற்ற நெல்லை ஏற்றிக் கொண்டு வந்த வலிமை வாய்ந்த படகுகளைக் கட்டுத்தறியில் பிணிப்பது போல உப்பங்கழியைச் சார்ந்த தறிகளில் கட்டியிருப்பர் என்று பொருளுக்குப் பொருள் என்று தொடங்கிய பண்டமாற்று முறையானது பொருளுக்கு விலை வைத்து அதன் மூலம் பொருள் பெறும் வணிகத்தின் தோற்றுவாயாக அமைந்ததை அறியமுடிகிறது.

குறிஞ்சி நிலத்துக் கருப்பொருளான தேனையும் கிழங்கையும் கொண்டு போய் நெய்தல் நிலத்தில் கொடுத்து (குறிஞ்சிநில மக்கள்) அதற்கு ஈடாக நெய்தல் நிலத்து மீன் நெய்யோடு நறவாகிய கள்ளையும் பெற்று வருவா். மருத நிலத்துக் கருப்பொருள்களான தீஞ்சுவை கரும்போடு அவலையும் விற்றோா், முல்லை நிலத்துக் கருப்பொருள்களான மானின் தசையோடு, மதுவைப் பண்டமாற்றாகப் பெற்று வந்தனா் என்பதை,

***“தேனெய்யொடு கிழங்குமாறியோர்***
***மீனெய்யொடு நறவுமறுகவும்***
***தீங்கரும்போ டவல்வகுத்தோர்***
***மான்கறையொடு மதுமறுகவும்”*** ***(பொரு.214-217)***

இப்பாடலடிகள் விளக்குகின்றன. நில அமைப்பின் அடிப்படையில் நிலம் பகுக்கப்பட்டதோடு, பகுக்கப்பட்ட நிலத்தின் மண், நீா், வளம், தட்பவெப்பம் ஆகியவற்றின் அடிப்படையில் இயற்கையும், அதன் மூலம் கிடைக்கும் விளைப்பொருள்களும் அமைந்திருந்தது. ஒரு நிலத்தில் விளையும் பொருட்கள் மற்றொரு நிலத்தில் காணப்படவில்லை. குறிஞ்சி, மற்றும் முல்லை நிலத்தின் வாழ்வாதாரமாக விளங்கும் நெற்பயிா்கள் மருதநிலத்தில் விளைந்ததால் அவா்கள் பண்டமாற்றம் செய்து மலை நிலத்தில் கிடைத்தப் பொருட்களைக் கொடுத்து தேவையானப் பொருட்களைப் பெற்றனா்.

“சந்தை ஒரு குறிப்பிட்ட வரலாற்றுச் சூழலில்தான் எந்தவொரு சமூகத்திலும் ஆக்கம் பெருகிறது. உபரி உற்பத்தியும், நுகா்வின் சேவையும், இவைகளையொட்டிய சமூக வேலைப்பிரிவினையும் அரசு முறையும் ஏற்படும் காலத்தில்தான் வா்த்தகம் தனிப்பிரிவாகத் தோன்றுகிறது. எந்தத் தொடா்பும் இல்லாமல் விலக்கி வைக்கப்பட்ட இனக்குழுவாழ்வு நிலவிய காலத்தில் ‘பரிவா்த்தனை’ விபத்துபோல எதிா்பாராமல்தான் நடைபெற்றது. பண்டங்களை மாற்றிக்கொள்வதில் அவற்றின் மதிப்பு குறித்த பிரச்சனை முன்வைக்கப்படவில்லை”[27] என்ற விளக்கத்தின் மூலம், பண்டமாற்று முறை என்பது வணிகத்தின் அடிப்படை என்று அறிஞா்கள் கருத்துகள் தெரிவித்தாலும், பண்ட மாற்று முறையின் அடிப்படை ஒரு நிலத்தில் உள்ள வளத்தை, மற்றொரு நிலத்திற்குப் பகிா்ந்தளித்தலே என்பது நிதா்சனமாகின்றது. தட்பவெப்ப நிலை, இயற்கையின் அமைப்பு, சரிவிகிதமாக பகிா்ந்து அனைவரும் அனைத்து வளங்களும் பெற பண்டமாற்று முறை வாய்ப்பாய் அமைந்திருக்கக்கூடும்.

பண்டப்பரிமாற்றம் வளங்களைப் பகிா்தல் எனும் அடிப்படையில் நிகழ்ந்திருப்பினும் மக்களின் தொடா்பிற்கு வாய்ப்பளித்தது. வளங்களான பண்டங்கள் பரிமாற்றம் பின்னாளில் மாஸ், லெவிஸ்ட்ராஸ் போன்றவா்களால் பரிமாற்றக்கோட்பாட்டையே உருவெடுக்கச் செய்தது. தொடக்கநிலையில் உணவுத் தேவைக்கானப் பறிமாற்றம் என்பது பெண் கொடுத்து பெண்களை மணக்கும் புறமணப்பரிமாற்றத்திற்கு வழிவகுத்தது. இதன் காரணமாக

இனக்குழுக்களுக்கிடையே நிலவிய மாறுபாட்டுத்தன்மை நெருக்கமான உறவிற்குப் பாலமானது. புறமண விதியை லெவிஸ்ட்ராஸ் பரிமாற்றத்தின் அடிப்படையிலேயே கட்டமைத்துள்ளார்.

"பரிமாற்றத்தின் விளைவான புறமணவிதி என்பது சமூக விழுமியத்தை வெளிப்படுத்துகிறது. இது மனிதர்களை ஒன்றிணைக்க உதவுவதோடு இயற்கையான உறவுத் தொடர்புகளையும் மேல் நிர்ணயம் செய்கிறது. அத்துடன் செயற்கையான தொடர்புகளையும் உருவாக்கி அவற்றை மணத் தொடர்பு விதியால் கட்டுப்படுத்துகின்றது"[28] என்ற லெவிஸ்ட்ராஸின் கருத்தை வெளிப்படுத்தும் ஆ.செல்லப்பெருமாளின் மேற்கோள் கவனிக்கத்தக்கது. மேற்கூறிய விளக்கங்களின் மூலம் வளங்களைப் பகிரும் பண்டப்பரிமாற்றம், பிற்காலத்தில் வணிக உறவினையும், புறமண உறவுமுறையினையும் ஏற்படுத்தி மனிதர்களாலும் இயற்கையாலும் பேரழிவுகள் ஏற்படா வண்ணம் முறைசார் மேலாண்மைக்குத் தொடக்க நிலையாக அமைந்துள்ளதை அனுமானிக்க முடிகின்றது.

## இயற்கையைச் சார்ந்த மேலாண்மை

### வானியல் - அறிவு மேலாண்மை

சங்ககாலத்தில் அறிவியல் வளர்ச்சி என்பது முறைப்படுத்தப்படாத காலக்கட்டமாகும். இயற்கை சார்ந்த அறிவினால் பஞ்சபூதங்களில் ஏற்படும் மாறுபாடுகளைக் கண்டறிந்தனர். இயற்கைச் செயல்பாடுகளுக்கு ஏற்ப வாழ்க்கைக் கூறுகளைக் கட்டமைத்தனர். பின்னாளில் எண்கணிதம் என்ற அறிவியல் சார்ந்த முறைகளை முன்வைத்து 'வான' இயலை முறைப்படுத்தினர். இவ்வாறு இயற்கைப் பொருட்களின் தன்மையை ஆய்ந்து அறியும் அறிவியல் சார்ந்த அறிவு வளர்ச்சியைச் சங்கச் சான்றோர்கள் பெற்றிருந்தனர் என்பதை,

***"இருமுந்நீர்க் குட்டமும்***
***வியன்ஞாலத்து தகலமும்***
***வளிவழங்கு திசையும்***
***வறிதுநிலைஇய காயமும் என்றாங்கு***
***அவை அளந்து அறியினும்"*** *(புறம்.20: 1-5)*

எனும் பாடலடிகளில் கடலின் ஆழமும், விரிந்த உலகத்தின் பரப்பும், காற்று வீசும் திசைகளும் எந்தப் பற்று கோடுமின்றி நிலைப்பெற்ற ஆகாயமும் என்றும் இவற்றை அளந்து அறிந்து ஆய்ந்து கூறினாலும் கூறலாம் என்ற குறிப்பு யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையைக் குறுங்கோழியார் பாடிய பாடலில் காணமுடிகிறது. இங்கு கடல், நிலம்,

காற்று, ஆகாயம் என்று இவற்றின் தன்மையையும் நிலைப்பாட்டையும் விளக்கியுள்ளார். இவற்றிலிருந்து இயற்கைப் பொருட்கள் பற்றிய அறிவினைச் சங்கச் சான்றோர் பெற்றிருத்தல் வேண்டும் என்பது புலப்படுகிறது.

சங்க காலத்தில் வானியல் சார்ந்த அறிவினைப் பெற்றிருந்ததால் இயற்கையில் நிகழும் மாற்றங்களை அறிந்து அதிலிருந்து தம்மைப் பாதுகாத்துக் கொண்டனர் என்பதை,

*"செஞ்ஞாயிற்றுச் செலவுமஞ் ஞாயிற்றுப்*
*பரிப்பும் பரிப்புச் சூழ்ந்த மண்டிலமும்*
*வளிதிரிதரு திசையும்*
*வறிது நிலைஇய காயமு மென்றிவை*
*சென்றளந்து தறிந்தோர்........."* (புறம்.30: 1-6)

இப்பாடலானது சங்கச் சான்றோரின் வானியல் சார்ந்த அறிவியல் அறிவுடைமையை விளக்குகின்றது. இவ்வடிகளில் ஞாயிற்றின் பாதை அதன் இயக்கம், கோள்களின் சுற்றுவட்டப் பாதையையும் கிரகணத் திசைகளையும் எந்தப்பற்றுதல் இல்லாது தனித்து நிற்கும் வானமும் ஆகிய இவற்றைச் சென்று அளந்தறிந்தனர் என்று பதிவு செய்யப்பட்டுள்ளது. இப்பாடல் சங்கச் சான்றோர் வானியல் அறிவுக்குச் சான்றாக உள்ளது. வானில் கோள்களில் ஏற்படும் மாற்றம், கிரகணம் போன்றவற்றால் ஏற்படும் பேரிழப்புகளைத் தொலைநோக்குச் சிந்தனையினால் சங்கச் சான்றோர் வானியல் அறிவு மூலம் பேரிடர் ஏற்படும் முன்பே மேலாண்மைச் செய்திருக்கலாம் என்பது தெளிவாகின்றது.

## வடகிழக்குப் பருவமழை

தமிழ்நாட்டிற்கு மழைப்பொழிவைத் தரும் வடகிழக்குப் பருவமழைப் பற்றிய குறிப்புகளை ஆலந்துார் கிழார் என்னும் புலவர் தம் பாடலில்,

*"இமயத்து ஈண்டி இன்குரல் பயிற்றி*
*கொண்டல் மாமழை பொழிந்த*
*நுண்ப∴ துளி.............."* (புறம்.34: 21-23)

என்று, இமய மலையில் திரண்டு இனிய ஓசையைச் செய்து கிழக்குக் காற்றால் உந்தப்பட்டு வரும் பெரிய மேகம் பொழிந்த நுண்ணிய பல நீர்த் திவலைகளை உடையது மழைப்பொழிவு என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதன்மூலம் சங்கச்சான்றோர் இயற்கையில் அமைந்த பருவ காலங்களை நன்கு அறிந்து செயல்பட்டனர் என்பதை அறியலாம். தமிழ் கூறும் நல்லுலகமாகிய தமிழகத்தின் இயற்கை வளமைக்கு முதன்மைக் காரணம் வடகிழக்குப் பருவ மழையே. தென்மேற்குப் பருவமழை கேரளம் முதலான மேலைக்கடலில் உருவாகும் காற்றழுத்தத்தால் தமிழகப் பகுதிகள் குறைந்தஅளவு மழையினையேப் பெறுகின்றது.

“தமிழ்நாட்டிற்குக் கிழக்குத் திசையிலிருந்து வீசும்காற்று கொண்டல். கொண்டல் என்றால் மேகம் என்றும் பொருளுண்டு. தமிழ்நாட்டிற்கு மிகுதியாக மழை தருவது கிழக்குத் திசையிலிருந்து வீசும் காற்றே (வடகிழக்குப் பருவக்காற்று). மழை வளம் தரும் திசையைக் குணதிசை என்று தமிழர்கள் அழைத்தனர்”[29] என்ற, பழ. கோமதிநாயகத்தின் விளக்கத்தின் மூலமும் வடகிழக்குப் பருவமழையின் தன்மையை அறிமுடிகின்றது. மேலும்,

***“புறவுக் கருவன்ன புன்புல வரகின்***
***பால்பெய் புன்கந் தேனொடு மயக்கி”*** ***(புறம்.34: 9-10)***

எனும் அடிகளில் புறாவின் கருமுட்டை போன்ற புன்மையான நிலத்தில் விளைந்த வரகரிசியைப் பாலிலிட்டுச் சமைத்து உணவைத் தேனுடன் கலந்துண்டனர் என்று கூறப்பட்டுள்ளது. புன்மை நிலம் என்பது ‘வறண்டநிலம்’, இது மழையினை எதிர்பார்த்துப் பயிர் செய்யும் நிலம். இத்தகைய நிலத்தில் வரகரிசி விளைந்ததைக் கூறுகையில் பருவமழையின் தாக்கம் அதிகம் உள்ள காலத்தில் பயிர் செய்து வரகினை அறுவடைச் செய்திருக்கக்கூடும் என்பதை, அறியமுடிகின்றது. மேற்கூறியதன் மூலம் சங்க கால மக்கள் பருவ காலங்களின் தன்மை உணர்ந்து பருவமழை பெரும் காலத்தில் பயிர் விளைவித்து, வறட்சியான காலத்தில் ஏற்படும் பசி, பட்டினி போன்ற பேரிடர்களைத் தீர்க்கும் மேலாண்மைவாதிகளாகத் திகழ்ந்துள்ளனர் என்பதை உணரமுடிகிறது.

## கோள்களின் இயக்கம் பற்றி அறிந்திருத்தல்

பண்டைத் தமிழ் மக்கள் கோள்களின் இயக்கத்தினைக் குறித்தும், அது ஏற்படுத்தும் பாதிப்புகள் பற்றியும் அறிந்திருந்த செய்தியை,

***“குணதிசை நின்று குடமுதற் செலினும்***
***குடதிசை நின்று குணமுதற் செலினும்***
***வடதிசை நின்று தென்வயிற் செலினும்***
***தென்றிசை நின்று குறுகாது நீடினும்***
***யாண்டு நிற்க வெள்ளியாம்***
***வேண்டிய துணர்ந்தோன் றாள்வா ழியவே”*** ***(புறம்.386: 20-25)***

எனும் பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன. சுக்கிரன் கீழ்த்திசையினின்றும், மேற்றிசைக்குச் சென்றாலும், மேற்றிசையினின்றும், கீழ்த்திசைக்குச் சென்றாலும், வடதிசையினின்றும் தென்திசைக்குச் சென்றாலும், தென்றிசையிற் சின்னாளன்றி பன்னாள் நிற்குமாயினும், வெள்ளியாகிய விண்மீன் எங்கு நிற்பினும் நிற்க. யாம் வேண்டுவதைக் குறிப்பால் உணர்ந்துகொண்டு வழங்குவோன் என்று மன்னனின் கொடைச் சிறப்பினை விளக்கும் நிலையில்

கோள்களின் இயக்கம் பற்றியும் அது நிலைமாறும் பொழுது ஏற்படும் பாதிப்புகளையும் மறைமுகமாக வெளிப்படுத்தப்பட்டுள்ளது. வெள்ளி நிலை திரியும் போது மன்னன் அதனை மேலாண்மை செய்த திறத்தை,

*"ஒருவனை யுடையேன் மன்னே*
*அறானெவன் பரிகோ வெள்ளியது நிலையே"* *(புறம்.383: 24-25)*

எனும் அடிகளில் எம் தலைவன் புரக்கடனாகிய தன்னறத்தினின்று நீங்கான், வெள்ளியாகிய மீன் நிலை குறித்து இவ்வுலகு என்னாகுமோ என்று வருந்துவேன் அல்லேன் என்று வெள்ளிமீன் தன் இயல்பு நிலையிலிருந்து மாற்றம் கொள்ளும் பொழுது பல்வேறு வகையில் பேரிடர்கள் ஏற்படும் என்பது பற்றி வானியல் சார்ந்த அறிவு பெற்றுச் சங்கத் தமிழர்கள் திகழ்ந்துள்ளனர் என்பதும் இத்தகையப் பேரிடர் காலங்களில் மன்னர்கள் மக்களின் தேவையைக் குறிப்பால் அறிந்து பேரழிவிலிருந்து காத்து மேலாண்மை செய்துள்ளனர் என்பதும் தெளிவாகின்றது.

## காலம் குறித்த அறிவு

காலத்தைச் சங்ககால மக்கள் பெரிதும் போற்றினர். போர்புரிதலுக்கும் பொருள்தேடலுக்கும் இல்லுறை தெய்வங்களை வழிபாடு செய்தலுக்கும் காலத்தை முதன்மைப்படுத்தினர். காலத்தைக் கணிப்பதற்கு 'காலக்கணக்கர்' சங்க மன்னர்களின் அரசவையில் நியமிக்கப்பட்டனர். போர்புரிதலுக்கு முன் காலத்தை அறிந்தே போர்புரிந்தனர். காலத்தில், தம் கடமைகளை ஆற்றுபவர்களே வாழ்க்கையில் வெற்றியையும், புகழையும் அடைய முடியும் என்பதனை, அரசர்கள் நன்கு அறிந்திருந்ததால் தன்னுடைய அறிவார்ந்த அமைச்சர்களையும் ஆலோசகர்களையும் வைத்துக் கொண்டு அவர்தம் அறிவை தம் அரசியல் வாழ்விற்குப் பயன்படுத்தி வெற்றிகரமாக ஆட்சி செய்தனர்.

*"பொழுதளந் தறியும் பொய்யா மாக்கள்*
*தொழுது காண்கையர் தோன்ற வாழ்த்தி*
*எறிநீர் வையகம் வெலீஇய செல்வோய்நின்*
*குறுநீர்க் கன்னல் இனைத்தென் றிசைப்ப"* *(முல். 55-58)*

எனும் பாடலில், நாழிகையை அளந்து இத்துணை என்பது அறியும் பொய்த்தளில்லாத நாழிகைக் கணக்கர் மன்னனைக் கையால் தொழுதபடியே கண்டு வாழ்த்திக் 'கடல் சூழ்ந்த உலகத்தே பகைவரை வெல்லச் செல்கின்றவனே உன்னுடைய நாழிகை வட்டிலிற் சென்ற நாழிகை இத்துணை காண்' என்று அறிவிக்கின்றனர். நாழிகைக் கணக்கிடும் நாழிகைக் கணக்கர் நாழிகை மற்றும் வானியல் சார்ந்த செய்திகளைப் போர் முதலிய பேரழிவுகள் ஏற்படும் முன்னமே அழிவிலிருந்து காக்க மன்னர்களுக்கு ஆலோசனை வழங்கி மேலாண்மை செய்துள்ளனர்.

மேற்கூறியவற்றிலிருந்து சங்ககால மக்கள் நாள், கோள்களைப் பெரிதும் போற்றினர். கோள்களின் நிலையறிந்து அக்கோள்கள் நிலைதிரியும் பொழுது ஏற்படும் பேரழிவுகளை உணர்ந்து அதற்கேற்றவாறு தங்களை காத்து மேலாண்மை செய்துள்ளனர் என்பது புலப்படுகிறது.

## உயிரினங்களைப் பேரழிவுகளிலிருந்து காத்தல் மேலாண்மை

சங்ககால மக்கள் ஆநிரையைத் தங்களின் உயர்ந்த செல்வமாக மதித்துப் போற்றினர். அதனால்தான் ஒரு நாட்டு மன்னன் மற்றொரு நாட்டின்மீது போர்த்தொடுக்க எண்ணிய போது ஆநிரைகளைக் கவர்தலைச் செய்தான். அத்தகைய ஆநிரைகள் கோடைக்காலத்தில் நீர் வேட்கையில் நாவறண்டு உண்ண உணவின்றித் தவிக்கும்போது அதற்கு, மரத்தில் உள்ள கிளைகளை, உடைத்துத் தலைகளை உண்ணக் கொடுத்துள்ளனர். இதை,

> ***"அருவி மாறி யஞ்சுவரக் கடுகிப்***
> ***பெருவறங் கூர்ந்த வேனிற் காலைப்***
> ***பசித்த வாயத்துப் பயனிரை தருமார்***
> ***பூவாட் கோவலர் பூவுட னுதிரக்***
> ***கொய்துகட் டழித்த வேங்கையின்"*** *(புறம்.224: 12-16)*

எனும் அடிகளில் புவியில் பருவகாலம் என்பது மாறிவரும் தன்மையுடையது. அவ்வாறு அருவி நீரானது அற்றுப்போய் பலரும் அஞ்சுகின்ற பெரிய வறுமை சூழ்ந்த கோடைக்காலத்தில் பசித்த ஆநிரைகளின் பசி தீரும்பொருட்டுக் கூர்மை மிக்க வாளால் கோவலர்கள் வேங்கை மரத்தின் பூக்கள் உதிருமாறு தழைச் செறிய அமைந்த கிளைகளை வெட்டிக் கழிப்பர். இதில் 'பெருவறங் கூர்ந்த' பெரிய வறுமை சூழ்ந்த காலத்தைக் குறித்து, அத்தகைய காலத்தில் ஆநிரைகளை ஆயர்கள் காக்கும் பொருட்டு வேங்கை மரத்தின் கிளைகளை வெட்டிக் கொடுத்தனர் என்பதன் மூலம் உயிரினங்களைத் தங்கள் உயிர்போல் பேணி வளர்த்தனர். மேலும், அதற்கு வழங்கப்படும் உணவான தாவர இலைகளை, வெட்டினால் இயற்கை அழிவு ஏற்படும் என்பதை உணர்ந்து அதன் கிளைகளை வெட்டிக் கொடுத்தனர் என்பதன் மூலம் இயற்கையின் கொடையாகிய மரங்களையும் அவர்கள் பேணி வளர்த்தமை நன்கு தெளிவாகின்றது.

## மக்கள் புலம் பெயர்தல்

மனிதர்கள் தங்கள் வாழ்வாதாரத்தை மேம்படுத்துவதற்காகவும் வாழ்வின் இயல்பை நிலைப்படுத்துவதற்காகவும் புலம் பெயர்வு நிகழ்கின்றது. சங்ககாலம் தொட்டு இன்று வரை புலம் பெயர்வினை மனிதன் மட்டுமல்லாது பிற உயிரினங்களும் மேற்கொள்கின்றன. இயற்கையாலும் மனிதராலும் ஏற்படும் பாதிப்பிலிருந்து தம்மையும் தம்மைச் சார்ந்தவர்களையும் பாதுகாக்கும் பொருட்டு இப்புலம்பெயர்வு நிகழ்த்தப்படுகின்றது.

“புலம்பெயர்வு என்பது முக்கியமாக ஒரு ஐந்து சூழலமைவுகளில் நிகழ்கிறதெனலாம். 1. இயற்கைச் சீற்றம் 2. வறுமை, பஞ்சம் போன்ற பொருளாதார நெருக்கடிகள் 3. போர்க்காலச் சூழல் 4. பெருந்தேசிய – பேரினவாத முரண்பாடுகளும் மோதல்களும் மற்றும் அரசியல் நிலைப்பாடுகளும் 5. தம் சொந்த நாட்டில் வாழ்வதைவிட வேற்றுப் புலங்களில் நல்ல/சிறந்த வாழ்வு கிட்டும் என்ற எதிர்பார்ப்பு”[30] போன்ற நிலைகளில் புலம்பெயர்வு நிகழ்வதாக வகைப்படுத்துகின்றனர்.

இயற்கைப் பேரிடர்கள் வெள்ளம் போன்ற பாதிப்புகள் ஏற்படும் போது ஆநிரைகளைப் பாதுகாத்துப் பேரழிவுகள் ஏற்படாது மேலாண்மை செய்ததை,

***“வையகம் பணிப்ப வலனேர்பு வளைஇப்***
***பொய்யா வானம் புதுப்பெயல் பொழிந்தென***
***வார்கலி முனைஇய கொடுங்கோற் கோவல***
***ரேறுடை யினநிரை வேறுநிலம் பரப்பிப்***
***புலம்பெயர் புலம்பொடு கலங்கிக் கோட”*** ***(நெடு. 1-5)***

என்ற பாடலில், பருவம் பொய்க்காமல் உரிய காலத்தில் மழையைத் தரும் மேகங்கள், தாங்கள் கிடந்த மலைப்பகுதியை வலமாகச் சூழ்ந்து மேலெழுந்தன. உலகெல்லாம் குளிரும்படி அவை, கார்காலத்தில் புதுமழையைத் தந்தன. இடையர்கள் தங்கள் பசு, ஆடு, எருமை முதலிய விலங்குகளை வருத்தும் கோலினை எப்பொழுதும் கைகளில் வைத்திருப்பர். தங்கள் மேய்ச்சல் தொழிலுக்கு இடையூறாக இருப்பதால், மழை நீரால் தோன்றும் பெரும் வெள்ளத்தை அவர்கள் வெறுத்தனர். அவ்வெள்ளத்திலிருந்து தங்கள் விலங்குகளைக் காக்க விரும்பிய அவர்கள் மேட்டு நிலப்பகுதியாகிய முல்லை நிலத்தில் அவற்றை மேய விட்டனர். தாங்கள் பழகிய நிலத்தை விட்டு வேற்று நிலங்களுக்கு வந்த தனிமைத்துயரம், அவர்களை வருத்தியது என்ற பதிவின் மூலம், மழையானது தன் இயல்பிலிருந்து அதிகமாக பெய்ததால் பெரு வெள்ளம் ஏற்பட்டது. அவ்வெள்ளத்தினால் பேரழிவு ஏற்படும் என்பதை உணர்ந்து கால்நடைகளை மேட்டு நிலங்களுக்குக் கொண்டு சென்று பாதுகாக்க தங்கள் இருப்பிடத்தை விடுத்து வேறொரு நிலத்திற்குப் புலம் பெயர்ந்துள்ளனர். பேரிடரால் தங்கள் வாழ்வாதாரத்தை இழக்கும் நிலையில், தங்கள் உயிர்களைக் காக்கும் பொருட்டும், உயர்ந்த செல்வமாகிய ஆநிரைகளையும் காக்கும் பொருட்டும் மேட்டு நிலங்களுக்குச் சென்றனர் என்பதன் மூலம் வெள்ளம் போன்ற பாதிப்பினால் பேரழிவுகள் நிகழாமல் இருக்க புலம்பெயர்வு நிகழ்ந்ததை இப்பதிவுகளின் வழி அறியமுடிகின்றது. சில நேரங்களில் நீர்வளமிகுந்த வளமான பகுதிகளே தங்களது ஆநிரைகளை மேய்க்கத் தகுந்த நிலமாகக் கருதியும் புலம்பெயர்வு நிகழ்ந்துள்ளது. இதனை,

“விவசாயிகளைப் போலவே மேய்ச்சல் இனத்தவர்களுக்கும் நீர் நிலைகள் முக்கியம். எனவே ஆற்றங்கரைகளை ஒட்டியே இவர்களின் பயணம் அமைந்தது”[31] என்பதன் மூலம் அறியலாம்.

இயற்கையாலும் அல்லாது இரு நாடுகளுக்கிடையே ஏற்படும் போரில் தோற்ற மன்னனின் நாட்டின் வளத்தை வெற்றி பெற்ற மன்னன் அழிப்பதாலும் அந்நாடானது பெரியதொரு பேரழிவிற்குட்படுகிறது. அந்நாட்டில் உள்ளோர் வளமிழந்த நிலையில் அந்நாட்டில் வசிக்க இயலாது, வேறொரு இடத்திற்குப் புலம்பெயர்ந்துள்ளனர். இந்நிகழ்வினை,

*“................. தண்பணை யெடுப்பி*
*வெண்பூக் கரும்பொடு செந்நெ னீடி*
*மாயிதழ்க் குவளையொடு நெய்தலு மயங்கிக்*
*கராவுங் கலித்த கண்ணகன் பொய்கைக்*
*கொழுங்காற் புதவமொடு செருத்தி நீடிச்*
*செறுவும் வாவியும் மயங்கி நீரற்று”* *(பட். 239-244)*

வெண்மையானப் பூக்களையுடைய கரும்புகளும் குவளையும், பெரிய இதழ்களைக் கொண்ட நெய்தலும் மயங்கி, முதலைகள் செருக்குடன் திரியும் இடமாகிய பொய்கைகளைக் கொண்டது மருதநிலமாகும். அத்தகைய நிலம் திருமாவளவன் போர் புரிந்ததால், அப்பகுதியில் உள்ள வயல்களும், பொய்கைகளும் நீரற்று வறண்டு வேறுபாடின்றிக் காணப்பட்டது. மக்கள் தங்கள் வாழ்வாதாரத்திற்காக நாட்டில் நிலவும் வறட்சியினால் பேரழிவு ஏற்படா வண்ணம் காத்தல் பொருட்டு வளம் நிறைந்த மருத நிலத்தை விட்டு குடிபெயர்ந்து வேறு புலம் சென்றனர். என்பதால், வாழ்வாதாரத்திற்காகவும், வறட்சி போன்ற பேரழிவிலிருந்து காக்கவும் புலம்பெயர்தலை சங்க மக்கள் மேற்கொண்டுள்ளனர் என்பதனை அறியமுடிகின்றது. மேலும்,

*“கொழும்பதிய குடிதேம்பச்*
*செழுங்கேளிர் நிழல்சேர”* *(மதுரை. 167-168)*

வளம் பொருந்திய ஊரில் உள்ள குடிமக்கள் பகைவரின் படையெடுப்பினால் தம் உடைமைகள் மற்றும் உணவினை இழந்து பசியால் உலர்ந்து புறநாட்டில் இருக்கும் தம்முடைய சுற்றத்தார்களைப் பாதுகாவலாக அடைந்தனர் என்று பதிவு செய்யப்பட்டுள்ளது.

“ஒரு கிராமத்தில் இருந்த மக்கள் புலம்பெயராமல் இருந்தால், அக்கிராமத்தில் விவசாயம் சார்ந்த பொருளாதார நிலை சிறப்பாக இருக்கிறது என்று அர்த்தம்.”[32] என்பதன் வாயிலாகப் பொருளாதாரநிலை என்பது புலம்பெயர்விற்குக் காரணமாவதை உணரமுடிகின்றது.

சங்ககாலத்தில் மன்னர்களின் மண்ணாசையின் காரணமாகவும், ஆளுமை வேட்கையின் காரணமாகவும் ஏற்பட்ட போரில் நாடு தம் நிலையிழந்து வாழ்வதற்குத் தகுதியற்ற இடமாக மாறியது. அந்நாட்டில் வாழும் மக்கள் தம் வாழ்க்கையை நடத்துவதற்காக வேற்று நாட்டிற்கு 'புலம்பெயர்வு' செய்தனர் என்பதனை,

*"இனந்தோ டகல வூருட னெழுந்து*
*நிலங்கண் வாட நாஞ்சில் கடிந்துநீ*
*வாழ்த லீயா வளனறு பைதிரம்*
*அன்ன வாயின"* *(பதிற்.19: 16-19)*

என்ற பதிற்றுப்பத்துப் பாடலில், நின் பகைவர் நாட்டு ஊரில் வாழும் மக்கள் அச்சத்தால் கூட்டமாய்த் திரண்டெழுந்து பாதுகாக்கப்பட்ட ஆனிரைகளாகிய பசுக்கூட்டம் தொகுதியாய் வேறுவேறு திசைகளில் பரந்தோடும். உழுவதற்குத் தேவையான ஆநிரைகளும் மக்களும் இன்மையால் உழுவாரின்றிக் கலப்பைகள் வெறுக்கப்பட்டு அதனால் நிலம் வளப்பமின்றித் தம் அழகு கெடவுமாக, நீ முன்பு போலக் குடியேறுக என்று வாழ்வாதாரத்தினால் வளப்பமற்ற பகைவர் நாடுகள் அத்தன்மையுடையனவாயின என்று பதிவுசெய்யப்பட்டுள்ளது. பகைவர் நிலத்தைக் போர் செய்வதினால் பாழ்பட்டு அந்நிலத்தில் வாழும் மனிதர்கள், உயிரினங்கள் அச்சத்தினால் தம் வாழ்வினைத் தேடி, தம் வாழ்வின் இருத்தலுக்காக வேற்றுப் புலங்களுக்குத் தம் இனங்களுடன் புலம்பெயர்ந்துள்ளனர் இதன் மூலம், மனிதர்களால் ஏற்படும் பேரழிவுகளிலிருந்து ஒரு நாட்டிலிருந்து, வேறு நாட்டிற்குப் புலம் பெயர்ந்து தங்கள் வாழ்வினை மேற்கொண்டு மேலாண்மை செய்துள்ளனர் என்பது புலப்படுகின்றது. "மனித இனம் தோன்றிய காலந்தொட்டுப் புவியின் கண்டங்களில் சகமனித இனங்களோடு தொடர்பு கொள்ளாமலும், இடம்பெயர்ந்து செல்லாமலும் எந்த ஒரு மனித இனமும் வாழ்ந்தது கிடையாது."[33] என்ற பதிவானது இதனை உறுதிசெய்கிறது.

இயற்கை மற்றும் மனிதனது அதிகார வேட்கை போன்ற காரணங்களினால் மக்கள் வாழ்வதற்கு இயலாத வண்ணம் பேரழிவுகளை ஏற்படுத்தியது. இன்றும் கூட, இலங்கைப் போன்ற நாடுகளில் ஏற்பட்ட போர்களின் மூலம் பல்வேறு மக்கள் தம் உடைமைகளையும், உறவுகளையும் இழந்து புலம்பெயர்ந்து இந்தியா போன்ற பிறநாடுகளில் உள்ள மக்களைச் சார்ந்து வாழும் அவலநிலை காணப்படுவதை இதனுடன் ஒப்புமை கூறுதல் தகும். மேலும் பாணர்கள் போன்ற விளிம்புநிலை மக்களும் பசியினால் ஏழ்மை நிலை போக்க புலம்பெயர்தலைக் மேற்கொண்டனர் என்பதன் மூலம் மேலாண்மை திறம் உணரமுடிகின்றது.

## இயற்கையும் - மனிதனும் கொண்ட உறவு (இயற்கை மேலாண்மை)

இயற்கைக்கும் மனிதனுக்கும் உள்ள உறவினைச் சங்க இலக்கியம் மிகவும் உயர்ந்ததாக வெளிப்படுத்துகின்றது. மனிதன் இயற்கையுடன் உறவினன் போல இணைந்தான். சில வேலைகளில் தம் தேவைகளுக்குத் தாவரங்களையும் விலங்கினங்களையும் அழித்திருப்பினும், இயற்கையாகிய மலைகளையும் தாவரங்களையும் விலங்கினங்களையும் வாழ்த்தவும் வழிபடவும் தவறியதில்லை.

பழந்தமிழரிடையே காடு கொன்று நாடாக்கி வாழ்வது வளர்ச்சியின் படிநிலையாகக் கருதப்பட்டது. இருப்பினும், அவர்கள் அழித்த காடுகளுக்குப் பதிலாக குளம் தொட்டு வளம் பெருக்குவதை மேன்மையான அறமாகக் கருதி இயற்கைச் சமநிலையையும் பேணிப்பாதுகாத்துள்ளனர். மரங்கள் பாதுகாக்கப்பட்டால் மாரி பொய்க்காது என்பதைப் பழந்தமிழர்கள் உணர்ந்திருந்தனர். அதனால் 'நெல்லும் உயிரே நீரும் உயிரே' என்ற கருத்துடைய பழந்தமிழர் உழவிற்காகவும், வேள்விக்காகவும் மட்டுமே மரங்கள் வெட்டப்படவேண்டும் என்பதில் உறுதியாக இருந்தனர். சந்தனம், வகுளம், அகில், வேங்கை, சுரபுன்னை போன்ற மரங்கள் மட்டுமே பயிர்த்தொழில் செய்ய அழிக்கப்பட்டுள்ளன. பரண்களுக்குக் கால்களை அமைக்க மரங்களைப் பயன்படுத்தியுள்ளனர்.

“மக்கள் மலையின் முதலாளிகள் அல்ல. புல், பூண்டு, மரம், செடி, கொடி, பறவை, காட்டுயிர்கள் போன்று பல்லுயிர்களும் மக்களும் ஓருயிர் தான்' என்ற பாரி மன்னனும் இதே தமிழ் மண்ணை ஆண்டவன்தான். நீர்நிலைகளைப் பயன்படுத்துவதிலும் காடுகளை அழிப்பதையும் தடுக்க கி.மு. 242 லேயே சட்டம் இயற்றிய அசோக மன்னனும் இந்த இடத்தில் ஞாபகத்துக்கு வருகிறார்”[34] என்பதின் மூலமாக பண்டைய காலத்தில் இயற்கையைப் போற்றிய மரபினை அறியலாம்.

நற்றிணைப் பாடலொன்று ஞாழல் மரத்தின் நுனியைப் பறித்து சிதைத்த தலைவி பற்றிக் கூறுமிடத்து 'தலைவனின் பிரிவும் துயரின் காரணத்தினால் மனம் பேதலித்து, தன்னையறியாமல் அச்செயலைச் செய்துவிட்டாள் எனக்கூறுவதாக உள்ளது. மற்றொரு தலைவி தலைவனின் பிரிவைப் பற்றிக் கேட்டளவில் தனக்குள் ஏற்பட்ட மிகுந்த துயரைச் சொற்களில் வெளிப்படுத்தாமல் ஞாழல் மரத்தின் பூக்களை உதிர்த்து சினத்தை வெளிப்படுத்தியதை,

***“அறிவுஅஞர் உறுவி ஆய்மட நிலையே”*** ***(நற்.106: 9)***

என்ற அடியில், சினத்தினால் அறிவு மயங்கிய நிலையில் அவ்வாறு செய்துவிட்டாள் என பூவைக்கூடத் தேவையின்றி பறிப்பது மடமை எனக் கூறுகிறது. தலைவன் தன்னை அணைக்க வரும்போது தலைவியொருத்தி, தாம் நின்றிருந்த புன்னை மரத்தினைக்காட்டி அது தனக்கு தங்கை முறையெனக் கூறியதை,

*"அன்னை கூறினள் புன்னையது நலனே"* *(நற்.172: 5)*

என்ற அடிகள் விளக்குகின்றது.

சுயநலத்திற்காகப் பிற மரங்களை வெட்டி அவ்விடத்தில் பயிர்த்தொழில் செய்பவர்களின் வீடுகளிலிருந்து பெண் எடுக்கவும் தயங்கியுள்ளனர். சுயநலத்திற்காக மரங்களை வெட்டி அவ்விடத்தில் பயிர்த்தொழில் செய்பவர்கள் பிறர்படும் துன்பத்திற்கு வருந்தமாட்டார்கள். அவர்கள் வீட்டில் பிறக்கும் பெண்பிள்ளைகளும், பிறர்படும் துன்பத்திற்கு வருந்தமாட்டார்கள் என்று ஒரு தலைவன் தோழியிடம் கூறுவதைச் சங்க இலக்கியத்திற்குப் பின்வந்த சங்கமருவிய இலக்கியமான திணைமாலை நூற்றைம்பது,

*"நறுந்தன் டகரம் வகுள மிவற்றை*
*வெறும்புதல்போல் வேண்டாது"* *(திணை.மா.24: 1-2)*

என்று குறிப்பிடுகின்றது. மற்றொரு பாடலில் மரங்களை வெட்டுவது மட்டுமின்றி, அதன் நுனியைக் கூட அழிப்பது 'அறமன்று' என்று தமிழர்கள் அறமாகக் கொண்டிருந்தனர் என்பதை,

*"நெறிதிரிவா ரின்மையா லில்லை - முறிதிரிந்த*
*கண்டலந்தண் டில்லை"* *(திணை.மா.61: 2-3)*

எனும் பாடலடிகளில் தோழியொருத்தித் தலைவனிடம், எம் நாட்டில் அறநெறி தவறி நடப்பவர்கள் எவரும் இல்லையாதலால் கண்டால் சோலைகளில் உள்ள தாழை மரங்களின் நுனிப்பகுதிகள் முறிந்த காட்சியைக் கூட எங்கும் காணமுடியாது என்று தன் நாட்டின் சிறப்பினை விளக்குவதைக் காணமுடிகிறது.

மேலும் கடற்கரைப் பகுதிகளில் சுனாமி போன்ற பேரழிவுக் காலங்களில் அலைகளின் சீற்றத்திலிருந்து மேலாண்மை செய்யும் பொருட்டு அலையாத்திக் காடுகளை வளர்த்தனர். "ஆறுகள் கடலில் கலக்கும் இடங்களைக் கழிமுகம் என்று சொல்வார்கள். கழிமுகங்களில் ஒரு காலத்தில் அலையாத்திக் காடுகள் இருக்கும். அலைகள் பேரலையாக எழுந்து நிலம் நோக்கி வருங்கால், அதைத் தடுக்கும் பணியைச் செய்தன. அந்த அலையாத்தி மரங்களை இன்றும் சிதம்பரம் பக்கத்தில் காணலாம். சுரப்புன்னை என்றும் அந்த மரத்தைச் சொல்வார்கள். அடையாறு பகுதியிலும் அந்த மரங்கள் இருந்துள்ளன. மக்கள் அதைச் சுத்தமாக அகற்றிவிட்டு கடற்கரையை உருவாக்கினர். மேலும், கழிமுகப் பகுதிகளில் மணற்குன்றுகள் இயற்கையாகவே இருக்கும். அக்குன்றுகள் அலைகள் சீறிப்பாய்ந்து எழும்போது அந்த அலையைத் தடுக்கும் சக்தி உள்ளவை. நகரை அழகுப்படுத்துவது என்ற பெயரால், இயந்திரங்களைக் கொண்டு அதை அழித்து விட்டனர் என்று இயற்கைக்கு மனிதர்கள் ஏற்படுத்தும் அழிவைக் குறித்து சுற்றுப்புறச்சூழல் அறிஞர் தியோரர் பாஸ்கரன் விளக்கியுள்ளார்."[35] கடற்கரை ஓரங்களில் மரங்களை வளர்த்து

பேரலையின் சீற்றத்தில் இருந்து பாதுகாத்தனர். ஆனால், இன்று அம்மரங்கள் அனைத்தும் அழிக்கப்பட்டதால் கடலலைகளால் பேரழிவுகள் ஏற்படுகின்றன. இவ்வாறு சங்கத் தமிழர்கள் தாவரங்களாகிய மரங்களை தங்கள் சக உயிர்களாக மதித்தும் தம்மைப் பேரழிவிலிருந்து பாதுகாத்தும் போற்றியுள்ளனர். விலங்கினங்களையும் தம் உறவுகளாக போற்றியுள்ளதை,

> ***"நறவுவாய் உறைக்கும் நாகுமுதிர் நுணவத்து***
>
> **..............................................**
>
> **..............................................**
>
> ***தந்துநீர் வரைப்பிற் கொற்கை"*** ***(சிறு. 51-62)***

என்ற பாடலில், நுணா மரத்தால் செய்த குறுந்துணி மணிமாலையை உடைய மார்பையும், செப்பூங்கண்ணி சுற்றிய நெற்றியினையும் உடையதாய், உப்பு வணிகர்தம் வண்டியோடு வந்த அவர்தம் மக்களை ஒத்த மந்தி, வாள் போலும் வாயை உடைய கிளிஞ்சலின் வயிற்றில், எயிற்றை ஒத்த முத்துக்களைப் பெய்து மூடிக் கிலுகிலுப்பையாகக் கொண்டு நுசுப்பையும், தோள்புறம், மறைக்கும் ஐம்பாற் கூந்தைலையும் உடைய உப்பு வணிச்சியர் ஈன்ற பிள்ளைகளோடு கூடி விளையாடுகின்ற கடற்கரைப் பட்டினம் கொற்கை என்று பதிவு செய்துள்ளது.

"தாவரம், விலங்கு, பறவை முதலிய உயிரினங்களைத் தமது குடும்பத்தைச் சேர்ந்த ஓர் 'உறுப்பினராக'வோ, இயற்கை இறந்த சக்திகள் குடியிருக்கும் பொருளாகக் கருதி அவ்வியற்கைக் கூறுகளைப் புனிதத் தொகுதியாகவோ அணுகும் கண்ணோட்டங்களை இலக்கியப் பிரதிகள் வெளிப்படுத்துகின்றன"[36] என்ற ஆ. தனஞ்செயனின் கருத்து சங்க மக்களின் வாழ்வியலைப் பிரதிபலிப்பதாக உள்ளது.

சங்ககால மக்கள் இயற்கையாகிய விலங்குகளுடன் இணங்கி இன்பமான வாழ்வினை நடத்தினர் என்பதற்கான எச்சமாக மேற்கண்ட பாடல்களும் விளக்கங்களும் அமைந்துள்ளன. மேலும் இயற்கையும் மனிதர்களை தன் இயல்புக்கு ஏற்ப அவர்களை நேசிக்கும் தன்மை உடையதாக சங்க இலக்கியத்தில் படைக்கப்பட்டுள்ளது.

"தமிழ் நிலப் பகுதிகளை விவரிக்கும் கவிதைகள், மக்கள் தண்ணிய சோலைகளில் நடனமிடுவதையும், அவை (கூட்டங்) களைச் சிற்றூரில் நிழல்மிக்க மரங்களின் அடியில் நடத்துவதையும், வெட்ட வெளியில் விருந்துண்பதையும், தினசரி வாழ்க்கையிலும் பூக்களையும் தழைகளையும் கொண்டு தங்களை அலங்கரித்துக் கொள்வதையும், வெப்பமான சூழ்நிலை மட்டுமே அனுமதிக்கக் கூடிய ஆறு – குள – கடல் - நீராடல்களையும், அவர்கள் இயற்கையோடு இசைந்த மிக நெருக்கமான வாழ்க்கை நடத்தியதையும் காட்டுகின்றன"[37] இவ்விளக்கமானதுச் சங்ககாலத்தில் இலக்கியங்களுக்கும் - மனிதர்களுக்குமான உறவினை வெளிப்படுத்துகின்றது.

*"................... அண்டிரன்*
*குன்றம் பாடின கொல்லோ*
*களிறுமிக வுடையவிக் கவின்பெறு காடே"* *(புறம்.131:.2-4)*

மேற்கூறப்பட்ட பாடலில் அண்டிரனது மலையைக் களிறுகள் மிக உடைய இந்த அழகையுடைய காடுகள் பாடியதோ என்று உணர்ச்சிப் பொங்க அண்டிரனின் கொடைத்தன்மையைப் புகழ்ந்து பாடியுள்ளார். இங்கு மலையைப் பாடியது என்பது மலையை ஆட்சி செய்யும் ஆய் ஆண்டிரனின் புகழைப் பாடியது என்பதனைக் குறிப்பால் உணர்த்துகின்றது. காடுகள் மன்னனாகிய மனிதர்களைப் புகழ்ந்து பாடும் புகழ்தன்மைக் கொண்டதாகச் சங்ககால சமூகம் விளங்குகின்றது.

*"பெருஞ்சோறு பயந்து பல்யாண்டு புரந்த*
*பெருங்களி றிழந்த பைதற் பாகன்*
*அதுசேர்ந் தல்கிய வழுங்க லாலை*
*வெளில்பா ழாகக் கண்டுகலுழ்ந் தாங்கு"* *(புறம்.220: 1-4)*

இப்பாடலில் பல ஆண்டுகளாக நெல்லை விளைவித்துப் பாதுகாத்த பெரிய களிற்றை இழந்த வருத்தத்தை உடைய பாகன் அந்த யானை இருந்து தங்கிய இரக்கமுண்டாக்கும் கூடத்தில் உள்ள கம்பம் வெறுமையாக நிற்கக்கண்டு கலங்குவான் என்று யானையினை பல்வேறு வகையில் பேணி வளர்த்து அது இறந்ததற்குக் கலங்கும் காலமாகச் சங்கச் சமுதாயம் திகழ்ந்துள்ளதை உணரமுடிகிறது.

"பண்டைய நாளில் களிறுகட்கென வேந்தரும், செல்வரும் நெல்விளை வயல்களை விட்டு, அவற்றில் நெல் விளைவித்து அந்நெல்லைக் களிறுகளின் உணவுக்கும் பயன்படுத்துவது மரபு. அவ்வயல்கட்கு 'யானை மானியம்' என்று பெயர் கூறுவர்"[38] இதன் மூலம் சங்கச் சமூகம் விலங்கினங்களையும் தாவரங்களையும் தம் தேவைக்குப் பயன்படுத்தினாலும் அதனைப் பேணிப் பாதுகாத்து அவ்வுயிரினங்களுக்குப் பேரழிவுகள் ஏற்படாது மேலாண்மை செய்துள்ளனர் என்பதை மேற்கூறிய பாடல்கள் மற்றும் விளக்கங்களின் வாயிலாக அறியமுடிகின்றது.

# தொகுப்புரை

- சங்ககாலத்தில் ஏற்பட்ட பேரிடர்களுக்கு மேற்கொள்ளப்பட்ட மேலாண்மைகளை முறைசார் மேலாண்மை, முறைசாரா மேலாண்மை என்ற நிலைகளில் சங்க இலக்கியத்தை ஆய்வு செய்ய இயலுகின்றது.
- சங்கத்தமிழர்கள் தம் சுற்றத்தினருடன் இணக்கமான நேரியவாழ்வினை மேற்கொண்டனர். சிறந்த மேலாண்மைவாதிகளுக்குத் தேவையான அனைத்துத் தகுதிப்பாடுகளையும் பெற்றிருந்தனர். இதன் மூலம் பேரழிவுகள் போன்ற காலங்களில் தங்களைத் தாங்களே மேலாண்மை செய்து கொள்ளும் அளவில் தேர்ந்த சிந்தனைவாதிகளாகச் செயல்பட்டுள்ளனர்.
- சங்ககாலத்தில் வான்மழையினை மட்டும் நம்பி மக்கள் வாழவில்லை. ப∴றுளியாறு போன்ற ஆறுகளை வெட்டுவித்து நீர்வளத்தைப் பெருக்கினர். காவிரி, கங்கை, வையை, பொருநை என்று பல்வேறு ஆறுகளில் நீரை முறையாக வாய்க்கால் அமைத்து வளங்களைப் பெருக்கினர்.
- பண்டைய மக்கள் நீர்வளங்களைப் பெருக்கும் முகமாகப் குளங்கள், ஏரிகள் போன்றவற்றை வெட்டி நீரைத் தேக்கினர்.
- மழைபெய்யும் காலங்களில் பிற்காலத் தேவையைக் கருத்தில் கொண்டு முறையாக நீரினை அணைகள் கட்டி தேக்கினர். அணைகளை மலைகள் நிறைந்த பகுதிகளில் எந்நாட் பிறைவடிவத்தைப் போன்று பாதுகாப்பாக அமைத்து நீரினைத் தேக்கிப் பாதுகாத்தனர். இவ்வணைகளுக்குக் காவல் ஆட்களை நியமித்து பேரழிவுகள் ஏற்படாது மேலாண்மை செய்துள்ளனர்.
- மென்நிலம், வன்நிலம் என்று நீர்வளத்தின் அடிப்படையில் நிலத்தினை இருவகையாகப் பிரித்திருந்தனர். மென்நிலம் ஆற்றுவளம் மிக்கது. வன்நிலம் வான்மழையினாலேயே வளம்பெற்றது. இவ்வாறு வான்மழைப் பொய்க்கும் காலத்தில் கிணறுகளைத் தோண்டினர். மேலும், வன்நிலங்களில் நிலத்தடிநீரையும் பயன்படுத்தி உயிரினங்களுக்குப் பேரழிவுகள் ஏற்படாது நீர்மேலாண்மை செய்துள்ளனர்.
- பஞ்சபூதங்களில் ஒன்றான காற்றினைக் கொண்டு கடல்நீரினை மேலாண்மை செய்துள்ளனர். மரக்கலம் போன்றவற்றை அமைத்து கடல்கடந்து வாணிபத் தொடர்பினை மேற்கொண்டு பொருள்சார்ந்து மேலாண்மைச் செய்துள்ளனர்.
- வேட்டைத் தொழிலிலிருந்து வேளாண்மைத் தொழிலுக்கு மாறுபட்டு உணவு உற்பத்தியினைச் சங்கத் தமிழர்கள் மேற்கொண்டனர். வேளாண்மைக்கு உற்பத்திக் கருவிகளைப் பயன்படுத்தினர். நீர்ப்பாசன முறையினையும் அறிந்து வேளாண்மையில் ஈடுபட்டதை அறியமுடிகிறது.

- குறிஞ்சி நிலத்திலும் முல்லை நிலத்திலும் மருதநிலத்திலும் விளைவிக்கப்பட்டத் தினைகளை விலங்குகள் மற்றும் மனிதர்களிடமிருந்து அழிவுகள் ஏற்படாவண்ணம் பாதுகாத்தனர்.
- விளைவித்து அறுவடை செய்யப்பட்ட உணவுப் பொருட்களைக் குதிர்கள் போன்றவற்றில் சேமித்தனர். பிற நாட்டினர்களால் கொள்ளையிடாதவாறு ஆட்களைக் கொண்டு பாதுகாத்தனர். இவ்வாறு உணவின் காரணமாகப் பேரழிவுகள் ஏற்படாது மேலாண்மை செய்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் பதிவுசெய்துள்ளன.
- மன்னர்களுக்கு அமைக்கப்படும் அரண்மனைகள் பேரழிவுகள் ஏற்படாமல் இருக்க கைதேர்ந்த வானநூலினை நன்கு கற்றறிந்த தச்சர்களைக் கொண்டு கட்டினர். மக்கள் வசிப்பதற்கு அமைக்கப்படும் குடியிருப்புகள் இயற்கையால் நிகழும் பேரழிவுகள் ஏற்படாமல் அனைத்துப் பருவகாலங்களிலும் நிலைத்திருக்கும் வகையில் அமைத்துள்ளனர்.
- சங்கச் சமூகத்தில் மன்னர்களை மக்கள் இறையெனப் போற்றினர். மன்னர்களுக்கென இலக்கணங்களை வகுத்து அதன்படி நிர்வாகம் செய்து மக்களைக் காக்க அறிவுறுத்தப்பட்டனர். இதன் மூலம் சங்ககாலம் சிறந்த நிர்வாகிகளால் ஆட்சி செய்யப்பட்டதை அறியமுடிகின்றது. மேலும், மன்னனால் நிகழ்த்தப்பட்ட ஆட்சியமைப்புகள் பெரும்பான்மையும் தன்னை (தலைமை) முதன்மைப்படுத்தப்பட்டு முறைசார் மேலாண்மையின் தன்மையில் நிர்வாகம் செய்யப்பட்டது.
- சங்க காலத்தில் வேந்தர்கள் சிறந்த நிர்வாகிகளாகச் செயல்பட்டனர். தனது தலைமையின் கீழ் அமைச்சர் குழுக்கள், நால்வகைப்படைகள் போன்றவை அமைத்து தனது நாட்டினை சிறந்த முறையில் மேலாண்மை செய்துள்ளனர். மேலும் நிர்வாகத்தின் பொருட்டு நாடுகளைப் பலப்பிரிவுகளாகப் பிரித்து குறுமன்னர்களால் ஆட்சி செய்தனர்.
- மண்ணாசை காரணமாகப் போர் விரும்பும் மன்னர்களை எதிர்த்து போர்புரியும் பொருட்டு நால்வகைப் படைகளை அமைத்தனர். மறவர்கள், தேர்கள் மட்டுமல்லாது யானை, குதிரைப் போன்றவற்றிற்குப் போர்ப் பயிற்சிகள் அளிக்கப்பட்டு முறையாகப் போரில் ஈடுபடுத்தப்பட்டு போரியல் மேலாண்மை செய்துள்ளனர்.
- மக்களின் குறைகளைத் தீர்க்கும் பொருட்டு அமைச்சர்கள் மன்னர்களுக்குச் செவியறிவுறுத்தினர். மேலும், பல ஆலோசனைக் குழுக்கள் செயல்பட்டது.
- மன்னர்களும் சான்றோர்களின் அறிவுரைகளைக் கேட்டு பாணர்கள், புலவர்கள், விறலியர் போன்ற இரவலர்களுக்குக் கொடை வழங்கினர். மேலும் தன் நாட்டில் மழையின்மை, வறட்சி போன்ற காலங்களில் பேரழிவுகள் ஏற்படாது தன்நாட்டையும், மக்களையும் காத்து மேலாண்மைச் செய்துள்ளனர்.

- உலகமானது பல்வேறு வகையான பேரிடர்களால் உருவானது. பஞ்சபூதங்கள், ஆறுகள், மலைகள் என இயற்கை அமைப்புகளின் தோற்றமும் பேரிடர்களாலேயே உருவானது என்பதைச் சங்க இலக்கியங்கள் பதிவுசெய்துள்ளன.
- இயற்கை மூலப்பொருட்களின் இயக்கம் என்பது ஒன்றுடன் ஒன்று சார்ந்து இணைந்து செயல்படுகின்றன. இத்தகைய செயல்பாட்டினால் இயற்கை தன்னுள் மேலாண்மை செய்து உயிரினங்களுக்கு அனைத்து வளங்களையும் அளிக்கின்றது.
- உயிரினங்களின் வளமைக்கு முதன்மையானது மழை. கடலில் உள்ள உவர்நீரை மழைமேகம் முகந்து கொண்டு குளிர் காற்றினால் மழையைப் பெய்விக்கின்றது. இவ்வாறு இயற்கையாகிய பூதங்கள் அனைத்தும் சமநிலையில் நின்று மேலாண்மை செய்கின்றது.
- மழையின் காரணமாக உலக உயிர்கள் உயிர்ப்பெறும் வண்ணம் வளங்கள் பெருகின. வறட்சியால் ஏற்படும் மக்களின் தீராநோயான பசிப்பிணி போன்றவை மழையால் போக்கப்பட்டுள்ளது.
- வளங்கள் அனைத்துப் பகுதிகளிலும் ஒரே நிலையில் அமைவதில்லை. சங்ககாலத்தில் மலை, காடு, வயல், கடல் என்று வளங்களின் மையமிட்டே நிலப்பிரிப்புகள் அமைக்கப்பட்டது. இதனால் வளமை பொருந்திய நிலமாக முறையே மருதம், நெய்தல், முல்லை, குறிஞ்சி என்று அமைந்திருந்தன. வளங்கள் மிகுந்த பகுதிகளில் கிடைக்கப்பெறும் பொருள்களைப் பண்டமாற்றம் (பொருள் - பொருள்) செய்து வளங்களைப் பரிமாறி இயற்கையை மேலாண்மை செய்துள்ளனர்.
- சங்கச் சான்றோர்கள் வானியல் சார்ந்த அறிவினைப் பெற்றிருந்தனர். இதன்காரணமாக வானில் ஏற்படும் கோள்களின் நிலைமாற்றத்தினை அறிந்திருந்தனர். வடகிழக்குப் பருவமழை, வெள்ளிக் கோள்கள் போன்றவற்றால் ஏற்படும் நன்மை தீமைகளைச் சங்கப் புலவர் தம்பாடல்களில் பதிவுசெய்துள்ளனர்.
- சங்ககாலத்தில் இயற்கையாலும் மனிதர்களாலும் ஏற்பட்ட பேரழிவுகளின் போது புலம்பெயர்ந்து தங்களையும் தமது உடைமைகளையும் பிற உயிர்களையும் (ஆநிரைகள்) பாதுகாத்துள்ளனர்.
- இயற்கையும் மனிதனும் சங்க காலத்தில் இணைந்து வாழ்ந்துள்ளனர். தாவரங்களைத் தம்தேவைக்கு மட்டுமே பயன்படுத்திய நிலையினையும் விலங்குகளின் இறப்பிற்கு வருந்திய நிலையினையும் சங்கப் பனுவல்கள் பதிவுசெய்துள்ளன.

# சான்றெண் விளக்கம்

1. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, புறநானூறு (பகுதி-1). ப. 46
2. அ. மார்க்ஸ், ஆரியருக்கு முற்பட்ட தமிழ் பண்பாடு. பக். 25-26
3. முனைவர் பழ. கோமதிநாயகம், தமிழக பாசன வரலாறு. ப. 26
4. மேலது. பக். 59-60
5. பதிற்றுப்பத்து மூலமும் உரையும். ப. 162
6. ஆ. மணவழகன், சங்க இலக்கியத்தில் மேலாண்மை. பக். 41-42
7. பழ. கோமதிநாயகம், தமிழக பாசன வரலாறு. ப. 64
8. மேலது. ப. 26
9. மேலது. ப. 26
10. அ. மார்க்ஸ், ஆரியருக்கு முற்பட்ட தமிழ் பண்பாடு. ப. 26
11. தேவ. பேரின்பன், தமிழகத்தின் பொருளாதார வரலாறு. ப. 25
12. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை, பதிற்றுப்பத்து உரை. ப. 156
13. தனிநாயக அடிகள், நில அமைப்பும் தமிழ்க் கவிதையும். ப. 52
14. அடியார்க்கு நல்லார் திருக்குறள் உரை. ப. 7.
15. வெ. பெருமாள்சாமி, சங்ககாலத் தமிழகத்தின் சமூக நிலை, மார்க்சிய நோக்கில் சங்க இலக்கிய ஆய்வு. ப. 12
16. வந்தனா சிவா, பசுமை புரட்சியின் வன்முறை. ப. 22
17. வீ. ஆனந்தகுமார், முதல் தமிழகம் (குமரிக் கண்டம்). ப. 71
18. இராஜ முத்திருளாண்டி, இலக்கியத்தில் மனித உரிமைகள். ப. 37
19. Cynthia D.Fisher, Lyle F.Schoen feldt, James B.Shaw, Human Resource Management. P. 7
20. பொ.வே. சோமசுந்தரனார், பத்துப்பாட்டு (தொகுதி-1). ப. 88
21. புலவர் கா. கோவிந்தன், பண்டைத் தமிழர் போர் நெறி. ப. 117
22. கா. சுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாயம். ப. 51
23. ஆர். பார்த்தசாரதி, உலகாயதம். ப. 14
24. பொ. வே. சோமசுந்தரனார், பரிபாடல். ப. 442
25. மேலது. ப. 444
26. ராஜ் கௌதமன், தமிழ்ச் சமூகத்தில் அறமும் ஆற்றலும். ப. 282
27. தேவ. பேரின்பன், தமிழகத்தின் பொருளாதார வரலாறு. ப. 60
28. சிலம்பு நா. செல்வராசு, சங்க இலக்கிய மறுவாசிப்பு. ப. 181

29. பழ. கோமதிநாயகம், தமிழக பாசன வரலாறு. ப. 26

30. தி.சு. நடராசன், தமிழ்ச் சமுகத்தில் வைதீக சமயம். ப. 21

31. அ. மார்க்ஸ், ஆரியக் கூத்து. ப. 45

32. நக்கீரன், திருடப்பட்ட தேசம். ப. 15

33. ராஜ்கௌதமன், கலித்தொகை - பரிபாடல் ஒரு விளிம்பு நிலை நோக்கு. ப. 10

34. நக்கீரன், திருடப்பட்ட தேசம். ப. 14

35. http://www.jayabaratham.word press.com (இணையதளம், பல்சுவைக்காவியம், ஆசிரியர் பக்கம்)

36. ஆ. தனஞ்செயன், சங்க இலக்கியமும் பண்பாட்டுச் சூழலும். ப. 31

37. தனிநாயக அடிகள், நில அமைப்பும் தமிழ்க் கவிதையும். ப. 8

38. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, புறநானூறு (தொகுதி-2). ப. 48

# இயல் - 5

## பேரிடர் மேலாண்மையில் புலவர்களின் பங்(களிப்பு)கு

சமூகத்தின் பிரதிபலிப்பாக இலக்கியங்கள் திகழ்வதற்கு அக்காலத்தில் வாழும் படைப்பாளர்களின் செயல்பாடு என்பது முதன்மையிடம் பெறுகின்றது. தமிழ்ச் சமூக வரலாற்றின் தொன்மையைப் பறைசாற்றுவதற்கு இலக்கியச் சான்றாதாரங்கள் இன்றியமையாதன. அத்தகு வரலாற்று நிகழ்வுகளைத் தம் பாடல்களில் பதிவுசெய்ததில் சங்கப்புலவர்கள் நீங்கா இடம் பிடித்துள்ளனர். சங்கப்புலவர்கள் தம் சீரிய சொல்லாற்றலால் மக்களின் நல்வாழ்க்கைக்குப் பாடுபட்டவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள். கல்வி, ஒழுக்கம், அஞ்சாமை, சொல்வன்மை, பரந்தவுள்ளம், குறைகண்டவிடத்து அவைகளைப் போக்கும் தன்மை ஆகிய பண்புகளிற் சிறந்து விளங்கிய புலவர்கள் மன்னர்களிடமும், வேளிர்களிடமும் ஏனைய செல்வந்தரிடமும் சென்று புகழ்ந்து பாடி பரிசில் வாழ்வினை மேற்கொண்டனர். இருப்பினும் சமுதாயத்தில் தன் கடமையினை நிறைவேற்றத் தவறியதில்லை.

சங்கப்புலவர்கள் வறுமையின் காரணமாகத் தம் புலமைத் தொழிலால், முடியுடை வேந்தரிடமும், குறுநில மன்னரிடமும் ஊர் ஊராகச் சென்று இரந்து வாழ வேண்டிய நிலைக் காணப்பட்டது. பழுத்த மரங்களை நாடிச் செல்லும் பறவைகள் போல வள்ளல்களைத் தேடிச் சென்று பாடிப் பரிசில் பெற்ற பொருள்களைத் தாம் மட்டும் வைத்து இன்புறாமல், தம் சுற்றத்தாருக்கும், பிறருக்கும் கொடுத்து பகிர்ந்து வாழும் இனிய வாழ்க்கையை மேற்கொண்டனர். பாடிப் பரிசில் பெறும் தொழிலை உயர்வுடையதாகக் கருதி தாம் பெற்றிருந்த அறிவு முதிர்ச்சியையும், எழுத்தாற்றலையும் சமுதாய நலனுக்குப் பயன்படுத்தினர். மக்கள் நலம் பேணும் மன்னர்களையும், வள்ளல்களையும் புகழ்பாடி அவர்களை ஊக்குவித்தனர். வறுமை பசிப்பிணிகளைப் போக்கும் வகையில் வளங்களைப் பெருக்க அறிவுறுத்தினர். மேலும், அரசியலில் நிகழும் தவறுகளையும், மக்களின் குறைகளையும் கண்டு களைபவர்களாகவும் செயல்பட்டனர். இதன் அடிப்படையில் புலவர்களின் வாழ்வியலைப் பற்றியும் இயற்கையாலும் மனிதர்களாலும் நிகழ்ந்த பேரிடர்களைப் களைந்ததில் புலவர்களின் மேலாண்மைத் திறத்தினையும் ஆய்வதாக இவ்வியல் அமைகின்றது.

### பாணர் மரபு

இலக்கிய உருவாக்கத்தில், புலமைத்துவ மரபுருவாக்கம் நிலைபெறுவதற்கு வாய்மொழிப் பாணர் மரபான பண்பாட்டு மரபு அடிப்படையானது. எந்த ஒரு பொருளும் தொடக்க நிலையிலேயே முழுமையான வடிவமைப்பைப் பெறுவதில்லை என்ற விதிப்படி இலக்கியங்களும் இலக்கணங்களும் தோற்றம் கொண்டது. நமக்குக் கிடைத்த முதல் இலக்கணமான தொல்காப்பியத்தில் என்ப, என்பனார் புலவர் போன்ற சொல்லாடல்கள்

வழி முந்தைய மரபினை அனுமானிக்க முடிகின்றது. இலக்கியங்களும் ஏட்டில் எழுதி புற, அகக் கட்டமைப்பைப் பெறுவதற்குப் பாணர்களின் வாய்மொழி வடிவங்களே காரணமாக அமைந்துள்ளன. பின் வந்த புலவர் மரபாகிய புலமைத்துவ மரபினால் வாய்மொழிப் பாடல்கள் ஏட்டில் பதிவுசெய்யப்பட்டன. இப்புலமைத்துவத்தில் கவிதையாத்த புலவர்களை மக்கள் உயர்வாகக் கருதினர். வாய்மொழிப் பாணர்கள் சமூகத்தில் பின்தங்கிய நிலையான விளிம்பு நிலைக்குத் தள்ளப்பட்டனர். இதனை,

"வாய்மொழி வழக்காறு மரபான பாணர் மரபு புலமைசார் மரபான புலவர் மரபுக்கு மாறிய காலமாகச் சங்கப் பாடல்களின் காலம் அமைந்துள்ளது."[1] என்ற மரபு மாற்றத்தினால் "சமூக வாழ்வில் முக்கியம் பெற்றிருந்த பாணர் காலப்போக்கில் 'கல்லாவய்ப்பாணர்' எனப்படுவதும் புலவர் 'செந்நாப் புலவர்' என ஏத்தலும் காணப்படுகின்றது"[2] என்று பாணர்கள் இழிநிலைக்குத் தள்ளப்பட்டு புலவர்கள் முதன்மைப்படுத்தப்பட்டதை மேற்கூறிய சான்றுகளின் வழி நிருபனமாக்கலாம்.

## புலவர் - விளக்கம்

சங்கக் கவிதையாக்கத்தில் முடிசூடா மன்னர்களாக விளங்கியவர்கள் கவிதையாத்த புலவர்களே. தம் இலக்கணப் புலமையாலும் அறிவு நுட்பத்தினாலும் சங்கச் சமூகத்தின் நிலையினை இலக்கியங்களாகப் பதிவு செய்தனர். சங்ககாலத்தில் பாடல் பாடிய அறிஞர்களைப் பல்வேறு பெயர்களைக் கொண்டு அழைக்கப்பட்டிருந்தாலும்,

***"மாசில் பனுவற் புலவர்"*** ***(பரி.6: 7)***

'குற்றமில்லாத நூற்கேள்வியினை உடைய நல்லிசைப் புலவர்கள்' என்று புலவர்கள் தன்மையைப் பற்றி விளக்கியுள்ளனர். இதன் மூலம் குற்றமில்லா நூலறிவால் சிறந்தவர்களையே 'புலவர்' என்ற சொல்லால் சங்கச் சான்றோர் வழங்கியுள்ளனர். மேலும்,

***"சீர் முற்றி வாய்ச்ச சிறப்பெய்தி"*** ***(கலி.67: 2)***
***"புகழ் மேம்படுநனைக் கண்டனம்"*** ***(புறம்.48: 9)***

என்ற பாடல்களின் வாயிலாக, புலவர்கள் அரசனின் புகழை மேம்படுத்தல் இயல்பு. எனவே தன்னைப் புலவர் என்று குறிக்க 'புகழ் மேம்படுத்துபவன்' என்று இலக்கணம் படைக்கின்றனர்.

"அறிஞர்களிடையே புலவர் எனும் சொல்லாட்சி குறித்துப் பல கருத்துக்கள் நிலவுகின்றன. புலவர் எனும் இச்சொல் பொறி உணர்வு, அறிவு ஞானம், முதலிய பொருளுடைய புலம் என்பதிலிருந்து பெறப்பட்டது. 'புலம்' என்றால் அறிவுடையவர், கற்றோர் என்பது பொருள். ஞானம், அறிவு, கல்வி ஆகியன புலவனாகிய மனிதனுக்குப் பரம்பரையாக வருவன என்ற கருத்தைக் காட்டுவது புலவர் என்ற சொல்லாகும்"[3] என்றும்,

“செய்யுள் செய்யும் ஆற்றலுடையாரைக் கவிஞர் என்றும் பாவலர் என்றும் குறிப்பது பிற்கால மரபாகும். சங்க காலத்தில் ‘அறிவாளர்’ என்னும் சொல்லாலேயே அவர்கள் அறியப்பட்டனர்”[4] என்ற அறிஞர்களின் கூற்று கவனிக்கத்தக்கது.

மேற்கூறிய சொல்லாடல்களை நோக்கும் போது அறிவால் தேர்ந்த, புலமை தன்மையைக் கொண்டு மன்னர்களின் புகழ் மேம்படுத்தும் அறிவாளர்களாகிய சான்றோர்களையே ‘புலவர்’ என்ற சொல்லால் அழைக்கப்பட்டனர்.

### வறுமைத் துயருடைய புலவரின் வாழ்க்கை

தமிழ்ப் புலவர்களின் வாழ்வியல் நிலை என்பது சங்ககாலம் தொடங்கி இன்று வரை வறுமைத் துயருடையதாகவே பதிவாகியுள்ளது. வறுமைத் துயருடன் வாழ்ந்த போதிலும் தமிழையும் தமிழ் இலக்கியங்களையும் வளர்த்தெடுக்க தவறியதில்லை.

“பழந்தமிழகத்தைத் திரும்பிப் பார்க்கும் நாம் தமிழ்ப்புலவர்களுக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம். கால வெள்ளத்தில் நமது நாகரிகம் அழிந்து போகாமல் காப்பாற்றிவர்கள் அவர்கள். செல்வத்தில் திளைத்த போது இறுமாந்து அவர்கள் தமிழை மறந்ததும் இல்லை, வறுமையில் வாடிய போது மனந்தளர்ந்து தமிழைத் துறந்ததுமில்லை. அவர்களிலே பலர் தமிழால் வாழ்ந்திருக்கின்றார்கள், தமிழால் சிறப்படைந்திருக்கிறார்கள், அதுபோலவே அவர்கள் தமிழுக்காகத் தங்கள் உயிரையும் கொடுத்திருக்கிறார்கள் பிறர் கூறும் இழிவுரைகளைப் பொறுத்திருக்கிறார்கள். அவர்களால் தமிழ் வளர்ந்தது; தமிழ் இலக்கியங்கள் சிறப்புற்றது”[5] என்ற கூற்றானது பல்வேறு சிறப்புகளைப் பெற்று விளங்கிய சங்கப்புலவர்கள் வறுமையின் பிடியில் பரிசில் வாழ்வினையே மேற்கொண்டனர் என்பதை எடுத்துரைக்கின்றது. மேலும்,

***‘‘நிரயத் தன்னவென் வறன்களைந் தன்றே”*** ***(புறம்.376: 15)***

என்ற அடியில், வறுமையின் கொடுமைத் தன்மையினை, ‘வறுமை நிலையானது நரகம் போன்றது’ என்றும், அந்நரக வேதனைப் போன்ற துன்பத்தைப் போக்குதல் சிறந்த அறம் என்று தங்களின் வாழ்வியல் நிலையினைப் பதிவு செய்துள்ளனர். சங்ககாலத்தில் செல்வப் பெருக்கு என்பது ஒருமை சார்ந்து அமைந்தநிலைக் காணப்பட்டிருக்கலாம். வேந்தன், அவனைச் சார்ந்த உயர்வாகக் கருதப்படும் சமூகத்தினருக்கு அனைத்து வளங்களும் கிடைக்கப்பெற்றிருக்கலாம். ஆனால், தன் வாழ்வாதாரத்திற்கே பிறரைச் சார்ந்து அவர்களின் இரவல் மூலமே வாழ்க்கை நடத்தும் விளிம்புநிலைச் சார்ந்த மக்களும் அச்சமூகத்தில் வாழ்ந்துள்ளனர் என்பதை மேற்கூறிய பாடலின் வழி அறிய முடிகிறது.

மனிதன் உயிர் வாழ்வதற்கு அடிப்படை ஆதாரங்களாக இருப்பவை உண்ண உணவு, நீர், உடை இருப்பிடம் போன்றவையாகும். இந்த அடிப்படைத் தேவைகள் கூட இல்லாமல் வாழ்கின்ற நிலையில் புலவர்கள் இருந்துள்ளனர். சங்கச் சமூகத்தில் வாழ்ந்த புலவர்களின் வாழ்வினை முடமோசியார்,

***"அலங்குகதிர் சுமந்த கலங்கற் சூழி***
***நிலைதளர்வு தொலைந்த வொல்குநிலைப் பல்காற்***
***பொதியி லொருசிறைப் பள்ளி யாக***
***முழாஅரைப் போந்தை யரவாய் மாமடல்***
***நாரும் போழுங் கிணையோடு சுருக்கி***
***ஏரின் வாழ்நர் குடிமுறை புகாஅ***
***ஊழிரந் துண்ணும் முயவல் வாழ்க்கை"*** ***(புறம்.375: 1-7)***

இப்பாடலில் புலவரின் வாழ்வியல் நிலையை, அசைகின்ற வெயிலைச் சுமந்து கிடக்கும் கலங்கிய நீர்நிலை போல, நிலைதளர்ந்து பாழ்பட்டு சீரழிந்து பல்கால்களையும் உடைய மன்றத்தின் ஒருபக்கம் பள்ளி இடமாகக் கொண்டு இருக்க இருப்பிடமின்றி வாழும் இல்லற வாழ்வினை மேற்கொண்டனர் என்று பதிவு செய்துள்ளார். மேலும், புலவர் தம் வாழ்வில், மத்தளத்தைப் போன்ற அரையை உடைய பனையின் அரம் போன்ற வாயினை உடைய பெரிய மடலினின்றும் எடுத்த நாரையும், பனங்குருத்தையும் தினையோடு சேர்த்து கட்டி, ஏரால் உழுதுண்டு வாழ்வோர் மனையின்கண் புகுந்து முறையே அவர் நல்கும் உணவை இரந்துண்ணும் வருத்தம் பொருந்திய வாழ்வினை உடையவர்கள் என்று உணவிற்காகப் பிறரை எதிர்ப்பார்த்து இருக்கும் நிலையை எடுத்துக்காட்டியுள்ளார். இதில் ஏரால் உழுதுண்டு வாழும் 'ஏரின் வாழ்நர்' மக்கள் மன்னர்களைப் போன்று இரவலர்க்குக் கொடுத்து வாழ்ந்தனர் என்பதும், புலவர்களுக்கு ஏர்பூட்டி உழுவதற்கான நிலம் ஏதும் இல்லாமையால் உழவு செய்து வாழ்பவர்களிடம் போய் இவர்கள் இரந்து நிற்கும் நிலை காணப்பட்டிருக்கலாம் என்று எண்ணவும் இடமிருக்கிறது. சங்கப்புலவர்கள் உணவு கிடைக்கப்பெறாது ஏழ்மை நிலையில் வாழ்வினை மேற்கொண்டவர்கள். இவ்வாறு சங்கப்புலவர்கள் வீட்டில் உணவு சமைத்தல் நிகழாமையால் வீட்டில் எலிகள் ஆங்காங்கே சுவர்களைத் தோண்டி குடியிருப்பதை,

***"................................... வைகலும்***
***வல்சி யின்மையின் வயின்வயின் மாறி***
***இல்லெலி மடிந்த தொல்சுவர் வரைப்பிற்***
***பாஅ லின்மையிற் பல்பாடு சுவைத்து***
***முலைக்கோண் மறந்த புதல்வனொடு***
***மனைத்தொலைந் திருந்தவென் வாணுதற் படர்ந்தே"*** ***(புறம்.211: 17-22)***

எனும் பாடலில், நாள்தோறும் உணவு இல்லாமையால் வீட்டின் ஒவ்வோர் இடத்திலும் மாறிமாறித் தோண்டி இல்லெலிகள் மடிந்திருக்கும் பழைய சுவர்களை உடைய வீட்டில் பால் இல்லாமையால் பலபடியாகச் சுவைத்து மார்பின்கண் உண்ணுதலை வெறுத்த பிள்ளையோடு அவ்வீட்டில் வறுமையுற்றிருக்கும் ஒளி பொருந்திய நெற்றியை உடைய என் மனைவியை நினைந்து நான் செல்வேன் என்று அமைந்துள்ளது. இதில் 'வைகலும் வல்சியின்மையின்' என்பதனால் புலவர்கள், பாணர் மற்றும் விளிம்பு நிலை மக்கள் 'தினந்தோறும் உண்ண உணவில்லாமல்' இருந்தமையை இங்கு பதிவு செய்துள்ளனர்.

பசி வந்தால் அது ஒருவனிடம் உள்ள அனைத்து நற்குணங்களையும் அழித்து விடும். அத்தகைய கொடுமையான பசியும், வறுமையும் புலவர்களின் வாழ்க்கையை அதிகம் பாதிப்பிற்குட்படுத்திய நிலையிலும் தன்னிலை குலையாமல், தன்மானத்தோடும் சமூக உணர்வுடனும் வாழ்ந்துள்ளனர். ஊன்பொதி பசுங்குடையார் பாடிய பாடல் பசியின் உச்சநிலையை,

***"வள்ளியோர்க் காணா துய்திற னுள்ளி***
***நாரும் போழுஞ் செய்தூண் பெறாஅது***
***பசிதினத் திரங்கிய விரும்பே ரொக்கற்***
***கார்பதங் கண்ணென மாதிரந் துழைஇ***
***வேருழந் துலறி மருங்குசெத் தொழியவந்து"*** *(புறம்.370: 1-5)*

எனும் பாடலில், உணவு கிடைக்கப் பெறாமையின் காரணமாக மரங்களின் நாரினையும், பனங்குருத்தையும் உணவாகச் சுவைத்து உண்டு, ஒரு தன்மைப்பட பசித் தின்னலால் வருத்தமுற்ற கரிந்த பெரிய சுற்றத்தார்க்கு உண்ணும் உணவில் நாட்டம் இருப்பது அறிந்து, நாற்றிசையும் தேடி, மேனியில் வியர்வை ஒழுக அலைந்து, புலந்து வயிறு ஒட்டி வாட வந்தெனன், தன்னை இரக்கும் வள்ளல் தன்மையுடைய பெருமக்களைக் காணப் பெறாமையால் என்று சங்கப் புலவர்களின் பசியினாலான கொடுமையான வாழ்வினைத் தன் நிலையிலிருந்து பிரதிபளித்துள்ளார். இப்பதிவுகளை நோக்கும் பொழுது சங்ககாலத்தில் உண்ண உணவே இல்லாது வறுமையின் பிடியில் ஒரு சமூகம் வாழ்ந்தது என்பதும், அச்சமூகமானது பிறரிடம் வேண்டியே தன் உயிரை வளர்த்த நிலையையும் உணரமுடியும். பின்வரும் பாடல் அடிகளில் புலவர்கள் தம்மைப் பாதுகாப்போரைக் காணாமையால் பொலிவிழந்த கண்களை உடையவராய் ஆரவாரிக்கும் தன் சுற்றத்துடன் செயலற்றுப் போயினர் என்பதை,

***"புல்லென் கண்ணர் புரவலர்க் காணாது***
***கல்லென் சுற்றமொடு கையழிந்து புலவர்***
***வாடிய பசிய ராகிப்பிறர்***
***நாடுபடு செலவின ராயின ரினியே"*** *(புறம்.240: 11-14)*

எனும் அடிகளால் உய்த்துணர முடிகிறது. மேலும், தம் உடல் வருத்திய பசியை உடையவராய் பிறநாடு தேடிச் செல்லும் இயல்பினராகவும் இருந்துள்ளனர் என்பதைத் தம் பாடல்களில் பதிவு செய்யுள்ளனர். இங்கு புலவர்களின் ஏழ்மை வாழ்க்கையும், தம் வாழ்வு இரவலர்களை நம்பியிருந்ததையும் பசியின் கொடுமையினால் தம்மைப் பாதுகாப்பவரைத் தேடியலையும் வாழ்வினை மேற்கொண்டதனையும் வறுமையின் உச்சிநிலையினையும் காணமுடிகிறது. மேலும், அப்புலவர்கள் உடுத்தும் ஆடையைப் பற்றி,

*"................................ என் அரைத்*
*தொன்றுபடு துளையொடு பெருவிழை போகி*
*நைந்துகரை பறைந்தவென் னுடையு"* *(புறம்.376: 8-10)*

எனது இடையிலே இருந்த ஆடை பழமையுற்றுத் துளைகளுடனே பருத்த இழையுள் கெட்டு நைந்து, கரை கிழிந்து கிடந்தது என்று வறுமையின் கொடிய நிலையினை விளக்கியுள்ளார். சங்கப்புலவர்கள் அன்றாடத் தம் வாழ்வியலுக்குத் தேவையான உணவு, உடை கிடைக்கப் பெறாமல் பிறரைச் சார்ந்து அவர்களைத் தேடி அலையும் வறுமை வாழ்வினை மேற்கொண்டதை இதன் வழி அறியமுடிகின்றது.

### புலவர்களின் வறுமை வாழ்விலும் அன்பு

புலவர்கள் வறுமையுற்று வாழ்ந்த நிலையிலும் அன்பிலிருந்து ஒருபோதும் மாறவில்லை. குடும்பம் என்ற நிலையில் மனைவி, குழந்தைகள், தாய் என அனைவருடனும் அன்புடன் வாழ்ந்த நிலையினைக் காணமுடிகின்றது. அக இலக்கியங்களைப் போலவே புலவர் சார்ந்த வாழ்வியலிலும் தந்தை பற்றிய குறிப்புகளைப் பாடல்களில் பதிவுசெய்யவில்லை. சங்கப் புறப்பாடல் ஒன்றில், குற்றமற்ற கற்பினை உடையவளும் என்னை விரும்புகின்றவளும் ஆகிய என் மனைவி சிறிதாவது உயிர் உடையவளாக இருப்பின் என்னை நினையாமல் இருக்கமாட்டாள். அதனால் அறமில்லாத கூற்றுவன் திறப்பாடு இல்லாமல் உயிர்கொள்ளும் முயற்சி மேற்கொள்ள என் கணவன் இறந்துபட்டானோ என எண்ணுவாள். எண்ணி என் உயிரும் போகட்டும் என்று கூறித் தம் துன்பம் சாற்றுகின்ற வலிமையற்றவளாய் பலவற்றையும் பல தன்மையில் வெறுத்துக் கூறுகிறாள். இதை,

*"செயிர்தீர் கொள்கை யெம்வெங் காதலி*
*உயிர்சிறி துடைய ளாயி னெம்வயின்*
*உள்ளா திருத்தலோ வரிதே யதனால்*
*அறனில் கூற்றத் திறனின்று துணியப்*
*பிறனா யினன்கொ லறீஇயரென் னுயிரென*
*நுவல்வுறு சிறுமையள்"* *(புறம்.210: 5-10)*

எனும் அடிகளில் வறுமையின் காரணமாகப் பசியினால் தம் உயிர் போகும் நிலையில், புலவர் மற்றும் அவரது மனைவியரின் அன்பு வாழ்க்கை சிறப்பாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. மேலும்,

***"ஒன்றன் கூறு ஆடை உடுப்பவரே ஆயினும்***
***ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை"*** ***(கலி.17: 10-11)***

எனும் அடிகளும் சங்க காலத்தில் வறுமை நிலையிலும் தலைமக்கள் அன்புடைய வாழ்வினை மேற்கொண்டதை எடுத்தியம்புகின்றது. மேலும்,

***"வாழு நாளோ டியாண்டுபல வுண்மையின்***
..............................................
***துவ்வா ளாகிய வென்வெய் போளும்"*** ***(புறம்.159: 1-14)***

எனும் இப்பாடலானது புலவர்களின் வறுமையின் காரணமாக வாழும் நிலையை, என் தாய், தனக்குச் சென்ற ஆண்டுகள் பலவாதலின் எனதுயிர் இன்னும் போகாமல் இருக்கின்றதே என்று சொல்லி வாழும் நாளோடு பலவாக வெறுத்துப் பேசுகிறாள். தான் கையில் பிடித்த கோல்தடியைக் காலாகக் கொண்டு மெதுவாக சிறுக அடியிட்டு நடக்கின்றாள். நூலை விடுத்தாற் போன்ற நரைத்த மயிரினை உடையவள்; கண் பார்வை மறைந்து முற்றத்தே இருந்து புறப்பட மாட்டாத மூப்புடையவள். என் மனைவி பசப்புற்ற உடம்புடன் நினைவு வருத்த வருந்தி, இடையில் வைத்த பல சிறு பிள்ளைகள் பிசைந்து மெல்லுதலால் (பாலின்மையால்) உலர்ந்த முலையினை உடையவள். உண்பதற்கு உணவின்றி மிகவும் வருந்திக் குப்பையில் விளைந்த கீரையின் முற்றாத இளந்தளிரைப் பறித்து வந்து, உப்பின்றி நீரை உலையாக ஏற்றிக் காய்ச்சி, மோரின்றிச் சோறாக்கிய உணவை மறந்து, பசிய இலையைத் தின்று வாழ்கின்றாள். அழுக்கேறிய கிழிந்த உடையினை உடையவள் என்று வெளிப்படுத்துகின்றது.

சங்ககாலத்தில் விளிம்புநிலை மக்களாகிய புலவர்கள் சிலர் தாங்கள் வாழ்வதற்குத் தேவையான உணவு, உடை, உறையுள் இன்றி புரவலரிடம் வேண்டி நிற்கும் நிலை பெருமளவில் இருந்தது. புலவர்களின் வாழ்வியலில் காணப்பட்ட வறுமை என்பது தன்னை மட்டுமல்லாது தன்னைச் சார்ந்த மக்களுக்கும் அழிவினை ஏற்படுத்தியது. இருப்பினும் அவர்களின் வாழ்வில் ஒருவர் மற்றவரின் நிலையினைக் கண்டு வருந்தும் அன்பினைக் காணமுடிகின்றது. மேலும்,

***"ஆடுநனி மறந்த கோடுய ரடுப்பின்***
.........................................
.........................................
***மனையோள் எவ்வம்"*** ***(புறம்.164: 1-7)***

எனும் பாடலில், உணவு சமைத்தலை மிகவும் மறந்த உயர்ந்து ஓங்கிய அடுப்பில் காளான் பூத்துள்ளது. உடல் மெலியும் பசியால் வருந்திப் பாலின்மையால் தோலாந் தன்மையுடையனே இரங்கித் துளை தூர்ந்த பொல்லாத வறிய முலையைச் சுவைக்குந்தோறும் பால் காணாமல் குழந்தை அழுகின்றது. அக்குழந்தையின் முகத்தைப் பார்த்து, நீர் நிரம்பிய கண்ணோடு என் மனைவி வருந்துவாள் என்று தன் வறுமை வாழ்வினைப் பதிவு செய்துள்ளார். குழந்தைக்குப் பாலை அளிக்கும் தன்மையில் இருந்து (இரத்தத்தில் இருந்து பாலை அளிக்கும்) பாலின்மையால் தன்நிலை தவறியதனைக் கருத்தில் கொண்டு 'பொல்லா வறுமுலை' என்று குறிப்பிட்டுள்ளார். இதன்மூலம் உடலில் உயிர் வாழ்வதற்கு இரத்தம் கூட இல்லாத வறுமையின் விளிம்பில் வாழ்ந்த சங்கப் புலவர்களின் நிலையை உணர முடிகிறது. மேலும், இத்தகைய வறுமை வாழ்விலும் அன்பு நீங்காமல் நிலைப் பெற்று இருந்தது என்பதை இதன் வாயிலாக அறியமுடிகிறது.

## புலவர்களின் வறுமையைப் போக்குதல் (வறுமை நீங்க இரவல் வாழ்வு)

புலவர்களின் வறுமைத் துயரானது தம் வாழ்வில் நீங்கா இடம்பிடித்தது. இத்தகைய வறுமைத் துயரினைப் போக்குதல் வேண்டிப் புரவலர்களின் வாயிலை நாடிச் சென்றனர். அவர்களால் மட்டுமே தம் வறுமையினைக் களைய இயலும் என்பதனை,

***"ஒருநாட் செல்லல மிருநாட் செல்லலம்***
***பலநாட் பயின்று பலரொடு செல்லினும்***
***தலைநாட் போன்ற விருப்பினன் மாதோ"*** ***(புறம்.101: 1-3)***

ஒருநாள் சென்றாலும், பல நாட்கள் சென்றாலும், தன் சுற்றத்தோடு சென்றாலும் முதல் நாளினைப் போலவே விருப்பமுடன் உதவும் பண்புடையவன் என்று அதியமானைப் பாராட்டுகின்றார் எதற்காக என்பதை,

***"கோட்டிடை வைத்த கவளம் போலக்***
***கையகத் ததுவது பொய்யா காதே***
***அருந்தே மாந்த நெஞ்சம்***
***வருந்த வேண்டா வாழ்கவன் றாளே"*** ***(புறம்.101: 7-10)***

இப்பாடலில், யானையின் கொம்புகளின் இடையில் வைக்கப்பட்ட கவளம் போல கையகத்திருப்பது, அது தப்பாமல் கிடைக்கும். உண்ண ஆசைப்பட்ட நெஞ்சே நீ பரிசிலுக்கு வருந்த வேண்டாம் என்பது பரிசிலரின் வறுமையின் கோரத்தன்மையை வெளிப்படையாக்குகிறது. மன்னனது பரிசிலால் தான் உண்ணமுடியும் என்ற நிலையில் அது பொய்க்காது, உணவு கிடைக்கும் என்று தன் நெஞ்சிற்குக் கூறித் தேற்றுகின்றாள் புலவனின் மனைவியொருத்தி.

உறுபசி, ஓவாப்பிணி, செறுபகை போன்ற பிணிகளும், இடையூறுகளும் அண்டாது மன்னர்கள் தங்கள் நாட்டையும், மக்களையும் காத்து வந்துள்ளனர். வெவ்வேறு நாடுகளில் இருந்து பாடி வந்து இரந்துண்ணும் தொழிலை உடைய புலவர்களின் வாழ்க்கைச் செழிப்படையவும் மன்னர்கள் பெரிதும் துணைபுரிந்துள்ளனர். இதனை,

***"இன்று செலினுந் தருமே சிறுவரை***

***..........................................***

***யாம்வேண்டி யாங்கெம் வறுங்கல நிறைப்போன்"*** *(புறம்.171: 1-5)*

இன்று சென்றாலும் தருவேன்; சிறிது நாள் கழித்துச் சென்றாலும் தருவான். பின்னும் முன்பு தந்தேன் என்று பயின்று எண்ணாது பழக்கத்தால் நாள்தோறும் சென்றாலும் பொய்யானாகி யாம் வேண்டியவாறே எம் வறிய உண்கலத்தை நிரப்புவேன் என்று பாடியுள்ளார் காரிக்கண்ணனார். இப்பாடல் விளிம்புநிலையில் வாழும் புலவர்கள் இரவலரைத் தேடி நாளும் செல்லும் வறுமை வாழ்வினை வாழ்ந்துள்ளனர் என்ற பதிவையும், அத்தகு பசியை, வறுமையை இரவலர்களாகிய மன்னர்களும், வேளிர்களும் போக்கினர் என்பதையும் புலப்படுத்துகிறது. மேலும்,

***"சேய்நாட்டுச் செல்கிணைஞனை***
***நீபுரவலை யெமக்கென்ன***
***மலைபயந்த மணியுங் கடறுபயந்த பொன்னும்***
***கடல்பயந்த கதிர்முத்தமும்***
***வேறுபட்ட வுடையஞ் சேறுபட்ட தசும்பும்***
***கனவிற் கண்டாங்கு வருந்தாது நிற்ப***
***நனவி னல்கியோ னசைசால் தோன்றல்"*** *(புறம்.377: 14-20)*

இப்பாடலில் இரவலரை நாடி, சேய்மையிலுள்ள நாடுகட்குச் செல்லும் கிளைஞனாகிய நீ, எம்மால் புரக்கப்படுதலை உடையை என்று சொல்லி, மலையிடைப் பெற்ற மணிகளையும், காட்டிற் பெறப்பட்ட பொன்னையும் கடலிடத்தே பெறப்பட்ட ஒளி படைத்த முத்துக்களையும் வெவ்வேறு வகையான உடைகளையும், கட்டுடல்களையும் யான் இனி வறுமைத் துன்பத்தில் வருந்தாமல் நல்ல நிலையிலே நிற்குமாறு, தகைசால் தோன்றல், கனவிற் கண்டாங்கு, நனவிற் கொள்ளுமாறு அன்பு நிறைந்த தோன்றலாகிய தலைவன் நல்கினான். இதன் மூலம் சங்ககாலத்தில் விளிம்புநிலையில் வறுமையாலும், பசித்துயராலும் வாழ்ந்த பாணர், புலவர் போன்ற பல்வேறு நிலை மனிதர்களுக்கு மன்னர்கள் வேண்டியதை வழங்கி பசிப்பிணி மற்றும் வறுமை போன்றவற்றால் ஏற்படும் பேரழிவுகளை மன்னர்கள் தங்களின் கொடையினால் தடுத்து மேலாண்மை செய்துள்ளனர் என்பது புலப்படுகிறது.

## புலவர்களின் வறுமை நீங்கியதால் மகிழ்ச்சி

சங்க காலத்தில் ஏற்பட்ட வறுமையால் பல்வேறு இனமக்கள் பாதிப்புக்குட்பட்டிருப்பினும் அக்காலத்திய இலக்கியத்தில் புலவர்கள், விறலியர்கள் போன்றோரின் நிலையே பெரும்பான்மையும் காணக்கிடக்கின்றது. பாடல்களை இயற்றியத் தன்மையால் அவர்களின் வாழ்வியலையும் தம்மைப் புரந்த புரவலர்களையும் மட்டுமே பதிவுசெய்துள்ளனர். தங்களது வாழ்வில் ஏற்பட்ட வறுமைகளைப் புரவலர்களாகிய வேந்தர்கள், வேளிர்கள், மன்னர்கள் போன்றோர் நீக்கினர். அவ்வாறு தம் வறுமை நீங்கியதால் ஏற்பட்ட நிகழ்ச்சியை,

***“எமக்கென வகுத்த வல்ல மிகப்பல***

**.........................................**

**.........................................**

***அரும்பட ரெவ்வ முழந்ததன் றலையே”*** ***(புறம்.378: 10-24)***

எனும் அடிகளில், எம்மைப் போலும் பரிசிலர்க்கு அளித்தற்காகச் செய்யப்பட்ட மிகப்பலவாகிய, மேன்மையான சிறப்பினை உடைய, பெறுதற்குரிய அணிகலன்களும் பிற பொருள்களாகிய செல்வத்தையும் எம்மால் தாங்கமாட்டாத அளவு வழங்கினான். வறுமையில் வருந்திய என் பெரிய சுற்றம் அக்கொடைப் பொருள்களைக் கண்டு தத்தம் கைக்கொண்டு, விரலிற் செலுத்தற்குரிய மோதிரம் முதலியவற்றைக் காதிலும், காதில் செலுத்தற்குரிய குழை முதலியவற்றை விரலிலும் செலுத்திக் கொண்டனர். அரைக்கு அமைந்தவற்றைக் கழுத்தில் அணிபவரும் ஆயினர். கழுத்தில் அமைந்தவற்றை இடையில் கட்டிக் கொள்பவரும் ஆயினர். மிக்க திறனுடைய இராமனுடன் காட்டிற்குச் சென்ற சீதையை, மிக்க வலிமை பெற்ற அரக்கன் இராவணன் கவர்ந்து சென்றபோது சீதை கழற்றி எறிய, நிலத்தே கிடந்த சிவந்த ஒளிவிடும் அணிகலன்களைக் கண்டெடுத்த சிவந்த முகத்தை உடைய மந்திகளாகிய பெரிய சுற்றம் அவ்வணிகளைத் தாம் அணிந்து விளங்கக் கண்டேன் சிரித்து மகிழ்ந்தாற்போல, பெரிய சுற்றத்தார்க்குத் தலைமைத் தாங்கி அவர் வறுமை களைதற்பொருட்டு பல அரிய நினைவுகளால் உண்டாகும் நோயின் வருத்தம் உற்றது போக நீங்காத அரிய மகிழ்ச்சியை நாங்களும் மிகவும் அடைந்தோம் என்று இரவலரின் வறுமையைப் போக்கிய தன்மையையும், தங்களது வறுமை தீர்ந்ததால் இரவலர்களின் மகிழ்வையும் இப்பாடல் வெளிப்படுத்துகின்றது.

## புலவரின் பகுத்துண்டு வாழும் மாண்பு

அறிவுத் தொழிலைத் திறம்படச் செய்து பரிசில் வாழ்க்கை வாழ்ந்த புலவர்கள் இரத்தலை இழித்தொழிலாகக் கருதினாரல்லர். மன்னர் வாழ்வினைக் காட்டிலும் புலவர் வாழ்வு எவ்விதத்திலும் குறைவுடையது அன்று என்று மன்னனிடமே எடுத்துக் கூறும்

புலவர் கோவூர்கிழார், ஊர் ஊராகச் சென்று நாவன்மையால் வள்ளல்களைப் பாடிப் பொருளைப் பெற்று சுற்றத்தைக் காத்துத் தமக்கென வைத்துக் கொள்ளாது பலருக்குக் கொடுத்து வாழும் புலவர் வாழ்க்கை யாருக்கும் தீங்கில்லாத வாழ்க்கையாகும். அவர்களின் வாழ்வு பெருஞ்செல்வம் படைத்த அரசர்களின் வாழ்வை ஒத்த செம்மாப்பு உடையது என்று புலவர் தொழிலின் பெருமையை மன்னனுக்கு எடுத்துரைக்கின்றார். இதை,

> ***"வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி***
>
> ……………………………………
>
> ***நும்மோர் ரன்ன செம்மலும் முடைத்தே"*** *(புறம்.47: 1-10)*

எனும் பாடலடிகளால் அறியலாம். இவ்வாறு செம்மாந்த புலமை நலம் பெற்றிருந்ததால் உடல் உழைப்பில் நாட்டம் இல்லாதவர்களாக இருந்தாலும், அதனால் தமது காலத்தையும், தமக்கிருந்த பிறவி ஆற்றலையும் விரயமாக்க விரும்பாதவர்களாய், மன்னரிடமிருந்து பெற்ற பெருவளத்தைப் பலரோடு பகிர்ந்து கொள்பவர்களாய்த் தம் வாழ்வை அமைத்ததோடு, தாழ்வு மனப்பான்மை ஏதுமின்றித் தலைகுனிவிற்கு இடமின்றித் தமக்கெனத் தெரிந்தெடுத்துக் கொண்ட தொழிலைச் செம்மையாகச் செய்து முடித்தனர்.

வறுமையின் கொடுமையை நன்குணர்ந்தவர்கள் புலவர்கள். தான் இரந்து பெற்றப் பொருளை வறுமையில் வாடும் தன் சுற்றத்தாருக்கும், பிறருக்கும் பகிர்ந்து கொடுப்பதில் புலவர்கள் வள்ளல்களுக்கு நிகரானவர்கள்.

"சங்க காலத்தை வீரயுகம் என்று கூறுவது போலக் 'கொடையுகம்' என்றும் கூறலாம். சங்ககால மன்னர்கள் மட்டுமின்றி மறவர்கள், புலவர்கள் போன்றோரும் வாரி வழங்குவதில் சிறந்து விளங்கினர்"[6] என்ற ப. பழனியம்மாளின் கூற்று மேற்கூறியவற்றை உறுதிப்படுத்துகின்றது. இதனை விளக்கும் விதமாக, பெருஞ்சித்திரனார் எனும் புலவர்க்குக் குமணன் அளித்த பரிசிலைப் பெற்ற போது,

> ***"நின்னயந் துறைநர்க்கு நீநயந் துறைநர்க்கும்***
> ***பன்மாண் கற்பினின் கிளைமுத லோர்க்கும்***
> ***கடும்பின் கடும்பசி தீர யாழநின்***
> ***நெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கும்***
> ***இன்னோர்க் கென்னா தென்னொடுஞ் சூழாது***
> ***வல்லாங்கு வாழ்து மென்னாது நீயும்***
> ***எல்லோர்க்குங் கொடுமதி மனைகிழ வோயே"*** *(புறம்.163: 1-7)*

என்று, உன்னை அன்பு செய்து வாழும் மகளிர்க்கும், நீ அன்பு செய்து ஒழுகும் மகளிர்க்கும் பல குணங்களும் மாட்சிமைப்பட்ட கற்பினையுடைய நின் சுற்றத்து மூத்த மகளிர்க்கும் அளிப்பாயாக, நம் சுற்றத்தின் பசி நீங்க நினக்கு நெடுநாள் கடன் தந்து உதவியோர்க்கும்

மற்றும் இன்ன தன்மையோர் என்று கருதாதும் என்னோடு கேளாதும் வளமுடன் வாழலாம் என்று பாதுகாத்து வைத்துக் கொள்ள நினையாது நீயும் எல்லோர்க்கும் வழங்கி மகிழ்வாயாக என்று மனைவியிடம் கூறினார்.

'வல்லாங்கு வாழ்து மெண்ணாது நீயும், குடும்பின் கடும்பசி தீர யாழநின், எல்லோர்க்குங் கொடுமதி' எனும், இவ்வடிகளில் தனக்கென்று வைத்துக் கொள்ளாது, கடுமையானப் பசியைப் போக்க எல்லோர்க்கும் வழங்குமாறு கூறியுள்ளார். "உன்னை எவரெல்லாம் விரும்புகிறார்களோ வறுமைப்பட்ட காலத்தில் நமக்கு யாரெல்லாம் உதவி செய்தார்களோ அனைவருக்கும் கொடு. நாமாக வைத்து வாழ்வோம் என்று எண்ணாமல் அனைவருக்கும் கொடு' இப்படிப் பேசுகிற பெருந்தன்மை புலவர்கள் பலரிடத்தும் இருந்த பண்புதான். துயரப்பட்டவருக்குத் தான் பிறர் துயரம் தெரியும் என்ற பொது உண்மையும் நாம் இங்கு புரிந்து கொள்ள முடியும்"[7] என்று ஞானி தம்முடைய நூலில் குறிப்பிடுகிறார். இதில் சங்கப் புலவர்களின் வாழ்வின் ஏழ்மை நிலையையும், அவர்களின் பகிர்ந்துண்டு வாழும் உயரிய வாழ்வியல் மனப்பான்மையையும் உணர்த்துகிறது. மேலும், வறுமையில் வாழும் மக்களின் வறுமைப்பசிப் போக்கும் வகையில் புலவர்கள் மேற்கொண்ட மேலாண்மையையும் வெளிப்படையாக்குகின்றது.

### மன்னனை இறையெனப் போற்றும் பண்பு

சங்கப் புலவர்கள் மன்னனை இறைவனாகப் போற்றியுள்ளனர். அவர்கள் இறந்துபட்டால் தானும் தங்கள் சுற்றத்தினரும் வறுமையில் உழல நேரிடும் என்று வருந்தியுள்ளனர். மேலும் புலவர்களின் வாழ்க்கை மன்னனைச் சார்ந்ததாக உள்ளது. வறுமையில் வாடிய பெருஞ்சித்திரனார் எனும் புலவர் குறுநில மன்னனாகிய வெளிமானிடம் பரிசில் கேட்கச் சென்றபோது அவன் இறந்ததைக் கேள்வியுற்று, தான் நிலைகுலைந்து அரற்றுவதை,

> ***"வெந்திறல் கூற்றம் பெரும்பேது உறுப்ப***
> ***எந்தை ஆகுதல் அதற்படல் அறியேன்***
> ***அந்தோ அளியேன் வந்தனென் மன்ற***
> ***என்னா குவர்கொல் என்துன்னி யோரே***
> ***மாரி இரவின் மரங்கவிழ் பொழுதின்"*** ***(புறம்.238: 10-14)***

எனும் பாடலில், என் இறைவன் இறந்தது அறியாது, அந்தோ இரக்கத் தக்கவன் நான் வந்தேனே, என்ன ஆவார்களோ என் சுற்றத்தார், மழை பெய்யும் இரவில் மரக்கலம் கவிழ்ந்த போது கண்ணில்லாத ஊமையன் கடலில் விழுந்து அழுந்தியதைப் போல எல்லை அளந்தறிப்படாத தாங்குதற்கரிய அலைகள் வீசுகின்ற நீரில் மூழ்கி இறந்துபடுதலே

நன்று; நாம் செய்யத்தக்கதும் அதுவே என்று வருந்திப் பாடியுள்ளார். புலவர்களின் வாழ்க்கை மன்னர்களைச் சார்ந்தே இருந்துள்ளது என்பதை மேற்கண்ட பாடல் உணர்த்துகின்றது. மன்னர்கள் இறந்த போது, தங்கள் சுற்றத்தாரின் நிலையையும் எண்ணி கலங்கிய நிலை அவர்தம் சமூக நலனைப் பிரதிபலிப்பதாக உள்ளது.

## சங்கப் புலவரின் உயரிய நிலை

சங்கப் புலவர் அக்காலத்தில் நிகழ்ந்த சமூக நிகழ்வுகளைத் தம் பாடல்களில் ஒளிவு மறைவின்றி பதிவுசெய்துள்ளார்.

"புலவர் பெருமக்கள் அன்றைச் சமூகத்தின் பண்புகளை உயர்வு நவிற்சியின்றி, அளவுக்குட்பட்ட எளிய கற்பனையுடன் விளங்கும் நெறியினை மேற்கொண்டனர். இதன் விளைவாக அவர்தம் செய்யுட்கள் வரலாற்றுச் சான்றுகளாகக் கொள்ளத் தக்க பெருமை பெறுகின்றது."[8] இவ்வாறு சிறப்புத் தன்மை மிக்க நூலறிவோடு உலகியலறிவும், அரசியலறிவும் கற்றுத் திகழும் புலவர்களைப் பகைத்தால் அது பெருந்தீங்காய் முடியும் என்பதை,

***"வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க***
***சொல்லேர் உழவர் பகை"*** ***(குறள். 872)***

என்று வள்ளுவப் பெருந்தகை உணர்த்துகின்றார். பின்வரும் பாடலடிகளும்,

***"இருபாற் பெயரிய வுருகெழு மூதூர்க்***
……………………………………
***இகழ்ந்ததன் பயனே"*** ***(புறம்.202: 6-13)***

சிற்றரையம், பேரரையம் என்று இருபெயர்களைப் பெற்றது அரையம் என்னும் பழைய ஊர். பல கோடியாகப் பெருகிய பொன்னை உங்களுக்கு வழங்கிய அந்த பழைய ஊரின் கேட்டையும் நீ அறிவாயாக உன்னுடைய முயற்சியாலும், உன் தந்தை வழங்கிய உரிமையாலும் நிறைந்த செல்வம் பெற்ற புலிகடிமாலே 'அரையம்' போலும் அறிவுடைய உன் குடியினன் ஒருவன் புகழ்மிக்க செய்யுட்களைப் பாடிய 'கழாஅத்தலையர்' எனும் புலவரை அவமதித்தமையேயாகும். இப்பாடலில் புலவரின் சொற்களைக் கேளாது அவர்களை இகழ்ந்தால் நாட்டிற்கு இழிவு ஏற்படும் என்பது உணர்த்தப்பட்டுள்ளது.

"புலவர்கள் பரிசில் பெற்று வாழும் வாழ்வினராயினும் பிறர்க்கு தீது செய்யும் இயல்பினரல்லர். நன்னர் நாண அண்ணாந்து செல்லும் ஆண்மையுடையர். அவ்விடத்தும் எவ்விடத்தும் இனிது ஒழுகும் இனிமைப்பண்பினர். மண்ணாளும் செல்வமெய்திய மன்னவரொப்ப செம்மலும் உடையர் என கோவூர்கிழார் கூறுவது இந்நாளில் புலவர் பெருமக்களை இகழ்ந்தொழுகும், பேதைமாக்கட்குச் சீர்த்த அறிவுரையாகும்"[9] என்று கோவூர்கிழார்

பாடலுக்கு ஔவையார் தரும் விளக்கமாக அமையும் இவ்வரிகள் புலவரின் மாண்பினை உணர்த்துகின்றது. இதிலிருந்து புலவர்களின் உயரிய நிலையும், அவர்களை இகழும் பொழுது, அவர்களின் கோபத்தால் நாடே அழிவை மேற்கொள்ளும் என்பது புலப்படுகிறது.

சங்ககாலத்தில் அரசர்க்கும், புலவர்க்கும் இருந்த உறவு பொதுவாகப் புரவலர்க்கும், இரவலர்க்கும் இருக்கும் ஏற்றத்தாழ்வான உறவு அன்று. மன்னர்களை அளவு கடந்து புகழ்ந்து, பரிசில்களை அள்ளிச் செல்லும் நோக்குடன் மட்டும் புலவர்கள் செயல்படவில்லை. தன் தகுதி அறிந்து அதற்கேற்ப பரிசில் பெறுவதையே அவர்கள் விரும்பினர். இதனை,

"சங்கப் புலவர்கள் பெருமித நோக்குடையவர்கள், அவர்கள் 'எத்திசைச் செல்லினும் அத்திசைச் சோறே' என்ற நெஞ்சழுத்தத்தால் தாம் கற்ற கல்வியைப் பெருஞ்செல்வமாக மதித்து ஒழுகுபவர்கள். மன்னர்களைப் பார்த்து 'அண்ணாந்து ஏந்திய செருக்குடைய உம்மைப் போன்ற பெருமையும் எனக்குண்டு' எனச் சரிசமமாகப் பேசுபவர்கள்"[10] என்று மன்னர்களுக்கு சரிசமமாக புலவர்கள் தம்மை எண்ணிய பாங்கினை உணரமுடிகிறது. சங்க மன்னர்களும் புலவரின் போற்றுதல்களுக்கு மயங்கினர். மேலும், புலவர்களின் புலமைத்துவத்தை மன்னர்கள் வெகுவாக அறிந்திருந்த காரணத்தினாலேயே, அவர்களை அமைச்சர்களாக்கினர் என்பது தெளிவாகின்றது.

அதியமான் நெடுமான் அஞ்சியிடம் பரிசில் பெறச் சென்ற பெருஞ்சித்திரனாரை, அம்மன்னன் நேரில் கண்டு பேசாது அனுப்பி வைத்த பரிசிலை ஏற்காது, 'நான் ஊதியம் மட்டும் கருதும் பரிசிலன் அல்லேன்' என்று தன் நிலையைத் தெளிவுப்படுத்துகின்றார். இதை,

***"குன்றும் மலையும் பலபின் ஒழிய***
***.........................................***
***துணையள வறிந்து நல்கினர் விடினே"*** ***(புறம்.208: 1-9)***

எனும் அடிகளில் பரிசில் வேண்டுவோரின் கல்வி முதலிய தகுதியின் அளவறிந்து விருப்பத்தோடு தினை அளவாவது கொடுத்தல் நல்லது என்ற உயரிய கொள்கையினைப் புலவர்கள் கொண்டு வாழ்ந்துள்ளனர் என்பதை இப்பாடல் நமக்கு உணர்த்துகிறது.

தன் சுற்றத்தாரின் பசிக் கொடுமையைப் பொறாதப் புலவர், மன்னனிடம் சென்று, என் சுற்றத்தின் வறுமையோ பெரிது, ஆதலால் நீ இப்போதே பரிசில் நல்க வேண்டும் என்று உரிமையுடன் வேண்டினார். இதை,

***"............ என் கடும்பின திடும்பை***
***இன்னே விடுமதி பரிசில்"*** ***(புறம்.169: 7-8)***

*"நினக்கு கொத்தது நீநாடி*
*நல்கினை விடுமதி பரிசில்"* *(புறம்.136: 23-24)*

எனும் அடிகளின் மூலம் உணரமுடிகின்றது. இதில் சங்ககாலப் புலவர்கள் பரிசில் மட்டுமே வாழ்க்கை என எண்ணாது தமது புலமையின் தன்மை அறிந்து பரிசில் வழங்க வேண்டும் என்பதைத் தெளிவுப்படுத்தினார்கள். இதன்மூலம் புலவர்களின் உயர்ந்த மாண்பினை அறிய முடிகின்றது. மன்னன் தன் தகுதிக்கேற்ற பரிசில் நல்காத போது,

*"புலிபார்த் தொற்றிய களிற்றிரை பிழைப்பின்*
*.....................................................*
*எழுமதி நெஞ்சே"* *(புறம்.237: 16-20)*

புலிகளிற்றை வீழ்த்த முயன்று அது தப்பிவிட்டால் எலியை நோக்கிப் பாயாது அதனால் நெஞ்சமே கலங்காதே என்று தமக்குத் தாமே ஆறுதல் கூறிக்கொண்டு அப்பரிசினை ஏற்க மறுத்துவிடுகின்றார். மேலும், குமணன் தமக்களித்த யானை ஒன்றை இளவெளிமானின் காவல் மரத்தில் கட்டிவிட்டு,

*"இரவலர் புரவலை நீயும் அல்லை*
*.......................................*
*கடுமான் தோன்றல் செல்வல் யானே"* *(புறம்.162: 1-7)*

என்று அவனிடம் சொல்லிச் செல்கிறார். புலவர்கள் தம் தகுதியை அறிந்து வைத்திருந்ததோடு, தன் தகுதிகேற்ற ஊதியம் பெறுவதில் தன்மானம் மிக்கவர்களாகவும் வாழ்ந்துள்ளனர் என்பதற்கு இப்பாடல் சிறந்ததொருச் சான்றாகும்.

## மன்னன் புலவன் நட்பு

சங்க மன்னர்கள் புலவர்களிடமும் புலவர்கள் மன்னரிடமும் ஆழ்ந்த நட்பு கொண்டிருந்தனர். கோப்பெருஞ்சோழன் - பிசிராந்தையார், அதியமான் - ஔவையார், வள்ளல் பாரி - கபிலர் போன்றோர் குறிப்பிடத்தக்கவர்கள். பிசிராந்தையார் - கோப்பெருஞ்சோழனின் நட்பினை,

*"இகழ்வில னினிய னியாத்த நண்பினன்*
*....................................................*
*இன்னே வருகுவ னொழிக்கவவற் கிடமே"* *(புறம்.216: 6-12)*

எனும் புறப்பாடலில், பிசிராந்தையார் என்னை என்றும் இகழாத இனிய குணத்தினன். நெருங்கிய நட்பினை உடையவன் புகழ் அழிய வரும் பொய்ம்மையை விரும்பாதவன். தன் பெயரைப் பிறர்க்குக் கூறும்பொழுது, என் பெயர் பேதமை கொண்ட சோழன் என்று என்

பெயரைத் தன்பெயரைக் கூறும் நெருங்கிய அன்புரிமை கொண்டவன். அவன் நான் துன்பப்படும் காலத்தே இங்கு வராமல் நில்லான். இப்பொழுது அவன் வருவான். அவனுக்கு ஓர் இடம் ஒதுக்கி வைப்பீராக என்று கோப்பெருஞ்சோழன் வடக்கிருத்தலின் போது கூறுவதை உணர்த்துகின்றது.

"வீரநிலைக்காலப் பாடல்கள் நட்பின் ஆழத்தையும் ஆங்காங்கே குறிப்பிடத் தவறவில்லை. வீரத்தலைவர்கள் மட்டற்ற தன்னம்பிக்கை உடையவர்கள் எனினும் பிறர்மாட்டுப் பழகும் முறையில் அவர்கள் நெஞ்சத்தோடு ஒட்டும் உறவும் கொள்வதைக் காண்கிறோம். அத்தகைய தலைவர்கள் கொள்ளும் அன்பு மிக நெருக்கமாகவும் நட்பிற்கு இலக்கணமாகவும் இருக்கின்றன"[11] என்ற கதிர்மகாதேவனின் விளக்கமானது சங்ககாலத்தில் மன்னர்கள் புலவர்கள் மீது நட்புறவு கொண்டுள்ளனர் என்பதை உறுதிப்படுத்தும் விதமாக அமைந்துள்ளது. மேலும்,

***"அழலவிர் வயங்கிழைப் பொழிந்த மேனி***
***நிழலினும் போகாநின் வெய்யோள் பயந்த***
***புகழ்சால் புதல்வன் பிறந்தபின் வாவென***
***என்னிவ ணொழித்த வண்பி லாள***
***எண்ணா திருக்குவை யல்லை***
***என்னிடம் யாதுமற் றிசைவெய் யோயே"*** *(புறம்.222: 1-6)*

என்ற பாடலில், தீயினால் விளங்கும் ஒளிமிக்க அணிகலன்களை அணிந்தவள். பொலிவுமிக்க மேனியை உடையவள். உன் நிழலினும் உன்னைவிட்டு ஒருபோதும் நீங்காதவள். உன்னால் விரும்பத்தக்க உன் மனைவி பெறும் புகழ்மிக்க உன் பிள்ளை பிறந்தபின் வா என்று கூறி என்னை வடக்கிருக்கும் இடத்திலிருந்து போக்கினாய் என்னோடு உறவில்லாதவனே, உன்னோடு இணைந்த என் நட்பை நீ கருதாது இருக்கமாட்டாய். புகழை விரும்புவோனே, நீ எனக்குக் குறித்த இடம் யாதெனக் கூறுவாயாக என்று அமையப்பட்டுள்ளது. வடக்கிருந்த நிலையிலும் தன் நண்பனாகிய பிசிராந்தையார் வருவார் என்ற கோப்பெருஞ்சோழன் கூற்று சங்க அரசர் புலவர்களின் நட்பினைத் தெளிவாக்குகின்றது.

சங்ககாலத்தில் புலவர் - மன்னர்களுக்கிடையே இருந்த ஆழ்ந்த நட்பினை, மன்னனே புலவனை நண்பன் என்று கூறுவதிலிருந்து உணர முடிகிறது. மேலும் நாடாலும் மன்னன் இரவல் மக்களாகிய புலவனை நண்பன் என்று கருதிய காலமாகச் சங்ககாலம் இருந்துள்ளது. தன் நண்பனுக்காக உயிரையேவிடும் அளவிற்குப் புலவர் மன்னனிடையே கொண்ட நட்பு உணர்வுப்பூர்வமாக அமைந்துள்ளதை இதன் மூலம் உணரமுடிகிறது.

## உறவுகளைக் காத்தல் - உணர்வுகளை மதித்தலில் புலவர்களின் பங்கு

சங்கப் புலவர் புறவாழ்வில் மன்னர்களுக்கு ஆலோசனைகள் வழங்குவதோடல்லாது அகவாழ்விலும் மன்னர்கள் தவறிழைக்கும் பொழுது அவர்களுக்கு உரிய அறிவுகளை வழங்கத் தவறியதில்லை. பேகன் தன் மனைவி கண்ணகியிடமிருந்து பிரிந்து அவளை ஒதுக்கி வைத்து விட்டுப் பரத்தை ஒருத்தியோடு வாழத் தொடங்கினான். கண்ணகியின் துயருணர்ந்த புலவர்கள் அவனைக் கடுமையாகச் சாடி அறிவுரை கூறத் தயங்கவில்லை. பேகனை,

*“உடாஅ போரா ஆகுதல் அறிந்தும்*
*படாஅம் மஞ்ஞைக்கு ஈத்த எம்கோ*
*கடாஅ யானைக் கலிமான் பேகன்*
*எத்துணை ஆயினும் ஈதல் நன்றென*
*மறுமை நோக்கின்றோ வன்றே*
*பிறர் வறுமை நோக்கின்றிவன் கைவண்மையே”* *(புறம்.141: 10-15)*

என்றும்,

*“வரையா மரபின் மாரி போலக்*
*கடாஅ யானைக் கழற்கால் பேகன்*
*கொடைமடம் படுதல் அல்லது*
*படைமடம் படான்பிறர் படைமயக் குறினே”* *(புறம்.142: 3-6)*

என்றும் பாராட்டிப் பேசும் பரணர் கண்ணகியின் துயரை,

*“முகைபுரை விரலில் கண்ணீர் துடையா*
*யாமவன் கிளைஞரே மல்லேம்; கேளினி*
*எம்போல் ஒருத்தி நலன்நயந் தென்றும்*
*வரூஉ மென்ப வயங்குபுகழ்ப் பேகன்*
*ஒல்லென வொலிக்குந் தேரொடு*
*முல்லை வேலி நல்லூ ரானே”* *(புறம்.144: 9-14)*

என்று ‘அவளுக்கு நீ அருள் செய்யாதிருப்பது கொடியது’ என்று கடிந்து கூறினார். இதே போல் மற்றொரு பாடலில் ‘நாங்கள் உன்னிடம் பசித்து வரவில்லை. சுற்றத்தாருக்குப் பரிசில் வேண்டியும் வரவில்லை. உன் மனைவியிடம் உடனே சென்று ‘சேர்ந்து அவளின் பிரிவுத் துயரைக் களைவாயாக இதுவே யாம் வேண்டும் பரிசில் என்று பாடியுள்ளார் (புறம்.145). அரிசில்கிழார் என்னும் புலவர் பெருமான், பேகன் அளித்த பரிசிலை மறுத்து, சினத்துடன்,

*“அன்ன வாகநின் னருங்கல வெறுக்கை*
*அவைபெறல் வேண்டேடே மடுப்போர்ப்பேக”* *(புறம்.146: 1-2)*

இப்பாடலில், எமக்கு பரிசில் தர விரும்பினால் உன்னால் ஒதுக்கப்பட்டுத் துயருற்றிருக்கும் உம் மனைவியை உடனே சென்று சேர வேண்டும் என்பதே நான் வேண்டும் பரிசில் என்றார். கண்ணகியின் துயர்கண்ட கபிலரோ,

> ***"நளியிரும் சிலம்பிற் சீறூ ராங்கண்***
> ***வாயில் தோன்றி வாழ்த்தி நின்று***
> ***நின்னும் நின்மலையும் பாட இன்னாது***
> ***இகுத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்***
> ***முலையக நனைப்ப விம்மிக்***
> ***குழலினை வதுபோ லழுதனள் பெரிதே"*** *(புறம்.143: 10-15)*

என்று ஓர் அவலக் காட்சியை ஓவியப்படுத்தி 'யார்கொல் அளியள் தானே' என்று மறைமுகமாக, அவன் உள்ளத்தில் தைக்குமாறு ஒரு வினாவை எழுப்புகிறார்.

"இரவலர்களைப் புரவலர்கள் மதித்துப் போற்றுவது கடமையாக மட்டும் கொள்ளவில்லை. பல புலவர்கள் தங்கள் தலைவர்களின் அகவாழ்விலும் நேரடியான தொடர்பு கொண்டனர்"[12] இவ்வாறு புறவாழ்க்கையில் மட்டுமல்லாது அக வாழ்க்கையிலும் புலவர்களின் பங்கு போற்றுதலுக்குரிய வகையில் அமைந்துள்ளதை மேற்கண்ட பாடல்களின் மூலம் அறிய முடிகிறது. பொருளுக்காக மட்டுமல்லாமல் தன்னைச் சுற்றியுள்ளவர்களின் நலனுக்காகவும் தம் புலமையைப் பயன்படுத்தியுள்ளனர். மன்னர்களின் கூடா ஒழுக்கத்தைக் கடிந்து கூறி விலக்கும் உரிமையும் கொண்டு விளங்கினர் என்பதைக் காணும் போது புலவர்கள் மீதும் மற்றும் அவர்கள் புலமை மீதும் மன்னர்கள் கொண்டிருந்த மதிப்பினை உணர முடிகின்றது.

## வறுமைப் பேரிடர் தீர்ப்பதில் புலவர்களின் பாங்கு

சங்ககாலம் செல்வமும் வளமும் பெற்றிருந்ததை இலக்கியப் பதிவுகளிலிருந்து அறியலாம். இருப்பினும் அக்கால மக்கள் அனைவரும் அனைத்து வளங்களையும் பெற்றிருந்தனர் என்பதை இறுதியாகக் கொள்ள முடியாது. தம் அன்றாட வாழ்விற்கும் வழியின்றி இரவல் மூலமே வாழ்வினை நடத்தும் மக்களும் வாழ்ந்துள்ளனார்.

தம்மால் கொடுக்க இயலும் பொருளை இயலுமென்று சொல்லிக் கொடுத்தலும், யாவர்க்கும் தம்மால் கொடுக்க இயலாதப் பொருளை இல்லை என்று சொல்லி மறுத்தலும் ஆகிய இரண்டும் தாளாண்மை உடையார்பால் உள்ளன. தனக்கு இயலாததனை இயலும் என்றாலும், இயலும் பொருளை இல்லையென்று மறுத்தலும் ஆகிய இரண்டும் விரைவில் இரப்போரை வாட்டமுற செய்வதோடு ஈவோரின் புகழைக் குறைக்கச் செய்யும் என்று இறை வழங்காத இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை ஆவூர்கிழார் அறிவுறுத்துகின்றார். இதை,

*"ஒல்லுவ தொல்லு மென்றலு யாவர்க்கும்*

*…………………………………………..*

*புகழ்குறை படூஉம் வாயில்………..."* *(புறம்.196: 1-7)*

எனும் அடிகளில் சங்கப் புலவர்கள் பரிசில் வழங்கும் மன்னனைப் பாராட்டுவதும், அவ்வாறு வழங்காத மன்னனை அவன் தன்மையில் நீங்கி வாழ அறிவுரை கூறுதலும் தன் கடமையாகக் கொண்டிருந்தனர் என்பதை உய்த்துணர முடிகிறது. அவ்வாறு வழங்கும் பரிசிலால் விளிம்புநிலை மக்களின் வறுமை நீங்கும் என்பதை,

*"வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி*
*அருள வல்லை யாகுமதி………..."* *(புறம்.27: 16-17)*

இப்பாடல் சங்ககாலப் புலவர்களின் பொதுமை நலத்தை எடுத்தியம்புவதாக உள்ளது. வறுமையால் வருந்தி வந்தோரின் வயிற்றின் பக்கங்களைக் கருதி அவர்களுக்கு அருளுடன் வழங்க வல்லவனாகுக என்று பாடியுள்ளார். வறுமை என்பது ஒரு கொடிய நோய், வறுமையின் பிடியில் சிக்கி வாடி வதங்கி காணப்படும் நிலை சங்ககாலத்தில் நிலவியுள்ளது. அவ்வாறு வறுமையில் உள்ளவரின் வயிற்றின் பக்கத்தைக் கருதி அவர்களின் பசியைப்போக்கி அதனால் ஏற்படும் பேரழிவைத் தடுக்க வேண்டும்படி மன்னனுக்குப் புலவர் அறிவுரை வழங்கியுள்ளார்.

"தனி உடைமை, அரசு அதிகாரம் என்ற போக்குகளுக்கு எதிராகப் புலவர்கள், மக்கள் சார்பில் சமூக அறம் பற்றி உணர்வு கொண்டிருந்தனர்"[13] சங்கப் புலவர்கள் இரவல் வாழ்வினை வாழ்ந்த போதிலும் விளிம்புநிலையில் வாழும் மக்களின் வறுமையைப் போக்க பல்வேறு வகைகளில் மன்னர்களுக்கு அறிவுரைகள் வழங்கினர்.

சேரமான் பாமுளூர் எறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னியை ஊன்பொதி பசுங்குடையர்,

*"இன்னுந் தம்மென வெம்மனோ நிரப்பின்*

*……………………………………………*

*……………………………………………*

*பூண்கட னெந்தைநீ யிரவலர் புரவே"* *(புறம்.203: 4-12)*

என்ற பாடலில், மன்னன் ஈந்தது கழிந்த நிலையில் இன்னும் எமக்கு பரிசில் தருக என்று எம்மை ஒத்தவர்கள் இரந்தால் அதுதான் முன்பு பெற்றிருக்கிறீர்களே என்று உம்மை ஒத்தவர் மறுத்தல் இன்னாதது. நீ மேலும் கேட்பாயாக, இயற்றப்பட்ட தேரை உடைய அண்ணலே, தம் இயலாமையைத் தீர்த்துக் கொள்வதற்காகப் பொருளைத் தேடி அடைய முடியாத வறுமையாளரைவிட, அவரால் பரிசிலுக்காக நினைந்து எய்தப்பெறும் கொடையாளிகள்

அவ்விரப்போரால் விரும்பப்படாத தன்மையை அடைபவன் அல்லன். நீ பிறர்க்குக் கொடுக்க இயலவில்லை எனின் அத்துன்பத்தைத் தாங்கமாட்டாய் பகைவருடைய அரண் அவர்களிடத்தே இருக்கவும் அதனை வெல்வது உறுதி எனக் கருதிய நிலையில் பாணர்கள் அவ்வரணை உன்னிடம் பரிசிலாக வேண்டுவர். அத்தகைய வன்மையுடையவனே நீ இரவலரைத் தாங்குதலைக் கடனாகப் பூண்பாயாக என்று இரவலரின் பசியைப் போக்கி அவர்களுக்கு வறுமையினால் ஏற்படும் பேரழிவைத் தடுத்து புலவர் மேலாண்மை செய்துள்ளார்.

உலகில் புரப்போர் நீ மட்டும் இல்லை. புரப்போர் பலர் இருக்கின்றனர். என்னையும், வள்ளல் குமணனையும் பார்த்து உலகில் இரவலர் உண்மையும், இரவலர்க்கு ஈவோர் உண்மையும் அறிந்து கொள்க என இளவெளிமானுக்குப் பெருஞ்சித்தனார் அறிவுறுத்தியதை,

> ***"இரவலர் புரவலை நீயு மல்லை***
> ***புரவல ரிரவலர்க் கில்லையு மல்லர்***
> ***இரவல ருண்மையுங் காணினி யிரவலர்க்***
> ***கீவோ ருண்மையுங் காணினி....."*** ***(புறம்.162: 1-4)***

என்ற அடிகளில் வழி அறியலாம். இப்பாடலடிகளின் மூலம் இரவலராகிய புலவர்கள் அரசன் வழங்கும் கொடை, இரவலன் மனம் மகிழும்படி வழங்குதல் வேண்டும். வறுமையின் பிடியில் வாழும் இரவலருக்குக் கொடுத்து வாழ்தல் வேண்டும் என்பதை உணர்த்தியுள்ளார். இரவலராகிய விளிம்புநிலையில் வாழும் மக்களின் வறுமை, பசி போன்றவற்றைப் போக்குவதற்குப் புலவன் அரசர்க்கு அறிவுறுத்தும் தன்மையில் வறுமையைத் தீர்க்கும் மேலாண்மைப் பண்பினை உணரமுடிகின்றது. வறுமையானது பிற அழிவுகளைவிட கொடுமையானது. மற்ற அழிவுகளை காட்டிலும் உடனடியாக வறுமையானது அழிவாக அமையும் ஆனால் வறுமை என்பது பசி, பட்டினி போன்ற நோயை உருவாக்கி இறுதியில் இறப்பில் முடிந்து பேரிடரை உருவாக்கும். இவ்வாறு ஏற்படும் பேரிடரைப் போக்கும் மேலாண்மைவாதிகளாகச் சங்கப் புலவர்கள் வாழ்ந்துள்ளனர் என்பது புலப்படுகிறது.

## போரினால் ஏற்படும் பேரிடர்களை மேலாண்மை செய்தல்

புலவர் என்போர் இரவலராக மட்டும் அமையாமல் சில சமயங்களில் அமைச்சர்களாகவும் விளங்கியுள்ளனர். பரிசிலுக்காக மன்னர்களைப் புகழ்ந்து பாடுதல் மட்டுமல்லாது அவர்கள் செய்யும் தவறுகளை அறிவுறுத்தும் செயல்களையும் மேற்கொண்டனர் என்பது சங்க செவியறிவுறூஉ பாடல்களின் மூலம் புலனாகிறது.

"பண்டைக் காலத் தமிழ்ப் புலவர்கள் விருப்பு வெறுப்பின்றி எல்லா மக்களையும் ஒப்பக் கருதி அறவுரை வழங்கிவருதலையே கடமையாகக் கொண்டிருந்தனர். அரசரின் குறைகளையும் துணிவாக எடுத்துக்கூறி, அவர்களை நல்வழிப்படுத்தினர்"[14] என்ற கூற்றும் இதனை மெய்ப்பிக்கின்றது.

ஐயூர் முடவனார், மாறான் வழுதி போர்ப் புரிந்தால் பகை நாடானது கெட்டழியும் என்று போர் ஏற்படுவதற்கு முன்பே அழிவின் தன்மையை,

> ***"இன்னா வெம்போ ரியறேர் வழுதி***
>
> ..........................................
>
> ..........................................
>
> ***காடாகி விளியு நாடுடை போரே"*** *(புறம்.52: 6-17)*

என்ற பாடலில், பகைவரைக் கொல்லக் கருதி கொடிய போர் செய்யும் தேரையுடைய வழுதியே, இப்போரை நீ கருதினால் இப்பெரிய உலகத்தில் இரங்குதற்குரியர் யாவரோ? ஊர்தோறும் மீனைச் சுடுதலால் ஏற்படும் புகையால் புலால் நாற்றம் வயலில் மருத மரத்தின் வளைந்த கிளைகளைச் சூழும். இத்தகு நல்வருவாயிலிருந்து ஊர் நீங்கும். இசை பொருந்திய தெய்வங்கள் தம்மை வணங்கும் மக்கள் இல்லாமையால் அந்நகரைவிட்டு அகலும். உன்னால் பாழாக்கப்படும் அம்பலங்களில் சூதாடுனர் இன்மையால் சூதாடு கருவி குழிந்த இடம்தோறும் நிறையுமாறு காட்டுக்கோழி முட்டையிடும் தன்மையுடையதாக தன் வளமை கெட்டழியும். மன்னனின் போர் சிறப்பைக் கூறக் கருதி, நீ போர் செய்வாயானால் பகைநாட்டில் உள்ள வளங்கள் அனைத்தும் அழிந்து மக்கள் வாழ்வதற்கு உதவாது காட்டில் வாழும் உயிரினங்களுக்கு இடமாக (காடாக) அமையும் என்று பேரிடர் ஏற்படுவதற்கு முன்பே அதன் தன்மையைக் கூறிப் பேரிடர் நீக்கும் மேலாண்மை வாதிகளாகச் சங்கப் புலவர்கள் விளங்கியுள்ளனர். நெடுங்கிள்ளியைக் கோவூர்கிழார்,

> ***"பாலில் குழவி யலறவும் மகளிர்***
> ***பூவில் வறுந்தலை முடிப்பவும் நீரில்***
> ***வினைபுனை நல்இல் இனைகூவக் கேட்பவும்"*** *(புறம்.44: 6-8)*

இப்பாடல் நலங்கிள்ளிக்கும், நெடுங்கிள்ளிக்கும் இடையே நடைபெற்ற போரின் போது நெடுங்கிள்ளி தனது மதிற்கதவை அடைத்து விட்டத்தால் அவன் வாயில் உள்ளோர் பல்வேறு வகைகளில் துன்பம் அடைந்தனர் ஆகையால் நீ போரிடு அல்லது நலங்கிள்ளியிடம் மதிலைத் திறந்து விடுக என்று கூறும்படியாக அமைந்துள்ளது. மன்னனின் அரசாட்சி நிகழ்ந்த நாட்டில் பாலில்லாது குழந்தைகள் அழும். மகளிர் பூவின்றி வெறுங்கூந்தலை முடிகின்றனர். வேலைப்பாடு அமைந்த நல் இல்லிலுள்ளோர் நீரில்லாது வருந்திக் கூவுகின்றனர். இவ்வாறு நாட்டில் வறட்சி, பஞ்சம், பட்டினி போன்ற இன்னாத பல துயரங்கள் ஏற்படும் என்று கூறுகின்றார். இவ்வாறு ஏற்படும் துயரால் பல்வேறு வித பேரழிவுகள் ஏற்படும் ஆகையால் நீ போரிடு அல்லது அவனிடம் நாட்டைக் கொடுத்துவிடு என்று நாட்டில் மக்களுக்கு ஏற்படும் பேரழிவினை நெடுங்கிள்ளியிடம் கூறி மேலாண்மை செய்தார் கோவூர்கிழார். இதில் போர்

செய்தல் என்பது, நலங்கிள்ளியைப் பகைத்தவன் அவன் தம்பி நெடுங்கிள்ளி, ஆகையால் நீ அவனிடம் நட்பு கொள்ளுதல் வேண்டும் என்பது புலப்பட மதிலைத் திறந்திடுக என்று கூறுவதால் புலவர்களின் பொதுமை நெறி இங்கு போற்றத்தக்கது. மேலும்,

*"நீயோ ராகலின் நின்னொன்று மொழிவல்*
*அருளும் அன்பும் நீக்கி நீங்கா*
*நிரயங் கொள்பவரோ டொன்றாது காவல்*
*குழவி கொள்பவரின் ஓம்புமதி*
*அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே"* *(புறம்.5: 4-8)*

கோப்பெருஞ்சேரல் இரும்பொறையை நரிவெரூவுத்தலையார், நின்னிடத்து ஒன்று கூறுவேன் கேட்பாயாக, அன்பையும், அருளையும் ஒழித்துத் தீவினை புரிதலான் நரகத்திலிருந்து நீங்காது இருக்கும் தன்மையை அடைந்திடுவர். அவருடன் நட்பு கொள்ளாது உன்னால் காக்கப்படும் நாட்டைக் குழந்தையைப் பேணுபவர் போன்று நின்று பாதுகாத்திடுக. அத்தகைய காவல் அருளுடையது. அத்தகைய நிலை பெறுவதற்கும் அரியது என்று தாயைப்போல மக்களை மன்னன் பாதுகாக்க வேண்டும் என்று பாடியுள்ளார்.

அன்பு - தன்னால் காக்கப்படுபவர் மேலுள்ள காதல்.

அருள் - ஒன்றின் துயர் கண்ட அளவில் காரணமின்றிப் பெருகும் இரக்கம்.

இங்கு பிறமன்னர்களால் போர் மற்றும் ஊர் அழிப்பு போன்ற பேரிடர்கள் ஏற்பட வாய்ப்புள்ளது. அத்தகு பேரிடர்களிலிருந்து தன் நாட்டு மக்களைக் காக்கும் முழுபொறுப்பும் மன்னனையே சாறும் என்று அறிவுரைக் கூறிப் பேரிடர் ஏற்படும் முன்பே மக்களைக் காத்திட வேண்டும் என்று அறிவுறுத்துவதைக் காணமுடிகிறது.

புலவரின் வறுமையினால் ஏற்படும் பேரிடர் தீர்க்கும் மேலாண்மையை,

*"கடுஞ்சினத்த கொள்களிறுங் கதழ்பரிய கலிமாவும்*
*.................................................*
*...............................................*
*நீநீடு வாழிய நெடுந்தகை"* *(புறம்.55: 7-17)*

எனும் பாடலடியில் கடுஞ்சினத்துடன் கொல்லும் யானைகளும், விரைந்து செல்லும் செறுக்குடைய குதிரைகளும், நெடிய கொடியுடன் விளங்கும் உயர்ந்த தேர்களும், மனவன்மை மிகுந்த போர் மறவரும் என நான்கு வகையில் அமைந்த படைகளால் போர் புரிதல் என்று அனைவரின் மீதும் போரிடுதல் கூடாது. அறத்தின் வழி நின்று போர் புரிதல் வேண்டும் என்றும், தீமை செய்வோரை நம்மவர் என்று மன்னிப்பதும், நன்மை செய்பவரை அயலார் என்று அவரது நற்குணங்களைப் போற்றாது இருத்தலும் கூடாது ஞாயிறு

போலும், திங்கள் போலும், வான்மழை போலும் அமைந்து மக்களின் குறை அறிந்து இரவலர் இல்லாமல் செய்து வாழ்க என்று, மன்னன் அறம் அறிந்து போர் செய்வதால் அந்நாட்டில் அழிவுகள் ஏற்படாது. மேலும் அந்நாட்டு வளங்கள் அழியாது நிலைபெறும். அதன் பொருட்டு மன்னனிடம் வளங்கள் இன்மையால் கையேந்தி நிற்கும் நிலை ஏற்படாது என்பதன் பொருட்டு 'இரவலர் இல்லாது போகுமாறு' என்று செவியறிவுறூஉ எனும் துறையில் பதிவு செய்துள்ளார். இதன்மூலம் சங்கப்புலவரின் புலமை நெறியும் போர் புரிதலின் அறம் மற்றும் அதனால் ஏற்படும் அழிவு கூறி மக்களைப் பேரழிவுகளிலிருந்து பாதுகாத்தனர் என்பது தெளிவாகிறது. புலவர்கள் பேரிடர் தீர்க்கும் மேலாண்மைவாதிகளாகத் திகழ்ந்ததை இப்பாடல் தெளிவாக்குகிறது.

பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிக்கிழார், போர் செய்ய எதிர்த்த பகைவருடைய நாடுகளில் கடல் போன்ற படையும், மேன்மேலும் உட்புகுந்து சென்று, அடர்ந்த புள்ளிகளை உடைய சிறிய கண்ணுடைய யானையைத் தடையில்லாது செம்மையாக ஏவி பசிய வயல்களையும், அரியமதில் அரண்கள் பலவற்றையும் கைப்பற்றுதல் வேண்டும். அவ்வரண்களில் கைப்பற்றிய அழகிய நல்ல அணிகலன்களைப் பரிசிலர்களுக்கு முறையுடன் வழங்குதல் வேண்டும் என்பதை,

*"செய்வினைக்கு எதிர்ந்த தெவ்வர் தேஎத்து*
*கடல்படை குளிப்ப மண்டி யடர்புகர்ச்*
*சிறுகண் யானை செவ்விதி னேவிப்*
*பாசவல் படப்பை யாரெயில் பலதந்து*
*தவ்வெயிற் கொண்ட செய்வுறு நன்கலம்*
*பரிசின் மாக்கட்கு வரிசையின் னல்கி"* *(புறம்.6: 11-16)*

இப்பாடலில் பகைவர் தன் நாட்டை எதிர்த்து போரிடத் துணியும் பொழுது அவன் நாட்டின் மீது போர் செய்யும் திறத்தினைத் தெளிவாக்குகிறார். காலாட்படையும், யானைப்படையும் கொண்டு பகை நாட்டின் மதில்கள், வயல்களைக் கைப்பற்றி அதனை அழிக்க அறிவுறுத்தாது 'பாசவல் படப்பை ஆர்எயில் பலதந்து' என்று அவ்வளங்களைக் கொண்டு வந்து அங்குக் கிடைக்கப் பெற்ற அணிகலன்களைப் பரிசிலருக்கு முறையுடன் வழங்க வேண்டும் என்று அறிவுறுத்துகிறார்.

பகை நாட்டின் வளங்களைக் கைப்பற்றுதலை மட்டும் கூறி அதனை அழித்தலைப் பற்றிக் கூறாது அங்கு பெற்ற வளங்களை இல்லை என்று கூறும் வறுமை பொருந்திய பரிசிலர்க்குக் கொடுக்க வேண்டும் என்று கூறும் பொழுது, வறுமையைப் போக்கி பேரிடர் நிகழாது காத்துள்ளார் என்பது புலப்படுகிறது. மேலும், எல்லோரிடமும் போரிடாது தன்னை

எதிர்த்த மன்னனின் நாட்டைப் போர் புரிந்து அந்நாட்டின் செல்வத்தை அழிக்காது அதனை கொணர்ந்திடுக என்று கூறுவதன் மூலம் வளங்களை அழித்து பேரிடர் உருவாக்குவதைத் தன்னுடைய புலமைத் திறத்தால் மேலாண்மை செய்துள்ளார் என்பது உறுதிப்படுத்துகின்றது.

இளவந்திகைப் பள்ளி துஞ்சிய பாண்டியன் நன்மாறனைக் கண்ட காரிக்கண்ணனார், மாறனே உனக்கு ஒன்று சொல்வேன், நீ பகைவர் நாடுகளைக் கொள்ளும் போது வளைந்த கதிர்களை உடைய வயலை நின் இளையோராகிய வீரர் கொள்ளையிடினும் கொள்ளையிடட்டும், அகன்ற இடம் அமைந்த பெரிய ஊரினைத் தீயிட்டு எரிப்பதானாலும் எரிக்கட்டும், நின் வேல் பகைவரை அழித்தாலும் அழிக்கட்டும், என்னவாயினும் அவர்தம் காவல் மரத்தை வெட்டுதலை தவிர்த்தல் வேண்டும். ஏனெனில் அம்மரங்கள் நின்யானைக்குக் கட்டும் தறியாக இருந்து தாங்கவல்லன ஆகாது என்பதை,

***"நின்னொன்று கூறுவ துடையேன் னென்னெனின்***

***..................................................***

***நெடுநல் யானைக்குக் கந்தாற் றாவே"*** ***(புறம்.57: 4-11)***

இப்பாடலில் மன்னனது வீரச்சிறப்பை, நின் பகைமன்னனது நாடு வலிமை பெற்றது அல்ல. அத்தகு மரம் நின்யானையைக் கட்டுவதற்கு ஏற்றதன்று என்பதன் மூலம் அம்மன்னன் நினக்குத் தக்க பகைவன் அல்லன் ஆகவே நீ அவர்மீது படையெடுத்துச் சென்று அந்நாட்டில் உள்ள வயல்வெளிகளை அழித்தல் வேண்டாம். அந்நாட்டின் கண் உள்ள ஊரினைத் தீயிட்டு எரித்தல் வேண்டாம். அந்நாட்டு வீரர்களை அழித்தலும் வேண்டாம் என்பது புலப்பட காவல் மரத்தின் தன்மைக்கூறிப் பகையரசனின் வீரம் நினக்கு ஒப்பத்தக்கதன்று ஆகவே போர்புரிதலைக் கைவிட வேண்டும் என்று போரினால் ஏற்படும் பேரிடரைக் கூறி மேலாண்மை செய்துள்ளார்.

## முறையறிந்து வரிவிதிக்க அறிவுறுத்துதல்

நாட்டின் பொருளாதார வளத்திற்கு 'வரி' என்பது முதன்மையிடம் பெறுகின்றது. சங்ககாலத்தில் நிலவரி, உற்பத்திவரி, ஏரிவரி என்று பல்வேறு விதமான வரிகள் விதிக்கப்பட்டன. இவ்வாறு விதிக்கப்படும் வரி என்பது மக்களைப் பாதிக்காவண்ணம் விதிக்கப்படவேண்டும்.

"நடைமுறைகளுக்கு ஒவ்வாத, கடுமையான வரிவிதிப்புகளும் அவற்றை வசூலிக்க மேற்கொள்ளப்படும் கெடுபிடிகளும் அரசுக்கும் மக்களுக்குமுள்ள நல்லுறவைப் பாதிக்கும் என்பது இன்றைக்கும் பொருந்தும். சங்ககாலத்திலும் இவ்வுண்மை பெரிதும் உணரப்பட்டிருப்பது தெரியவருகிறது"[15] என்ற கருத்து சங்ககாலத்தில் வரிவிதிப்பு பற்றி விளக்கப்பட்டுள்ளது. மக்களின் நிலையறிந்து வரிவிதிக்கும் போது மன்னன் - மக்கள் உறவு போற்றப்படும். இதனை நன்கறிந்த பிசிராந்தையார் பாண்டியன் அறிவுடை நம்பிக்கு வரிவிதித்தலைப் பற்றிக் கூறியதை,

***"அறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே***

***..............................................***

***தானு முண்ணா னுலகமுங் கெடுமே"*** ***(புறம்.184: 5-11)***

என்று ஒரு நாட்டின் அறிவுடைய அரசன் தாம் பெறும் அரசின் இறையை நெறியறிந்து கொள்ள வேண்டும். அவ்வாறு செய்தால் அவன் நாடு கோடிப் பொருளினை ஈட்டிக் கொழுத்துச் செழிப்படையும். வேந்தன் அறிவால் மெல்லியனாகி நாடொறும் வரிசை அறியாத ஆரவாரத்தையுடைய சுற்றத்தோடு கூடிக் குடிகளின் அன்பு கெடக் கொள்ளும் பொருள் தொகுதியை விரும்பினால், யானை புகுந்து அழித்த நிலம் போலத் தானும் உண்ணப் பெறான்; உலகமும் கெடும் என்று உணர்த்தப்பட்டுள்ளது. நாட்டில் வசிக்கும் மக்களின் வாழ்வினை அறிந்து, அதற்கேற்றவாறு இறை பெறும் பொழுது மக்களும் மகிழ்வுடன் வழங்குவர். மன்னனுக்கும் அது பயன்படும். அவ்வாறு நிகழாவிடின் வீணே முறையான பொருளாதார திட்டமிடல் இன்மையால் பேரழிவு ஏற்படும் என்பதை உணர்த்தி சங்கப் புலவர் மேலாண்மை செய்துள்ளார் என்பது தெளிவாகின்றது.

## மக்களுக்குப் புலவர்களின் அறிவுரை

சங்கப் புலவர்கள் மன்னர்களுக்கு மட்டுமன்றி அக்காலச் சமூகத்தில் வாழ்ந்த மக்களுக்கும் நன்னெறியில் வாழ்தல் வேண்டி அறிவுரைகளை வழங்கியுள்ளனர். மக்களை நல்வழிப்படுத்தும் நிலையில் நல்லது செய்ய மாட்டீராயினும், தீவினைகளையாவது செய்யாது விலகுங்கள், அதுவே சிறந்த அறமாகும் என்றும், மேலும் அதுவே நன்னெறியில் செல்வதற்குரிய வழி என்பதையும் நரிவெரூஉத்தலையார்,

***"நல்லது செய்த லாற்றீ ராயினும்***
***அல்லது செய்த லோம்புமி னதுதான்***
***எல்லாரு முவப்ப தன்றியும்***
***நல்லாற்றுப் படூஉ நெறியுமா ரதுவே"*** ***(புறம்.195: 6-9)***

எனும் அடிகளின் வழி அறிவுறுத்தியுள்ளார்.

"சங்கப் புலவர்கள் - மக்கள் மன்பதையே உயர்வு நோக்கில் வளர்த்தெடுக்கும் பாங்கில் பாடிப் பாடி மக்கள் மனதைப் பண்படுத்தியுள்ளார்கள். தரிசு நிலமாய், புறம் போக்காய்க் காடு, மேடாய்க் கிடந்த நிலத்தைப் பண்படுத்திச் செய்களாக்கி, பயிர் வளரும் கழனிகளாக, தோட்டங்களாக, துரவுகளாக மாற்றுவது போல மக்களின் வாழ்க்கையையும், மனநிலைகளையும் பண்படுத்தும் முயற்சி சங்கப் பாடல்களில் காணப்படுகின்றது"[16] என்று தமிழண்ணல் கூறுகிறார்.

இவ்வாறு புலவர்கள் மன்னர்களுக்கன்றி மக்களுக்கும், சான்றோர்களுக்கும் அறிவுரைக் கூறி நேரிய அறவாழ்வினை வாழ்வதற்கு வழிவகுத்தனர் என்பதன் மூலம் புலவர்தம் பொதுநல மாண்பினையும், சமூக உணர்வினையும் உணரமுடிகின்றது.

## இயற்கைப் பேரிடர் நீக்கும் புலவர்களின் மேலாண்மை

இயற்கையின் உன்னதத்தை அறிந்த சங்கப் புலவர்கள் பல்வேறு நிலைகளில் அதன் தன்மையைத் தம் பாடல்களில் பதிவுசெய்துள்ளனர். மக்களின் வாழ்விற்குத் தேவையான வளங்களை வழங்கும் இயற்கையினைப் பாதுகாத்து மக்கள் பேரிடர் போன்ற உபாதைகளால் பாதிப்பு ஏற்படா வண்ணம், இயற்கை வளங்களைப் பாதுகாக்க மன்னர்களுக்கு அறிவுரைகளை வழங்கினர். தேவையான இடங்களில் செயற்கையாகவும் குளங்கள் ஏரிகளை ஏற்படுத்த வலியுறுத்தினர். இதனைக் கருத்தில் கொண்டே, மனிதப் பிறப்பின் மகத்துவம் உச்சம் பெற வேண்டுமாயின் உண்டியும், நீரும் அவசியம் என்பதைக் குடபுலவியனார்,

*“நீரின்று றமையா யாக்கைக் கெல்லாம்*

*……………………………………………*

*……………………………………………*

*நிலனெளி மருங்கில் னீர்நிலை பெருக”* *(புறம்.18: 18-28)*

எனும் அடிகளில் நீரின்றி அமையாத உடல், உணவால் அமைவது, உணவையே முதன்மையானதாகவும் உடையது. உணவு தந்தவர் உயிரைத் தந்தவர் ஆவார். எனவே உணவு எனப்படுவது நிலத்துடன் நீரும் ஆகும். நிலத்தையும், நீரினையும் ஒன்றிணைத்தோர், உடம்பையும், உயிரையும் கூட்டிப் படைத்தனர். மேலும் விதைகளை விதைத்த புன்செய் நிலம் மழையை நோக்கியே இருக்கும் அதுபெரும் நிலப்பரப்பாயினும் மன்னனுக்கு உதவாது. ஆதலால் நிலன் குழிந்த இடந்தோறும் நீர்நிலைப் பெருகச் செய்தல் வேண்டும் என்று பாடியுள்ளார். இதில் நிலத்தின் குழிந்த பகுதிகளில் நீர்நிலைப் பெருகச் செய்வது என்பது ஏரி, குளம் போன்ற நீர்நிலைகளை உருவாக்கி மக்களுக்கு ஏற்படும் வறட்சியைப் போக்குவாய் என்று மன்னனுக்கு உணர்த்துகிறார். செயற்கையாக ஏரி, குளம் போன்றவற்றை உருவாக்கி மழைபெய்யும் காலங்களில் நீரை சேமித்து நீரியல் மேலாண்மையை இப்பாடலடிகள் உணர்த்துகிறது.

## ஆற்றுப்படுத்தி வறுமைப் பேரிடர் தீர்க்கும் புலவரின் மேலாண்மை

சங்க இலக்கியத்தில் உள்ள ஆற்றுப்படை பாடல்கள் அனைத்தும் ஒருவரது ஏழ்மை, பசித்துயர் போன்றவற்றைப் போக்க மற்றொருவர் ஆற்றுப்படுத்தும் தன்மையை வெளிப்படுத்துகிறது.

"நிலவுடைமைச் சமுதாயத்தின் குடும்ப அமைப்பில் குடும்பம் ஒவ்வொன்றும் தனியுடைமையின் அங்கமாக விளங்கியதால் அவ்வவற்றின் இருப்பு உடைமை இன்மை எனும் இரண்டையும் கொண்டதாக இருந்துள்ளது. திணைப் பொருளாதார இயல்புக்கேற்ப அவ்வத்திணை சார்ந்த குடும்பங்களின் பொருளாதார நிலை இருந்துள்ளது. இதனையே ஆற்றுப்படைப் பாடல்கள் வெளிப்படுத்தியுள்ளன"[17] என்ற பெ. மாதையனின் கூற்று சங்ககாலத்தில் உடைமை, இன்மை எனும் இருவேறு சமூக அமைப்பு இருந்ததை வெளிப்படுத்துகின்றது. நிலவுடைமையின் காரணத்தினால் ஏற்பட்ட பொருளாதாரச் சிக்கல்களை முன்வைத்து விளிம்பு நிலையில் வாழும் பாணர், விறலி போன்ற இரவல் மக்களுக்கு அவர்களுடன் நெருக்கமான புலவர் பெருமக்கள், தாம் பாடிப் பரிசில் பெற்ற வள்ளல்களின் குணங்களைக் கூறி, நீ அங்கு சென்றால் உன் பசித்துயர் நீங்கும் என்று ஆற்றுப்படுத்தினர். பசி, வறுமையால் ஏற்படும் பேரழிவுகளைத் தடுக்கும் மேலாண்மை உத்திகளில் ஆற்றுப்படுத்துதலும் ஒன்று. இதில், புலவர் பெருமக்கள் முதன்மையிடம் பெறுகின்றனர்.

***"உடும்புரித் தன்ன வெண்பெழு மருங்கிற்***
***கடும்பின் கடும்பசி களையுநர்க் காணாது"*** ***(புறம்.68: 1-2)***
***"உறந்தை யோனே குருசில்***
***பிறன்கடை மறப்ப நல்குவன் செலினே"*** ***(புறம்.68: 18-19)***

இப்பாடலடிகளில் கோவூர்கிழார் சோழன் நலங்கிள்ளியைச் சென்றடைந்து அவன்பால் பல பரிசில்களைப் பெற்று, உடும்பினைப் போன்று எலும்பு புடைத்து எழுந்த விலாப்பகுதியை உடைய சுற்றத்தின் பசியைத் தீர்க்கின்றவர் யாரோ எனக் காணாது திரிந்த பாணனுக்குக் கடும்பசி தீர்க்கும் வகையில் அப்பாணனை ஆற்றுப்படுத்துகிறார்.

சங்க காலம் என்பது பொற்காலமே. இருந்த போதிலும் எல்லாக் காலத்திலும், எல்லா வளமும் இருந்திருக்கக்கூடும் என்பது இயலாத ஒன்று. இயற்கையின் தன்மையினாலும் அல்லது அரசர்களின் படையெடுப்பினாலும் ஏற்பட்ட அழிவின் காரணமாகவும் வறுமை, பசி, பட்டினி போன்ற நிலை ஏற்பட்டுள்ளது. அதன் காரணமாகவே பசித்துயர் போக்கும் வள்ளலைத் தேடித் திரியும் நிலை இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது. இத்தகு காலங்களிலும், புலவர் பெருமாட்டிகள் பசி தீர்க்கும் தன்மை உணர்ந்து ஆற்றுப்படுத்திப் பேரிடர் போக்கும் மேலாண்மைவாதிகளாகச் செயல்பட்டனர் என்பது புலப்படுகிறது.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை ஆலந்தூர் கிழார் பாடிய பாடலில்,

***"கையது கடனிறை யாழே மெய்யது***

***..........................................***

***நீயவற் கண்ட பின்றைப் பூவின்***

***ஆடும்வண் டிமிராத் தாமரை***

***சூடா யாத லதனினு மிலையே"*** ***(புறம்.69: 1-21)***

பாணனே, உன் கையில் இலக்கணம் பொருந்திய யாழுடன் உன்னுடலில் காப்பார் இல்லாமையால் உண்டான பசியுடன் தோன்றுவாய். கந்தலாடைத் துன்பத்தை மறைத்து உடுத்தியுள்ளாய். சோம்பலினால் ஊக்கமில்லாதவன் உடலைப் போன்று பொலிவிழந்த சுற்றத்தை உடையவனாய் உலகம் முழுவதும் திரிந்து பின் என்னை மெல்ல அணுகி வறுமை தீர்ப்பவர் யாவர் என வினவுகிறாய். பசியின் கொடுமையினால் பாணனது உடல் மெலிந்து காணப்படுகிறது. அத்தன்மையை மறைக்க கந்தலாடையை அணிந்திருக்கின்றான். பாணன் மட்டுமல்லாது பாணனது சுற்றமும் வறுமையினால் வாழுகிறது. இத்தகு வறுமையைத் தீர்ப்பவர் யாவர் என்று உலகம் முழுவதும் திரிந்தான் என்று அமையப்பட்டுள்ளது. இதன் மூலம் பசி எனும் வறுமையினால் பாதிக்கப்பட்டு அதன் கொடுமை தாளாது, தன்னைக் காப்பாரைத் தேடி அலைகின்றனர். பசி தீர்க்கும் மேலாண்மையாக உயிரிழப்பு ஏற்படா வண்ணம் முன்னமே மேலாண்மை செய்து புலவர்கள் பாணர்களை ஆற்றுப்படுத்தியுள்ளனர். ஆற்றுப்படை என்பது ஒருவிதமாக வறுமை பசி எனும் பேரிடர் ஏற்படா வண்ணம் தீர்க்கும் மேலாண்மை செயலாகும் என்பதைப் பாடல்கள் வழி அறியமுடிகிறது. இதேபோல் மற்றொரு பாடலில், பசியால் வாடும் தன்னையும் தன் சுற்றத்தையும் பசிபோக்கிப் புரப்புவர் யார் என்று, வளைந்த கோட்டையுடைய சிறிய யாழை வறுமையால் வாடிய இடையின் ஒரு பக்கத்தே தழுவி அலையும் பாணனைக் கொண்கானங்கிழானிடம் ஆற்றுப்படுத்துவதை மோசிகீரனார்,

***"வணர்கோட்டுச் சீறியாழ் வாடுபுடைத் தழீஇ***

***உணர்வோர் யாரென் னிடும்பை தீர்க்கெனக்***

***கிளக்கும் பாண கேளினி"*** ***(புறம்.155: 1-3)***

எனும் பாடலில், இதில் பாணனின் பசியினால் ஏற்படும் வறுமை நோயைப் போக்கும் விதமாகப் பேரிடர் ஏற்படும் முன்பே மேலாண்மை செய்த திறத்தை வெளிப்படுத்துகிறார். மேலும்,

***"வண்டுபடு புதுமலர்த் தண்சிதர் கலாவப்***

***பெய்யினும் பெய்யா தாயினு"*** ***(மருவி)*** ***(புறம்.105: 1-2)***

*“நீரினு மினிய சாயற்*
*பாரி வேள்பாற் பாடினை செலினே”* *(புறம்.105: 7-8)*

எனும் பாடலில், விறலியை ஆற்றுப்படுத்தும் நோக்கில், கபிலா் வறுமையால் வாடி வதங்கும் விறலி ஒருத்தியைக் கண்டு அவளை வேள்பாரியிடம், மழை பெய்யினும், பெய்யா தொழியினும் பாரியின் மழையில் அருவி கொட்டுவதை ஒழியாது. அத்தகைய அருவி நீரினும் இனியவன் பாரி அவனிடம் சென்று தங்களது வறுமையைப் போக்கிக் கொள்ளுங்கள் என்று ஆற்றுப்படுத்தியதை உணா்த்துகின்றது.

மழை பெய்யாத காலத்து வறட்சி என்பது ஏற்படும். ஆதலால் மக்கள் பசி, பட்டினி ஆகியவற்றால் துன்பத்தை அனுபவிப்பா். மக்களின் நிலை அறிந்து அவா்கள் வறுமையால் அழிவு ஏற்படாவண்ணம், வறுமைப் போக்க பாரியிடம் ஆற்றுப்படுத்திப் பேரிழப்பு ஏற்படாவண்ணம் மேலாண்மை செய்த கபிலரின் நிலை தெளிவாகிறது. இப்பாடலில் மழையின் தன்மை குறைந்தால் வறுமை ஏற்படும் என்பதும் குறிப்புப் பொருளால் உணரமுடிகிறது.

ஔவை, தன்னுடைய பசியைப் போக்க உள்ளோா் யாரென அலைந்த விறலியை நோக்கி,

*“கவிழ்ந்த மண்டை மலா்க்குநா் யாரெனச்*
*சுரன்முத லிருந்த சில்வளை விறலி*
*செல்வை யாயிற் சேணோ னல்லன்”* *(புறம்.103: 3-5)*

என்று உனது பசியைப் போக்க வல்லவன் அதியன் அவனிடம் செல் என்று கூறுகின்றாள். மேலும் பசி எனும் பிணியால் ஏற்படும் பேரிடரைப் போக்கும் அதியனின் புகழினை,

*“அலத்தல் காலை யாயினும்*
*புரத்தல் வல்லன்”* *(புறம்.103: 10-11)*

என்ற பாடலில், இந்த உலகம் வறுமையுறுதலை உடைய காலமாயினும் உலகம் முழுவதையுமே பாதுகாக்கும் வல்லவன் என்று கூறுகின்றாா். பசி எனும் துயரைப் போக்க ஔவை விறலியை ஆற்றுப்படுத்துதல் என்பது ஒருவகையில் பசியால் பேரிடா் ஏற்படும் முன்பு செய்யும் மேலாண்மையாகும். மேலும், உலகம் முழுவதும் வறுமையடைதலை உடைய காலம் என்று ‘அலத்தற் காலையாயினும்’ என்ற பாடலடியின் மூலம் சங்ககாலத்தில் வறட்சியால் வறுமை என்பது ஏற்பட்டு இருந்திருக்கக்கூடும் என்பதைக் குறிப்பினால் உணரமுடிகிறது.

வறுமையின் காரணமாகப் பசியினால் இரவலைத் தேடும் மக்கள் சங்ககாலத்தில் இருந்தனா், எனினும் இவா்களது பசியினைப் போக்க வரையாது கொடுத்தல் நிகழ்ந்ததை,

***“தோலா நல்லிசை நாலை கிழவன்***
***பருந்துபசி தீர்க்கும் நற்போர்த்***
***திருந்துவே னாகற் கூறினர் பலரே”*** ***(புறம்.179: 10-12)***

எனும் பாடலில், தோற்காத நற்புகழையுடைய, பருந்தின் பசிதீர்க்கும் நற்போரைச் செய்யும் திருந்திய, வேலையையுடைய நாலைகிழவன் நாகன், இரவலர் பசிதீர்க்க உளன் என்று பலரும் சொன்னார்கள் என்று பதிவு செய்துள்ளார். இதில், பசியால் உண்டாகும் பேரழிவை மன்னர்கள் போன்ற இரவலர்கள் போக்கினர் என்பது புலப்படுகிறது. பசியினால் அழியாது காக்க புலவர், பாணர்க்கு ஆற்றுப்படுத்திப் பேரழிவினை மேலாண்மைச் செய்ததற்குச் சான்றாகப் பின்வரும் பாடலில்,

***“............... பாண்பசி பகைஞன்***
***இன்மை தீர வேண்டி னெம்மொடு***
***நீயும் வம்மோ முதுவா யிரவல”*** ***(புறம்.180: 7-9)***

என்று வறுமையின் பசியினால் வறுமையுடன் வாடிய பாணனைக் கண்டு புலவன், முதுவாய் இரவல நின் வறுமை நீங்க வேண்டுமாயின், எம்முடன் வருவாயாக என்று கூறினார். மற்றொரு பாடலில்,

***“உண்ணா வறுங்கடும் புய்தல் வேண்டின்***
***இன்னே சென்மதி நீயே சென்றவன்***
***பகைப்புலம் படரா வளவைநின்***
***பசிப்பகைப் பரிசில் காட்டினை கொளற்கே”*** ***(புறம்.181: 7-10)***

பாணனே, உண்ணாது வருந்தும் நின் வழிய சுற்றம் உண்டு பிழைத்தல் வேண்டுவையாயின் நீ இப்பொழுது செல்வாயாக, அவன் பகைப்புலன் நோக்கி படையெடுத்துச் செல்வதற்குள் உன் பசிக்கும் பகைவாகிய பரிசிலைப் பெற்று வறுமைப் போக்கிக் கொள்ள விரைந்து செல்வாயாக, என்று பாணனின் சுற்றத்தாரின் பகையாகிய பசியை நீக்குதல் பொருட்டு ஆற்றுப்படுத்தி பசியினால் பேரழிவு ஏற்படா வண்ணம் மேலாண்மை செய்துள்ளார் என்பது தெளிவாகின்றது.

## மூவேந்தரும் ஒன்றாக இருக்க எண்ணும் பாங்கு

புலவர்கள் விருப்பு வெறுப்பின்றி எல்லா மக்களையும் ஒப்பக்கருதி அறிவுரை வழங்கி வருதலையே கடமையாகக் கொண்டிருந்தனர். மூவேந்தர்களும் ஒன்றாயிருக்க வேண்டும் என்ற எண்ணம் கொண்டவர்களாக இருந்ததோடு, அரசரின் குறைகளையும் துணிவாக எடுத்துக்கூறி அவர்களை நல்வழிப்படுத்தினர். அவ்வாறு நல்வழிப்படுத்திய சங்கப் புலவர்களுள் பொருநராற்றுப்படையின் ஆசிரியர் முடதாமக்கண்ணியார்,

*“பீடுகெழு திருவிற் பெரும்பெயர் நோன்றாள்*
*முரசுமுழங்கு தானை மூவருங் கூடி*
*அரசவை யிருந்த தோற்றம்”* *(பொரு. 53-55)*

என்று, பெருமை மிக்கச் செல்வத்தையும், பெரும் பெயரையும் வலிய முயற்சியினையும் வெற்றிமுரசு முழங்கும் படையினையும், கொண்ட சேர, சோழ, பாண்டியர்கள் தம் பகைமை நீங்கி ஒருங்கே அரசு வீற்றிருக்கும் தோற்றம் பெருஞ்சிறப்பை நல்குவதாகுக, என்று மூவேந்தர்கள், தங்கள் பகையை நீங்கினால் உலகில் அழிவுகள் ஏற்படாது சிறந்து விளங்கும் என்று பொதுமை நெறியை எண்ணினார். ‘பகையை நீங்கி’ என்றதனால் பகையுறுப்பின் அழிவுகள் ஏற்படும் என்பதை உணர்ந்தே அச்சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். இதன்மூலம் சங்கப் புலவர்கள் வெறும் பரிசில் மக்களாக மட்டுமல்லாது நாடு நலம் பெறவும் பாடுபட்டனர் என்பது புலப்படும். மேலும் சங்க காலத்தில் மூவேந்தர்களின் பூசலின் காரணமாக ஏற்பட்ட பெரும் போர்களால் பேரழிவுகள் ஏற்பட்டன என்பது வெளிப்படையாகிறது. இத்தன்மையினால் இக்கூற்றானது தனி ஒரு புலவரின் கூற்றாக அமையாது, ஒரு சமூகத்தின் பிரதிபலிப்பாகவே எண்ண இடமளிக்கின்றது.

“சான்றோர் பலர் மூவேந்தரும் ஒருமை மனத்தவராய் வாழ வேண்டுமென வற்புறுத்தியிருப்பவும் அவர் அவ்வன்புறையை மறந்து பொருது கெட்டனர். கெடவே, வடநாட்டு வடவரும், களப்பிரரும், வடுகரும்; மோரியரும், பல்லவரும், மேலைநாட்டு வெள்ளையருமாகப் பலர் புகுந்து தமிழகத்து அரசியல், சமயம், மொழி, பொருனிலை, சமுதாயம் முதலிய வாழ்க்கைக் கூறுகளையழித்துத் தமிழர் என்றும் பிறர்க்கே யுழைத்து ஏழையாகும் இழிநிலையை யுண்டாக்கி விட்டனர்”[18] சான்றோர்களாகிய புலவர்களின் அறிவுரைகளைச் சங்க மன்னர்கள் கேளாமையால், தமிழர்கள் இன்றுவரை பிற நாடு, இனத்தவர்களுக்கு அடிமைப்பட்டுக் கிடக்கின்றனர் என்பதை ஔவை. சு. துரைசாமிப்பிள்ளையின் கூற்று மெய்ப்பிக்கின்றது. இதன் மூலம் சங்கப் புலவர்கள் எதிர்காலத்தை முன்னிறுத்தியே மன்னர்களிடம் ஒற்றுமை நிலவ வேண்டும் என்பதை உணர்த்திச் சென்றுள்ளனர்.

### போரில் பேரிடர் நிகழும் முன்பு மேலாண்மை செய்யும் புலவர்

சங்ககாலத்தில் பேரழிவுகள் என்பது இயற்கை, மனிதன் என்ற இருநிலைகளில் ஏற்பட்டுள்ளன. இவ்விரு பேரழிவுகளுக்கும் மனிதனே மேலாண்மை செய்துள்ளான். இதில் புலவர்கள் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளனர். போரினால் பேரழிவுகள் ஏற்பட்டிருப்பினும் சில வேளைகளில் அப்பேரழிவுகள் ஏற்படும் முன்பே தம் சொல்லாற்றலாலும், மதிநுட்பத்தாலும் தூது சென்றும் செவியறிவுறுத்தியும் மேலாண்மை செய்துள்ளனர்.

“அரசர்களின் பரிவாரத்தின் ஒரு பகுதி என்ற முறையில் (புலவர்கள்) அவர்கள் அரசர்களின் நம்பிக்கைக்குரியவராய் இருந்தனர். அவர்களில் சிலர் அரசியல் தூதுவர்களாக அனுப்பப்பெற்றனர். கருத்து வேறுபாடுகளைத் தீர்க்க அவர்கள் தம்மதிப்புக்குரிய நிலையைப் பயன்படுத்தவும் செய்தனர்”[19] என்ற கருத்தும் இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

சங்ககாலத்தில் போர் என்பது வீரத்தின் அடையாளமாய் வெற்றியின் சின்னமாய்க் கருதப்பட்டது. இப்பாடலில் ஒரே குடியில் (சோழர் குடியில்) பிறந்த இரும்பெரும் வேந்தராகிய நலங்கிள்ளிக்கும், நெடுங்கிள்ளிக்கும் நடைபெற விருந்தபோரைச் சந்து செய்வித்து போரைத் தவிர்த்ததை,

***“இரும்பனை வெண்டோடு மலைந்தோ னல்லன்***

***.............................................................***

***.............................................................***

***மெயம்மலி யுவகை செய்யுமிவ் விகலே”*** ***(புறம்.45: 1-9)***

என்ற பாடலில், மன்னனிடம் அரசனே, நின்னோடு போர் புரிய வந்துள்ளவன் பனம்பூ அணிந்த சேரனும் அல்லன், வேம்பின் மாலையணிந்த பாண்டியனும் அல்லன், அத்தி மாலையணிந்த உம் குடிப்பிறந்தவனே, ஆகையால் உம்முள் எவர் தோற்றாலும் அது உம் குடிக்கு இழிவு. மேலும், இது மற்ற பகையரசருக்குப் பெருமகிழ்வைத் தரும் ஆகையால் இப்போரைத் தவிர்க்க வேண்டும் என்று அறிவுறுத்துகின்றார். இப்பாடல் மூலம் மனிதனது ஆட்சி வேட்கையின் காரணமாகத் தன் கீழ் நாட்டை ஆளும் எண்ணத்தால் போர் மேற்கொள்கின்றான் என்பதை அறியமுடிகிறது. இவ்வாறு ஏற்படும் போரால் மன்னன் மட்டுமே அழியாது, அந்நாட்டு இருபடை வீரர்களும் அழிவதோடு, அந்நாட்டின் வளமும் அழிந்து ஒரு குலத்திற்கே அழிவாக மாற்றம் கொள்கிறது. இத்தகு அழிவு ஏற்படா வண்ணம் சோழக்குடியின் பெருமையை நிலைநாட்ட வேண்டும் என்று கூறி, பேரழிவிலிருந்து நாட்டையும், நாட்டு மக்களையும் தம்முடைய பேரிடர் தீர்க்கும் மேலாண்மைத் திறத்தால் காத்தனர் என்பதன் மூலம் புலவர்களின் பேரிடர் தீர்க்கும் மேலாண்மையின் பாங்கினை அறியமுடிகிறது.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் மலையமானின் மீது கொண்ட பகையினால் அவனது மக்களை யானைக்குப் பலியிடமுற்பட்ட போது கோவூர்கிழார், கிள்ளிவளவனைக் கண்டு, “அரசே, ஒரு புறாவிற்காகத் துலாக்கோல் புகுந்த சிபியின் மரபில் தோன்றியவன் நீ, உன்னால் கொல்லப்பட இருக்கும் இவ்விளஞ் சிறுவர்கள் புலவருக்கு நிழல் போல இருந்து அவர்களின் வறுமையினைப் போக்கும் வள்ளலாகிய மலையமான் திருமுடிக்காரியின் மக்கள். புல்லிய தலையையுடைய இச்சிறார்கள் யானையைக் கண்டு துன்பம் மறந்து அச்சமும், அழுகையும் நீங்கினர். எனினும் பலரும் கூடிய பொது மன்றத்தில் அச்சத்துடன் புதியதொரு வருத்தமும் அடைந்தனர். எம்மொழி

கேட்பாயானால் நீ விரும்பியது செய்க என்று கனிவுத் தோன்றக் கூறினார். அதனைக் கேட்ட கிள்ளிவளவன் தான் மலையமானிடத்துள்ள பகைமையின் பொருட்டு யாதும் அறியாத இளங்குழந்தைகளைக் கொல்லக் கருதியது தவறென்று நினைத்துக் கொல்லாது விடுத்தான். இதனை,

*"நீயே புறவி னல்லல் அன்றியும் பிறவும்*

*..................................................*

*..................................................*

*கேட்டனை யாயினீ வேட்டது செய்ம்மே"* *(புறம்.46: 1-8)*

எனும், இப்பாடலடிகளில் மலைப்பகுதியிலே அரசாலும் வேளிர் மலையமானை, அரசுருவாக்கத்தின் காரணமாகப் பொதுமை வேட்டாது சோழன் குளமுற்றுத்துச் துஞ்சிய கிள்ளிவளவன் படையெடுத்துச் சென்று அழிவை ஏற்படுத்தும் தனியுடைமையின் எச்சமாக அமைந்துள்ளது. மேலும், இளம்பருவம் வாராத பிள்ளைகளை அழித்தல் என்பது அதிகாரத்தின் உச்சமாகவே கொள்ளலாம். இதன்கண் இருவரிடையேயும் போர் ஏற்பட்டு அழிவுகள் ஏற்படும் என்பதுணர்ந்த கோவூர்கிழார் இப்பேரழிவைத் தடுக்கும் வகையில் மன்னனுக்கு அறிவுரைக் கூறிப் பேரிடர் ஏற்படும் முன்பே மேலாண்மை செய்துள்ளார். மேலும், இப்பாடலில் மலையமானின் மரபினை, பகுத்துண்டு வாழும் பண்பினர் என்று கூறும் பொழுது பெற்றதைப் பகுத்து வாழும் மேலாண்மை சிந்தனை என்பது சங்கச் சான்றோர்களிடம் இருந்தமைத் தெளிவாகப் புலப்படுகிறது.

"புலவர்களால் பாராட்டிப் பாடப்பட்ட மன்னர்களையே மக்கள் உயர்ந்த பண்புள்ள வேந்தர்களாகக் கொண்டாடினர். அக்காலப் புலவர்கள், எல்லா மன்னர்களையும் பாராட்டிப் பாடல் எழுதமாட்டார்கள். ஒழுக்கமுள்ள மன்னர்களைத்தான் மதித்துப் பாடுவார்கள். செங்கோல் முறை செய்யும் மன்னர்களைத்தான் சிறப்பித்துப் பாடுவார்கள். ஆகையால் அக்கால மன்னர்கள் புலவர்களின் பாராட்டைப் பெறுவதையே முதன்மையாகக் கருதினர். புலவர்களின் பாராட்டைப் பெறவேண்டுமாயின் குடி மக்களுக்குக் கொடுமை புரியாமல் நீதியுடன் ஆட்சி புரிய வேண்டும். ஆதலால் மன்னர்களின் இந்த மனப்பான்மையும் அவர்களுடைய ஆட்சியின் சிறப்பை விளக்குவதாகும்"[20] என்ற சிவகாமி சிதம்பரனாரின் கருத்து கவனிக்கத்தக்கது.

எயிற்றியனார், தன் மக்களிடம் போர்புரிவதற்காகப் போருக்குப் புறப்பட்ட கோப்பெருஞ்சோழனிடம் துணிந்து சென்று சோழர் குலம் தந்தையும், மகனும் போர் புரிந்தனர் என்ற பழியைச் சுமந்திருக்கும் நாட்டில் அமைதி நிலவாது. ஆனால் அவ்வாறு நிகழாது, சுற்றத்தோடு இருந்து பகைதனை நீங்கி, பாதுகாப்புச் செய்யும், உன் அடி நிழல் நல்வினையைச் செய்வதாகுக, என்று மன்னனுக்கு அறிவுரைப் பகர்ந்து போரினால் ஏற்படும் அழிவையும், போர் அறத்தையும் கூறிப் புலவர் மேலாண்மை செய்துள்ளதை,

*“மண்டம ரட்ட மதனுடை நோன்றாள்*

*..........................................*

*..........................................*

*விதும்புறு விருப்பொடு விருந்தெதிர் கொளற்கே”* *(புறம்.213: 1-24)*

என்ற பாடலில், போர் மேல் சென்று பகைவரைக் கொன்று வெற்றிமாலை புனைந்திருக்கும் வலிமை மிக்க முயற்சியும், தன் வெண்கொற்றக் குடையால் உலகைப் பாதுகாக்கும் வெற்றியும் பொருந்திய வேந்தே, இப்பொழுது நீ செய்ய இருக்கும் போர் பழியை உண்டாக்குமேயன்றிச் சிறிதும் புகழ்ச்சியினை உண்டாக்காது. மேலும் இப்போது உன்னோடு மாறுபட்டுப் போர் செய்ய வந்திருப்பவர் உனக்குப் பண்டுதொட்டுப் பகைவராக இருக்கின்ற பாண்டியரும் அல்லர்; சேரரும் அல்லர்; நீயும் அவர்கட்குப் பகைவனும் அல்லன். நீ இவ்வுலகத்தில் பரந்த புகழை அடைந்து பின் தேவருலகு சென்றபொழுது, நின்னால் ஒழிக்கப்பட்ட இவ்வரசியல் அவர்கட்கே உரியது. இதனை நீயும் அறிவாய். உன்னுடன் போருக்கெழுந்த மதியற்ற மனம் படைத்த மக்கள் இருவரும் தோற்றபின் நின் அரசியல் செல்வத்தை அவருக்கின்றிப் பின் யாருக்குக் கொடுப்பாய்? ஒருகால் நீ அவர்களிடம் தோற்றப் பின் உன் பகைவர்கள் எல்லோரும் உன்னை இகழ்ந்துரைப்பார்கள், நீ இவ்வுலகில் பழியையே விட்டுச்செல்வாய். நான் இவ்வாறு கூறுவதால், உன் ஆற்றலில் ஐயங்கொண்டுள்ளேன் என்று கருத வேண்டாம். ஆதலால் இப்போதே போரை நிறுத்தி உன் நகருக்குச் சென்று நின்னை அடைந்தவர்கட்கெல்லாம் அருள் செய்து மறுமைக்கு வேண்டிய நல்லறங்கள் பலவற்றைச் செய்து வாழ்வாயாக என்று கூறிய புலவரின் துணிவுடைமையினையும், பேராற்றலையும் புகழ்ந்து போர் புரியாது விடுத்தான் என்பது புலப்படுகிறது.

ஒரு நாடு சிறந்து விளங்க வேண்டுமானால் அந்நாட்டின் வளர்ச்சிக்குத் தேவையான திறை என்பது முதன்மையாகக் கருதப்படுவது இயல்பு. இத்தகு திறை என்பது ஒரு வகையில் மக்களிடம் பெற்றும் தேவையான காலத்தில் மக்களின் தேவைக்கேற்ப அவர்களுக்குச் செலவிடுவதும் இயல்பான ஒன்று. சங்ககாலத்தில் திறை செலுத்தும் மரபு ஆதிக்கச் சக்தியினை அடிப்படையாகவே கொண்டு கட்டமைக்கப்பட்டது. மன்னனுக்குத் திறை செலுத்தவில்லை எனில் வளம் பொருந்திய தங்கள் நாட்டினை இழக்க நேரிடும் ஆகையால் திரையினைச் செலுத்திப் போர் ஏற்படா வண்ணம் மேலாண்மை செய்யும் பொருட்டு, ஔவையார் அதியமானுக்குத் திறை செலுத்தும் நாட்டு மன்னர்களுக்கு,

*“.............................. தடந்தாட்*

*பிணிக்கதிர் நெல்லின் செம்மன் மூதூர்*

*..........................................*

*இறும்பூ தன்ற தறிந்தோ டுமினே”* *(புறம்.97: 17-25)*

எனும் அடிகளில் வளைந்த தாளினையும் ஒன்றுடன் ஒன்று பிணிந்தது போல் செறிந்து முற்றிக்கிடக்கும் நெல்மணிகளையும் உடைய நெற்கதிர்கள் நிறைந்த தலைமை பொருந்திய பழமையான ஊர், அவ்வூர் உங்கட்கே உரிமையாக வேண்டுமெனில் அவனுக்குத் திறை தருதல் வேண்டும். மறுத்தால் உடன்பட்டு விட்டுவிடுபவன் அல்லன். வெல்லும் போரினையுடையவன் என நான் கூறவும் தெளியீராயின், என்று அதியனை எதிர்த்துத் தம்முடைய வளம் பொருந்திய இயல்புடையவளும் அழகிய கூந்தலை உடையவளும், சிறிய வளையலை அணிந்தவளுமான நும் உரிமை மகளிர் தோளினை விட்டுப் பிரிந்துறைதல் வியப்பிற்குரியதன்று. எனவே அதனை உணர்ந்து போரிடுங்கள் என்று பகைவரின் இழப்பினைக் கூறுகின்றார். இதன் மூலம் பகை மன்னர்கள் தன் நாட்டையும் தானையையும் போரினால் இழப்பர் ஆதலால் பகைமை விடுத்து இனிது வாழவேண்டும் என்பது புலப்படப் போரினால் ஏற்படும் பேரிடரை ஏற்படும் முன்பு தீர்த்த தன்மை வெளிப்படையாகிறது. மேலும், மற்றொரு பாடலில்,

> ***"பொருநரு முளரோநும் மகன்றலை நாட்டென***
> ***வினவ லானப் பொருபடை வேந்தே***
> ***………………………………………***
> ***அதுபோ ரென்னு மென்மையு முளனே"*** *(புறம்.89: 3-9)*

இப்புறநானூற்றுப் பாடலடியானது, ஔவையார் தம்மை விறலியாக நினைத்து, உன் நாட்டில் எம்மோடு போர் புரிவோர் உண்டோ? என்று கேட்டதற்கு அடங்காதப் போரினைச் செய்யும் வேந்தனே, நீ போர் செய்ய விரும்பினால் அடிக்கும் கோலினுக்கு அஞ்சாது சீறும் பாம்பினைப் போன்ற இளைய, வலிய வீரரும், பொதுமன்றத்தில் தொங்குகின்ற இழுத்துக்கட்டப்பட்ட முழவினிடத்துக் காற்று மோதிக் கண்ணிடத்து தெளிந்த ஓசையை எழுப்புதலைக் கேட்ட அளவில், அது போர்பறை முழக்கம் என்று மகிழும் என் தலைவனும் உள்ளான். நீ போர் புரிந்தால் அழிவு ஏற்படும் என்பது புலப்பட, போரிட வேண்டாம் என்று கூறிப் போரினால் அழிவு ஏற்படா வண்ணம் மேலாண்மை செய்துள்ளார்.

அதியமானிடம் போரிட்டு வெல்வதற்காக வந்த பகைவரைக் கண்ட ஔவையார், அஞ்சியின் வீரத்தை அரியாது அணி, தூசிப்படையாகிய காலாட்படைக் கொண்டு வெல்ல நினைப்பதை எண்ணி, நீவிர் எத்தகைய வன்மையராயும் இருக்கலாம். பூணணிந்த அழகிய மார்பினையும், முழவு போன்ற தோளினையும் உடைய என் தலைவனிடம் போரிட்டு வெல்வேன் என்று கூறுதலைத் தவிருங்கள் என்பதை,

> ***"யாவி ராயினுங் கூழை தார் கொண்***
> ***………………………………………***
> ***முழவுத்தோ ளென்னையைக் காணா வூங்கே"*** *(புறம்.88: 1-6)*

இப்பாடலில் அஞ்சியின் வீரச்சிறப்பினைப் பகைவர்களுக்கு எடுத்துரைத்துப் போரினால் அழிந்துபடும் முன்பு அதிலிருந்து தற்காப்பு நடத்தையை மேற்கொள்கிறார். இதன்மூலம் சங்கப்புலவர்கள் போரினால் பெரும் பேரழிவு ஏற்படா வண்ணம் மேலாண்மை செய்த திறத்தை அறியமுடிகிறது. மற்றொரு பாடலிலும், அதியமான் அஞ்சியின் ஆற்றல் அறியாது போர் புரிய வந்த திருமுடிக்காரியினையும், அவனுக்குத் துணையாக வந்த வீரர்களையும் கண்டு ஔவையார்,

***"களம்புக லோம்புமின் றெவ்விர் போரெதிர்ந்***
***தெம்முளு முளனொரு பொருநன் வைகல்***
***எண்டேர் செய்யுந் தச்சன்***
***திங்கள் வலித்த காலன் னோனே"*** *(புறம்.87: 1-4)*

என்ற பாடலில், நாளொன்றுக்கு எட்டுத்தேரைச் செய்யும் தச்சன் ஒருவன் ஒரு திங்கள் வரை ஆராய்ந்து செய்யப்பட்ட தேர்க்கால் போன்ற வன்மையுடையவன் எங்கள் அஞ்சி, அவன் போர் புரியவிரும்பி உறையினின்றும் உருவிய வாள்கள் பகைவரது உடம்பில் பதிந்து நுனி மழுங்கி வடிவிழந்தன. அவன் வேல்கள் குறும்பர் அரண்களை அழித்து, அவர்களது நாட்டையும் அழித்தன. அதனால் வேல்களில் உள்ள காம்பும் ஆணியும் அசைந்து கெட்டன. அவன் களிறுகள் கனைய மரத்தால் தடுக்கப்பட்ட கதவைத்தாக்கிப் பகைவரின் அரண்களை அழித்ததால் கொம்புகளில் கட்டிய பூண்கள் சுழன்றன. அவன் குதிரைகள் போர் வீரர்களுடைய மார்பின் மீது பாய்வதால் இரத்தக் கறைப்பட்ட குளம்புகளை உடையனவாயின. அதியமான் இத்தகைய வல்லமை வாய்ந்த பெரும்படைகளை உடையவன். அவனை எதிர்த்தவர்கள் பிழைத்தல் என்பது அரிது. செல்வத்தால் மேம்பட்ட உங்கள் ஊர்களை நீங்கள் அமைய விரும்பு வீரர்களாயின் அதியமானுக்கு நீங்கள் திறை கொடுத்தல் வேண்டும். நீங்கள் அவனுக்குத் திறை கொடுக்க உடன்படாவிட்டால் அவ்வுரிமையை நீங்கள் பெற அதியமான் விடமாட்டான் என்று அவனது போர்த்திறமையைக் குறித்துக் கூறியும் அவனிடம் போர்புரிய செல்வீராயின் நீங்கள் உங்கள் மனைவியரைப் பிரிவது திண்ணம் என்று கூறுகின்றார்.

படைகளின் ஒத்தத் திறத்தைக் கூறிப், போரிடாது விலக்குதல் தானைமறம். இப்பாடல், இருபடை வீரர்களும் போரிட்டு வீணே அழிவதை எண்ணி பேரிழப்பு ஏற்படா வண்ணம் அவ்வழிவிலிருந்து காக்கும் பொருட்டு போரிட வேண்டாம் என்று அறிவுரைகளை வழங்கி மேலாண்மை செய்துள்ள பாங்கினை அறியமுடிகிறது. இதில் அதியமானை மட்டும் கூறாது இங்கும் 'எம்முளும்' என்றது இருபடையின் வீரத்தையும் உயர்த்திக் கூறும் திறம் அவரது நடுவுநிலைமை போற்றுதற்குரியது. அதியமான் நெடுமான் அஞ்சிக்கு உற்ற நட்பினுக்கு உரியவர் ஔவையார். இவர், புலவராக மட்டுமல்லாமல் ஒரு மேலாண்மைவாதியாகத் திகழ்ந்துள்ளதையும் இங்கு அறியமுடிகிறது.

முற்காலத்தில் முடிவேந்தர்கள் வேற்று மன்னர்களின் மகளை மணக்கும் முறை இருந்தது. இவ்வாறு மணம்புரியும் நிலையில் இருபெரும் வேந்தர்களிடையேயும் இணக்கம் ஏற்படும். மேலும், போரினால் நாட்டில் வாழும் அனைவருக்கும் பேரழிவுகள் ஏற்படாவண்ணம் மேலாண்மை செய்ய வழிவகுத்திருக்கும். சங்ககாலத்தில் மகள் வேண்டிவரும் மன்னர்களுக்கு மகளைக் கொடுத்து திருமணம் நடத்தியதற்கானச் சான்றுகள் கிடைக்கப்பெறவில்லை. மாறாக மகள் வேண்டிவரும் மன்னர்களுக்கு மகள்மறுக்கப்பட்டது. இதன் காரணமாக வெகுண்டெழுந்த மன்னர்கள் மகளையுடைய மன்னனிடம் பகைமையுணர்வு கொண்டனர். அம்மன்னனும் தன்மை எதிர்க்கும் மன்னனை எதிர்த்துப் போரிட்டதைப் புறநானூற்றில் பெரும்பாலான பாடல்கள் பிரதிபலிக்கின்றன. பாரியிடம் மகள் வேண்டிச் சென்ற மூவேந்தர்க்கும் மகள் மறுத்தலால் அவர்கள் பகைமை கொண்டனர். பாரியின் பரம்புமலை முற்றுகையிட்டு போரிட எண்ணிய மூவேந்தரும் பாரியின் அரண்மனைக்குள் புகுந்து போரிட அஞ்சினர். பகைவரிடம் வேள்பாரியின் வீரச்சிறப்பை எடுத்துரைத்து போரை நிறுத்த எண்ணிய கபிலர் அவர்களிடம்,

***"அளிதோ தானே பாரியது பறம்பே***
***நளிகொண் முரசின் மூவிரு முற்றினும்"*** *(புறம்.109: 1-2)*
***"சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி***
***விரையொலி கூந்தனும் விறலியர் பின்வர***
***ஆடினிர் பாடினிர் செலினே***
***நாடுங் குன்று மொருங் கீயும்மே"*** *(புறம்.109: 15-18)*

என்று, முடி மன்னர்களே, நீங்கள் மூவரும் ஒன்று சேர்ந்து யானை, குதிரை முதலிய படைகளைக் கொண்டு வந்து எத்துணை நாள் முற்றுகையிட்டாலும் பாரியின் பறம்பு மலையினைப் கைப்பற்ற முடியாது. இப்பாரியின் நாடு நும் போன்ற அரசர்க்கு அரியது. ஆனால் இரவலர்க்கு மிக எளிது. நீங்கள் பறம்பு மலையைப் பெறவிரும்பினால் வடித்து முறுக்கப்பட்ட நரம்பினையுடைய யாழை வாசித்து மனம் பொருந்தியக் கூந்தலையுடைய நும் விறலியர் பின்வர ஆடியும், பாடியும் செல்வீராயின் அவன் நுமக்கு நாட்டையும், மலையையும் பரிசிலாகத் தருவான். நீங்கள் பாரியின் மலையினை அடை(பெறு)வதற்கு இதுவே சிறந்த வழியாகும் என்று அவர்களிடம் கூறினார்.

மகள்மறுத்தலின் காரணமாகப் போர் நடைபெற்றால் பல்லாயிரக் கணக்கான மக்கள் உயிரிழப்பர் என்பதை உணர்ந்து போர் நடைபெறாமல் தடுக்கும் பொருட்டு பாரியின் வீரச் சிறப்பினைப் பகைவர்கட்கு எடுத்துரைத்ததோடு, பேரழிவு நேராமல் அம்மலையினை அவர்கள் அடைவதற்குரிய வழிகளையும் கூறி மேலாண்மை செய்துள்ளதை மேற்கண்ட பாடலடிகளில் அறியமுடிகிறது. இதேபோல் மற்றொரு பாடலிலும் பாரியின் வீரச்சிறப்பினையும், கொடைச் சிறப்பினையும் கூறிப் போரினைத் தடுத்துள்ளதை,

*"கடந்தடு தானை மூவிருங் கூடி*

*........................................*

*........................................*

*குன்று முண்டுநீர் பாடினிர் செலினே"* (புறம்.110: 1-6)

என்ற பாடலில், வஞ்சியாது எதிர் நின்று கொல்லும் படையினை உடைய மூவேந்தரும் ஒன்று கூடிப் போர் செய்தீராயினும் பறம்பு கொள்வதற்கு அரிது. குளிர்ச்சி பொருந்திய நன்னாடாகிய பறம்பு நாடு முந்நூறு ஊர்களைக் கொண்டது. அம்முந்நூறு ஊர்களையும் பரிசிலர் பெற்றனர். பரிசிலரைப் போன்று நீயிர் பாடினிராய்வரின், யாமும் பாரியும் மட்டுமின்றி பரம்பு மலையும் உண்டு என்பதால் அவனைப் போரினால் வெல்வது கடினம். இரந்து நின்றால் அவன் தன்னையே கொடுப்பான் என்று கூறிப் போரிட வேண்டாம் என்பதனைக் குறிப்பால் உணர்த்தி,

*"அளிதோ தானே பேரிருங் குன்றே*
*வேலின் வேறல் வேந்தர்க்கோ வரிதே*
*நீலத் திணை மலர் புரையு முண்கட்*
*கிணை மகட் கெளிதாற் பாடினள் வரினே"* (புறம்.111: 1-4)

என்று, பறம்பு மலையைக் கொள்ளல் மூவேந்தர்க்கு அரிதாகவும், பாடிவரும் விறலிக்கு எளிதாகவும் இருக்கின்றான். ஆகவே பாரியைப் போரால் வெல்ல முடியாது என்பதை உணர்த்திப் போரினால் ஏற்படும் பேரழிவைத் தடுத்து மேலாண்மை செய்துள்ளார் கபிலர்.

குமணனின் இளவல் இளங்குமணன், அரச வேட்கையால் குமணனின் நாட்டைப் பெற்று, அவனை அழிக்கும் பொருட்டு, அவனது தலையைக் கொண்டு காட்டினால் அவர்கட்கு மிக்க பொருள் தருவதாய்க் கூறினான், ஆதலால் தன் தலையைக் கொய்ய வாளைத் தந்தான் குமணன் என்பதை,

*"பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென்*

*.................................................*

*ஓடாப் பூட்கைநின் கிழமையோற் கண்டே"* (புறம்.165: 10-15)

எனும் பாடலில், அதிகார வேட்கையினால் தன் தமையனையே கொல்லும் அளவிற்குத் துணிந்துள்ளதைக் கண்ட புலவர் பெருஞ்சித்திரனர், குமணனின் வாளைக் கொண்டு சென்று பெருமை பெற்ற பாடிலன் வாடிச் செல்லுதல் என் நாட்டை இழந்தனினும் மிகவும் துன்பமுடையது என எண்ணி, காட்டில் தருவதற்குத் தன்னைக் காட்டிலும் சிறந்த பொருள் இல்லாமையால் தன் தலையை எனக்குத் தரும் பொருட்டு வாளைத் தந்தான். அத்தகைய புறங்கொடாத மேற்கோளை உடைய நின் தமையனைக் கண்டு வென்றிமிக்க மகிழ்ச்சியோடு

யான் நின்னிடத்து வந்தேன் என்று கூறி நிலையில்லாத இவ்வுலகில் தம் புகழைப் பூமியிடத்து நிறுத்திட வேண்டும் என்று உலகியல் அறத்தினை உணர்த்தினான். புலவனின் இச்செயலில் இளங்குமணன் மனம் மாறினான் என்பதை,

"பெருந்தலைச்சாத்தனார் செயல் கண்டு நல்லுணர்வு பெற்ற இளங்குமணன் தன் முன்னோனை நாடி அடைந்து தன் தவற்றிற்கு வருந்தி அவனை நாட்டில் இருத்தி அவன்வழி நின்று ஒழுகும் நற்செயலால் இன்புற்றான். நாடுமுற்றும் நலம் பெருகிற்று"[21] என்ற உரை விளக்கத்தின் மூலம் சங்ககாலப் புலவர்கள் இருபெரும் அரசர்களுக்கிடையே ஏற்பட்ட மோதல்களைச் சந்து செய்துவித்து, போரினால் ஏற்படும் அழிவுகளைத் தடுத்து மேலாண்மை செய்து போர் ஏற்படும் முன்பு பாதுகாத்தனர் என்பதை அறியமுடிகிறது. பிட்டங்கொற்றனைத் தாமோதரனார் பாடிய பாடலில்,

> ***"………………… தெவ்வீர் அவனே***
>
> ***………………………………………***
>
> ***உலைக்கல் லன்ன வல்லா ளன்னே"*** *(புறம்.170: 9-17)*

பகைவர்களே, மலை பொருந்திய நாட்டை உடையவனாகிய, கூரிய வேலுடைய பிட்டனைப் பகையின் பொருட்டு அணுகாதிருப்பீராக. அவன் சிறுகண் யானையின் தந்தத்தில் விளைந்த ஒளி திகழும் முத்தத்தை விறலியர்க்கீந்து நாரைப்பிழிந்தெடுத்த கள்தெளிவைப் பண்பொருந்திய யாழுடைய பாணர் சுற்றத்திற்கு நுகரக் கொடுத்தான். இவ்வாறு தன்னிடத்துப் பரிசில் வேண்டி வந்தோர்க்கு மென்மையுடையவனாவான். ஆனால் பகைவர்க்கு இடும்பை பயன்படுத்துகின்ற வலிய கையையுடைய கொல்லன் உலைக்களத்திலே விளங்கும் உலைக்கல் போலும் வலிய ஆண்மை உடையவன் ஆவான். ஆகையால் அவனைப் பகைக்காதீர் என்று கூறிப் போரினால் பேரழிவு ஏற்படும் என்பதை உணர்த்துமாறு இப்பாடல் அமைந்துள்ளது. மேற்கூறிய விளக்கங்களின் வாயிலாகச் சங்கப் புலவர்கள் போரினால் பேரிடர்கள் ஏற்படாமல் மேலாண்மை செய்து மக்களையும் வளங்களையும் பாதுகாத்தனர் என்பது தெளிவாகின்றது.

## தொகுப்புரை

- எழுத்து மரபினைப் பின்பற்றாது பாணர்கள் தங்களின் இயல்பு மொழியால் நாடோடியாகப் பாடிய பாடல்களைப் "புலவர்" என்னும் புதுமை மரபுத்துவம் தோற்றம் கொண்டதன் காரணமாகத் தமது புலமைத்துவத்தால் ஏட்டில் எழுத முற்பட்டனர். புலவர்கள் தம் சொல்லாற்றலால் சமூகத்தின் செயல்பாடுகளைப் பிரதிபலித்தது மட்டுமின்றி மன்னர்களின் புகழை மேம்படுத்துபவர்களாகவும் செயல்பட்டனர்.
- சங்கப் புலவர்கள் தம் வாழ்வியலுக்குத் தேவையான உணவு, உடை போன்றவற்றிற்கும் பிறரைச் சார்ந்து வாழும் நிலையே காணப்பட்டது. இரவலராகிய புலவர்கள், புரவலர்களாகிய வேளிர்கள், மன்னர்கள், குறுநிலமன்னர்கள் போன்றவர்களைத் தேடி அலைந்தனர். இதன் காரணமாகப் புரவலர்களைப் புகழ்ந்துபாடும் நிலை அச்சமூகத்தில் தேவைப்பட்டது.
- இரந்துவாழும் ஏழ்மை நிலையிலும் புலவர்கள் தம் தாய், மனைவி, மக்கள், சுற்றத்தாருடன் அன்பு நீங்காது வாழ்ந்தனர்.
- இரவலர்கள் தம்மையடைந்த புலவர்களின் தோற்றத்தினை வைத்து அவர்களின் ஏழ்மைத் தன்மையினைக் கருத்தில் கொண்டு யானைகளையும், ஊர்களையும், நிலங்களையும், அணிகலன்களையும் கொடையாக வழங்கினர் என்பதைச் சங்க இலக்கியங்கள் பதிவுசெய்துள்ளன.
- இரவலர்கள் வழங்கிய கொடைகளைச் சங்கப் புலவர்கள் தான் மட்டும் வைத்துக் கொள்ளவில்லை. ஏழ்மை நிலையில் வாழ்ந்த போது தனக்கு உதவியவர்களுக்கும், தன் சுற்றத்தினருக்கும் பகிர்ந்து வாழத் தன் மனைவியர்களைப் பணித்தனர்.
- சங்கப் புலவர்கள் மன்னர்களை உயிராகக் கருதினர். மன்னர்கள் இறந்த போது, தன்னைப் புரப்பவர்கள் இல்லையே என்று வருந்திய நிலையினைச் சங்கப் பதிவுகள் காட்டுகின்றன.
- புலமைத்துவத்தின் அடியொற்றிய, சங்கப் புலவர்கள் இரவல்களைப் பெற்றனர். தன் புலமையை அறியாதவர்களிடமும் தன்னைக் காணாத மன்னர்களிடமும் பரிசில் பெறவில்லை. எத்திசைச் செல்லினும் பரிசில் பெறுவோம் என்ற புலமைச் செருக்குடன் வாழ்ந்துள்ளனர்.
- புலவர்களின் போற்றுதலுக்கு மயங்குபவர்களாகச் சங்க மன்னர்கள் காணப்பட்டனர். புலவர்களால் பாடப்பெறாத மன்னர்களை மக்கள் மதிப்பிற்குரியவர்களாக வணங்காத சூழல் நிலவியுள்ளது. ஆகையால் புலவோரின் சொல்லுக்குச் சில மன்னர்கள் செயலாற்றினர் என்பது புலப்படுகின்றது.

- சங்ககாலத்தில் மன்னர்கள் - புலவர்கள் பெரும்பான்மையும் நட்புறவுகளாவே செயல்பட்டனர். தம் உயிரைப் பெரிதாக எண்ணாது புலவர்களும் மன்னர்களும் நட்புக்கு முதன்மையிடம் அளித்தனர். மேலும் ஒருவரையொருவர் காணாமலும் நட்பு பாராட்டியதன் காரணமாகப் புலவரின் சொல்லுக்குச் செவிமடுத்தனர்.

- கற்பு வாழ்க்கையாகிய அகவாழ்வில் மன்னர்கள் பரத்தமை ஒழுக்கத்தை மேற்கொண்ட பொழுது, அவர்களிடம் சென்று, மனைவியின் இயல்புகளைக் கூறி சந்து செய்விக்கும் வாயில்களாகப் புலவர்கள் செயல்பட்டனர். இதன் மூலம் உறவினைக் காத்து உணர்வுகளை மதித்த நிலையினைச் சங்கப் பாடல்களில் காணமுடிகின்றது.

- புலவர்கள் தம்மையொத்த பிற இரவலர்களாகிய பாணர்கள், விறலியர்கள் போன்றவர்களின் வறுமையைப் போக்கிப் பேரழிவுகள் ஏற்படா வண்ணம், அவர்களுக்கு இரவல் வழங்க வேண்டி மன்னர்களுக்கு அறிவுறுத்தினர்.

- ‘போர்’ என்பதைச் சங்ககாலம் வீரம் என்ற அடைமொழியிட்டதால், வீரத்தின் அடையாளமாகப் போரில் ஈடுபட்டனர். அப்போரில் வீரர்கள், உயிரினங்கள், நாட்டின் வளம் போன்றவற்றின் அழிவை புலவர்கள் செவியறிவுறுத்தி மீண்டும் போர் ஏற்படாமல் மேலாண்மை செய்துள்ளனர்.

- நாட்டின் பொருளாதார வளத்திற்காகச் சங்ககாலத்தில் வரிகள் விதிக்கப்பட்டன. இவ்வாறு விதிக்கப்படும் ‘வரி’ என்பது மக்களின் நிலையறிந்து விதிக்கப்பட வேண்டும். அவ்வாறு விதிக்கப்படவில்லை எனில் அந்நாட்டிற்கும் நாட்டு மக்களுக்கும் பேரழிவினை ஏற்படுத்தும் என்பதைக் கருத்தில் கொண்டு முறையாக வரிவிதிக்க மன்னர்களுக்குச் செவியறிவுறுத்தினர்.

- புலவர், மன்னர்கள் மட்டுமல்லாது அக்காலத்தில் வாழ்ந்த மக்களுக்கும் பல்வேறு வகைகளில் வாழ்வியலை அறிவுறுத்திப் பேரழிவுகளிலிருந்து காத்துள்ளனர்.

- ‘இயற்கை’ என்பது மனித வாழ்வியலின் அடிப்படை. இயற்கையை விடுத்து மனிதர்களால் இயங்க இயலாது என்பதை உணர்ந்த புலவர்கள், இயற்கையைப் போற்றும் விதமாக, தம் பாடல்களில் இயற்கையின் செயல்பாடுகளைப் பதிவு செய்தது மட்டுமின்றி, மன்னர்களை ஆறு, குளங்கள் போன்றவற்றை வெட்டவும் அறிவுறுத்தியுள்ளனர்.

- புலவர்கள் பாணர், விறலியர் போன்ற இரவலர்களின் வறுமை வாழ்வினைக் கருத்தில் கொண்டு, பசிப்பிணியால் ஏற்படும் பேரழிவுகளைப் போக்கும் விதமாக அவர்களை ஆற்றுப்படுத்தி மேலாண்மை செய்துள்ளனர்.

- சங்ககாலம் நிலத்தாலும் சேர, சோழ, பாண்டியர்கள் என்று முடிமன்னர்களின் ஆளுகையாலும் பல்வேறாகப் பிரிந்திருந்தது. இப்பிரிவினால் தம் ஆளுகையினை நிலைநிறுத்தும் வகையில் போர்கள் என்பது தவிர்க்க இயலாத ஒன்றாக மாறியது. இதனைத் தவிர்க்கும் வகையில், மூவேந்தர்களும் ஒன்றிணைந்து செயல்பட வேண்டும் என்பதைச் சங்கப் புலவர்கள் வலியுறுத்தியுள்ளனர்.
- புலவர்களின் அறிவுறுத்தலைக் கேளாது சில நேரங்களில் போர்கள் நிகழும் பொழுது அப்போர்களைத் தவிர்க்கும் நோக்கில் இருபெரும் வேந்தர்களிடையேயும் சந்துசெய்வித்து போரினைத் தடுத்தனர். மேலும், போர்புரிதலின் காரணமாக உயிரினங்களுக்கு ஏற்படும் பேரழிவுகளை எடுத்துக்கூறிப் போரினால் பேரிடர்கள் ஏற்பட்டுவிடாமல் மேலாண்மை செய்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் பதிவுசெய்துள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. பெ. மாதையன், தமிழ் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும். ப. 121
2. அம்மன்கிளி முருகதாஸ், சங்கக் கவிதையாக்கம் மரபும் மாற்றமும். ப. 9
3. க. கைலாசபதி தமிழ் வீரநிலைக் கவிதை. ப. 161
4. அ. தட்சணாமூர்த்தி சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள். ப. 263
5. தமிழண்ணல், பரிசில் வாழ்க்கை. ப. 8
6. ப. பழனியம்மாள், சங்க இலக்கியங்களில் அறக்கோட்பாடு. ப. 105
7. ஞானி (கி. பழனிச்சாமி), செவ்வியல் நோக்கில் சங்க இலக்கியம். ப. 132
8. அ. தட்சணாமூர்த்தி, சங்க இலக்கியம் உணர்த்தும் மனித உறவுகள். ப. 19
9. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை, புறநானூறு (தொகுதி-2). ப. 469
10. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு இலக்கிய கொள்கைகள். ப. 138
11. கதிர். மகாதேவன், ஒப்பிலக்கிய நோக்கில் சங்க இலக்கியம். ப. 75
12. மேலது. ப. 168
13. ஞானி, படைப்பியல் நோக்கில் தமிழ் இலக்கியங்கள். ப. 53
14. வித்துவான் சி. முத்துக்கிருட்டிண நாட்டார், போர் நீக்கிய புலவர்கள். ப. 24
15. இராஜ முத்திருளாண்டி, இலக்கியத்தில் மனித உரிமைகள். ப. 41
16. தமிழண்ணல், அகநானூற்றுக் காட்சிகள். ப. 7
17. பெ. மாதையன், தமிழ் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும். ப. 174
18. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை புறநானூறு (தொகுதி-2). பா. 339
19. க. கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை. ப. 124
20. திருமதி. சிவகாமி சிதம்பரனார் பழந்தமிழர் அரசியல். ப. 34
21. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை புறநானூறு (தொகுதி-1). ப. 455

# முடிவுரை

கி.பி. ஒன்று முதல் கி.பி. மூன்றாம் நூற்றாண்டு வரையான காலகட்டத்தில் தோன்றிய இலக்கியங்கள் சங்க இலக்கியம் எனும் பெயரில் தொகுக்கப்பட்டுள்ளது. காதல், வீரம் என்று அன்றைய காலச் சமூகத்தின் வாழ்வியலைப் பிரதிபலிப்பதாகவே இவ்விலக்கியங்கள் உள்ளன. அறிவியல் வளர்ச்சி முழுமையடையாத காலகட்டமாக இருந்த போதிலும் மக்கள் அறிவின் முதிர்ச்சியால் தங்களுக்கேற்றவாறு இயற்கையாகிய மலைகள், காடுகள், தாவரங்கள், பறவைகள், விலங்கினங்கள் என்று சூழலியலின் பின்புலத்துடன் வாழ்க்கையைக் கட்டமைத்து வாழ்ந்தனர். மேலும், வேட்டையின் காரணமாக விலங்குகளை எதிர்த்துப் போரிட்ட மனிதன், தனியுடைமையின் தோற்றத்தால் மனிதனை எதிர்த்துப் போரிடத் துவங்கினான். இத்தகைய காலச்சூழலில் இயற்கையாலும் மனிதர்களாலும் ஏற்பட்ட பேரழிவுகளைச் சங்கச் சான்றோர்கள் மேலாண்மை செய்து வாழ்ந்துள்ளனர் என்பதைக் கருதுகோளாகக் கொண்டு, சங்க இலக்கியங்களை முதன்மை ஆதாரமாக வைத்து இவ்வாய்வேடு அமையப்பெற்றது.

மேலாண்மை என்பது தமிழர் பண்பாட்டில் இருந்த பொழுதிலும் அதனைத் தனியொரு துறையாக, மேலாண்மையின் தந்தை என்று அழைக்கப்படும் ஹென்றி பேயல் என்ற மேலைநாட்டு அறிஞரால் அறிமுகப்படுத்தப்பட்டு, பின்வந்த அறிஞர்களால் வளர்த்தெடுக்கப்பட்டது. கீழைத்தேய நாடுகளாகிய இந்தியா போன்ற நாடுகளில் இன்று மேலாண்மை கவனிக்கப்பட்டு அதற்கான வரையறையினைக் கொடுத்து ஒரு துறையாக வளர்த்து வருகின்றது. மேலாண்மையை அதன் அகம் சார்ந்து பல்வேறு துறைகளாகப் பகுக்கப்பட்டுள்ளது. மேலாண்மையினைக் கோட்பாட்டு நோக்கில் வளர்த்தெடுக்க முயற்சிக்கும் நிலையில், சங்க இலக்கியம் போன்ற முற்கால இலக்கியங்கள், செய்யுள்கள் போன்றவற்றை மேலாண்மை வழி ஆய்வு செய்யும் பொழுது முறைசார் மேலாண்மை, முறைசாரா மேலாண்மை என்ற வரையறைக்குட்புகுத்தியே ஆய்வு செய்ய இயலுகின்றது. முறைசார் மேலாண்மையில் மேலாளர், பணியாளர், தகவல் தொடர்பு என்ற கட்டமைப்புடன் செயல்படுத்தப்படும். இவ்வாறான படிநிலையின்றி வாழ்வியலின் அடிப்படைத் தேவையினை முன்வைத்து நிகழ்த்தப்படும் எதிர்வினைகள் அனைத்தும் முறைசாரா மேலாண்மையில் அமையும். இவ்வாறாக பேரிடர் மேலாண்மை என்பது, அன்றாட வாழ்வியலின் வினைகளுக்கு (இயற்கை, மனிதன் என்ற நிலைகளில்) எதிராக நிகழ்த்தப்படும் எதிர்வினையாகக் கொள்ளலாம்.

பேரழிவானது அழிவிலிருந்து மாறுபடும் தன்மை என்பது, பாதிப்பின் அளவைப் பொருத்து அமைகின்றது. இயற்கையாலும் மனிதர்களாலும் ஏற்படும் பேரழிவுகள் அனைத்தும் கட்டுக்கடங்காத பாதிப்புகளை ஏற்படுத்தியுள்ளன. மனிதர்களால் ஏற்படும் பேரழிவுகளின் தாக்கம் என்பது இயற்கையால் நிகழும் பேரிடரைவிடக் குறைவானதாகவே உள்ளது.

இன்றைய அறிவியல் வளர்ச்சியும், நேரமின்மையும், அதீத ஆசையும் மனிதர்களை இயற்கையுடன் இணைப்பதில்லை. இயற்கையில் கிடைத்த வளங்களைச் சுரண்டி செயற்கை வளங்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. தம் வாழ்வியலின் தேவைக்கு மட்டுமல்லாது பதுக்கலின் காரணமாகவும் இயற்கை அழிக்கப்படுகின்றது. விலங்குகள் வாழும் இருப்பிடங்களை மனிதன் தன் வசிப்பிடமாக மாற்றும் முயற்சி நிகழ்ந்தேறிக் கொண்டிருக்கின்றது. இங்கு இயற்கைச் சுரண்டல் என்பது பட்டவர்த்தனமாக்கப்பட்டுள்ளது. இதன் காரணமாக பஞ்சபூதங்களின் அனைத்துச் செயல்பாடுகளிலும் பேரிடர் என்பது நிச்சயிக்கப்பட்ட ஒன்றாகும். மேலும், அதிகார வேட்கையால் மனிதர்களால் நிகழ்த்தப்படும் பேரழிவுகளும் இயற்கையைப் பாதிப்படையச் செய்யும் விதமாகவே அமைகின்றது. இவ்வாறு இயற்கையை விடுத்து மனிதன் வாழும் நிலை தொடரும் பொழுது அதனால் ஏற்படும் பேரழிவுகளும் கட்டுக்கடங்காமல் நிகழும் என்பதை விளங்கிக் கொள்ள முடிகிறது.

உலகப் படைப்பாக்கத்தில் முதன்மையானது இயற்கை. இயற்கையின் அமைவுத் தன்மை அதன் செயல்பாடுகள் அனைத்தும் சங்க இலக்கியங்களில் பதிவாகியுள்ளன. இயற்கை அமைவு என்பது பஞ்சபூதங்களாகக் கட்டமைத்து, தம் இயல்புத் தன்மையில் மனித மற்றும் புவியில் உள்ள அனைத்து உயிரினங்களும் வாழ்வதற்குத் தேவையான வளங்களனைத்தையும் வழங்குவதாக அமைகின்றது. அறிவியல் வளர்ச்சியற்ற அன்றையக் காலகட்டத்தில் முடிமன்னர்களின் ஆட்சியமைப்பில் நான்கு எல்லைகளையும் நிலவரையறைகளையும் இயற்கையானது கட்டமைத்துள்ளது. வளர்ச்சியும் மாற்றமும் மனிதன் போன்ற உயிரினங்களுக்கு மட்டுமல்லாது இயற்கைக்கும் உரித்தான ஒன்று. இவ்வாறு இயற்கையானது அடுத்த கட்ட வளர்ச்சியினை அடையும் போதும் தம்மை மாற்றத்திற்குட்பட்டு இயல்புத் தன்மை மாறும் பொழுதும் பேரழிவுகள் என்பது கட்டுக்கடங்காத பாதிப்புகளை ஏற்படுத்துகின்றன. நிலம் - நிலநடுக்கம், (நீர்) மழை – வெள்ளம், தீ – காட்டுத்தீ, வறட்சி, வளி - சூறாவளி, புயல், ஆகாயம் - கோள்களின் மாறுபாடுகள் என்று பஞ்சபூதங்கள் அனைத்தும் பேரழிவுகளை ஏற்படுத்துகின்றன.

சங்க இலக்கியம் கவிதை வடிவிலான இலக்கியம். மேலும், அன்றையச் சமூகம் என்பது காதலையும், வீரத்தையும் முன்னிலைப்படுத்தியதால், இச்சூழலில் கவிதையாக்கம் பெற்ற இலக்கியங்களும் இதனையே பதிவுசெய்துள்ளது. இன்றைய காலத்தில் உருப்பெருகின்ற உரைநடையில் குறிப்பிடப்படும் புள்ளி விபரங்கள் போன்று அன்றைய இலக்கியங்களாகிய கவிதைகளில் பேரழிவுகளால் ஏற்பட்ட பாதிப்புகளைப் புள்ளி விபரங்களாகப் பதிவு செய்யப்படவில்லை. இதன் காரணமாக அக்காலத்தில் ஏற்பட்ட பேரிடர்களை இலக்கியத்தில் காணப்படும் சிறுசிறு குறிப்புகளின் வழி மட்டுமே விளக்க முடிகின்றது. நிலத்தினால் பேரழிவுகள் என்பது புடைபெயர்தல் போன்ற சொல்லாடல்களின்

வழியே அறியமுடிகின்றது. சங்க காலத்தில் மழையினால் ஏற்பட்ட வெள்ளம் பற்றி அதிகமாகப் பதிவுசெய்துள்ளனர். வெப்பத்தின் கொடுமைத் தன்மை என்பது பாலை நிலத்தினை மையமிட்டும், மருதநிலம் போன்ற வளமிக்க நிலங்களில் ஏற்படுத்தும் வறட்சியையும், காடுகளில் காணப்படும் வெப்ப மிகுதியால் காட்டுத்தீயாக மாறுபட்டு ஏற்படுத்தும் பேரழிவுகளையும் பதிவுசெய்துள்ளனர். கடலில் ஏற்படும் அலைகளால் உருவாகும் ஆழிப்பேரலைகள் பற்றியும் பதிவாகியுள்ளது. காற்றின் அதீத தன்மையால் ஏற்படும் சூறாவளி, புயல், புழுதிப் புயல் போன்றவற்றைப் பற்றிய குறிப்புகளும் காணப்படுகின்றன. இதன் மூலம் சங்ககாலத்தில் இயற்கைப் பேரழிவுகள் ஏற்பட்டதையும் அதனால் உயிர்கள் பல அழிந்திருக்கக் கூடும் என்பதையும் அறியமுடிகிறது.

சங்கச் சமூகம் பொதுவுடைமை அடிப்படையாகக் கொண்ட இனக்குழு வாழ்வின் எச்சத்தைப் பிரதிபலிப்பதாக உள்ளது. இங்கு உலகில் உள்ள அனைத்துப் பொருட்களும் அனைவருக்கும் என்ற நிலையில் பங்கீடு செய்யப்பட்டது. வேட்டைப் பொருட்களும், உணவாகிய தினைப் பொருட்களும் பொதுமையாக்கப்பட்டது. ஆநிரை என்பது அச்சமூகத்தின் செல்வச் செழிப்பின் குறியீடாக அடையாளம் காணப்பட்டது. இதன் காரணமாக ஆநிரைப் போர்கள் வாழ்வியலின் இருப்பிற்காக நிகழ்த்தப்பட்டு பின்பு வீரத்தின் சின்னமாக உருப்பெற்றது. போரில் பெற்ற ஆநிரைகளைப் பொதுமன்றத்தில் பாதீடு செய்யபட்ட நிலை மாற்றம் பெற்று, அதிக ஆநிரைகளைப் பெற்ற வீரன் பாதீடு செய்யும் முன்பே கள்ளுக்காக அவ்வாநிரைகளை விற்றான். இதனை மக்களும் ஆரவாரித்து ஏற்றனர். இவ்வாறாகத் தனியுடைமை என்பது தோற்றம் கொள்வதற்கு ஆநிரைகளும் காரணமாக்கப்பட்டதைச் சங்க இலக்கியங்கள் பிரதிபலித்துள்ளன என்பதைக் காணமுடிகிறது.

வளங்களின் அடிப்படையில் ஏற்பட்ட நிலப்பிரிப்பில் குறிஞ்சி, முல்லை நிலங்கள் வளங்குன்றியதாக அடையாளப் படுத்தப்பட்டுள்ளது. வளம் மிகுந்த நிலமாக மருதநிலமும் நெய்தல் நிலமும் காணப்பட்டது. போரில் தலைசிறந்த வீரனாகக் கருதப்பட்டவன் அவ்வளம் பொருந்திய மருதநிலத்தைக் கேட்டுப் பெற்ற பொழுது நிலவுடைமைச் சமூகம் தோற்றம் கொள்வதற்கு வழிவகுத்தது. நிலம் முழுதாளும் வேட்கை ஏற்பட்டதால் போர் என்பது தவிர்க்க இயலாததாகி வேளிர்கள், குறுநில மன்னர்களுடன் போர் நிகழ்த்தப்பட்டது. மன்னனின் மகளை வேண்டிய பொழுது மகள்மறுத்தலின் காரணமாகப் போர் நிகழ்த்தப்பட்டுள்ளது. போரில் இறந்தவர்களின் உறவுடையவர்களும் வஞ்சினம் கூறிப் போர் நிகழ்த்தியுள்ளனர். மேற்கூறியதன் காரணமாக நிகழ்த்தப்பட்ட போரில் வீரர்கள் மட்டுமின்றி யானை, குதிரைப் போன்ற விலங்கினங்களும் பேரழிவுகளைச் சந்தித்தன. போரில் இறந்த மன்னன் மற்றும் மறவர்களின் மனைவியர்களும் உடனிறந்த நிலையினைச் சங்கப் பாடல்களில் பதிவு செய்துள்ளனர். ‘போர்’ என்பது உயிரினங்களுக்குப் பேரழிவுகளை

ஏற்படுத்தியது மட்டுமின்றி போரில் தோல்வியுற்ற நாடுகளின் இயற்கை வளங்களாகிய ஏரி, குளங்கள், வயல் வெளிகள் போன்றவையும் பேரழிவுகளைச் சந்தித்தன. தோல்வியுற்ற நாடுகளில் உள்ள பாதுகாவல் அரண்களாகிய மதில்கள், ஆழிகள் போன்றவற்றை அழித்து, அந்நாட்டில் உள்ள வாழ்வியல் பொருட்களையும் கைப்பற்றி, மக்கள் விலங்குகள் வாழத்தகுதியற்ற நாடாகும் வகையில் மனிதர்கள் பேரழிவுகளை ஏற்படுத்தியுள்ளதைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது. நாட்டை ஆட்சி செய்யும் மன்னனும் மக்களின் நிலையறிந்து வரிவிதிக்கப்படாமையாலும், விலங்குகளைப் போரில் ஈடுபடுத்தப்பட்டமையாலும் பேரழிவுகள் ஏற்பட்டுள்ளன. இயற்கையும் மனிதனும் இணைந்து வாழ்ந்த நிலை மாற்றம் பெற்று, தம் தேவைக்காக இயற்கையை அழித்துப் பேரழிவுகளை ஏற்படுத்திய நிலையை அறியமுடிகிறது.

மேலாண்மை என்பதற்குப் பல்வேறு நிலைகளில் விளக்கமளிக்கப்பட்டாலும், செயல்பாட்டின் அடிப்படையில் முறைசார் மேலாண்மை, முறைசாரா மேலாண்மை என்ற இருநிலைகளில் இலக்கியத்தினை ஆய்வு செய்வதாகவே இவ்வாய்வேடு அமைகின்றது. பேரழிவுகள் என்பது இயற்கையாலும், மனிதர்களாலும் ஏற்பட்டிருப்பினும் அதற்கான மேலாண்மை நடவடிக்கை என்பது மனிதர்களால் நிகழ்த்தப்படுவதால், இவ்விரு பேரழிவுகள் சார்ந்த மேலாண்மை ஒரே இயலில் விளக்கப்பட்டுள்ளது.

சங்கத் தமிழர்கள் பகிர்ந்துண்டு, தனக்கென வாழாது பிறர்நலன் கருதி வாழ்ந்த நேரிய வாழ்வினை உடையவர் என்பதன் மூலம் சங்கச் சான்றோர்கள் சிறந்த மேலாண்மைவாதிகளாகச் செயல்பட்டுள்ளனர் என்பது புலப்படுகின்றது.

இயற்கையாகிய மழையின் காரணமாக நிலம் வளம் பெற்று, மக்கள் வறட்சியின் காரணமாக ஏற்படும் பசிப்பிணியிலிருந்து மேலாண்மை செய்து கொண்டனர். மழை பெய்யும் காலங்களில் அம்மழையினை ஆறுகளை வெட்டுவித்து முறைப்படி அனைத்து நிலங்களும் வளம் பெறும் வகையில் பயன்படுத்தியுள்ளனர். மேலும் குளங்கள், ஏரிகளை வெட்டி நீரினைத் தேக்கியுள்ளனர். இவ்வாறு தேக்கப்பட்ட நீரினால் பேரழிவுகள் ஏற்படா வகையில் அணைகளைக் கட்டியும் அவ்வணைகளைப் பாதுகாக்கும் பொருட்டுக் காவலாட்களையும் நியமித்துள்ளனர். ஆற்று வளமறியாத வன்நிலங்களில் மழையின் காரணமாகவே வளம் பெற்றுள்ளது. மழையில்லாக் காலங்களில் நிலத்தடி நீரின் தன்மையறிந்து கிணறுகளை வெட்டி நீரைப் பயன்படுத்திச் சங்கச் சான்றோர்கள் நீரியல் மேலாண்மை செய்துள்ளனர். கடல் நீரில் காற்றின் மூலம் மரக்கலங்களைப் பயன்படுத்தி இயற்கையை மேலாண்மையைச் செய்துள்ளது மட்டுமின்றி பிற நாடுகளுடன் வணிகத் தொடர்பை ஏற்படுத்திப் பொருளியல் மேலாண்மை செய்துள்ளனர் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

வேட்டைத் தொழிலில் இருந்து வேளாண்மைத் தொழிலுக்கு மாறுபட்ட நிலையில் உற்பத்திக் கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். நிலத்தை உழுது நீரினை முறைப்படிச் செலுத்திப் பயிர்ப்பெருக்கத்தை ஏற்படுத்தினர். விளைவித்தப் பயிர்களைப் பிற உயிரினங்களிடமிருந்து பாதுகாத்து, அறுவடை செய்து தன் தேவைக்கு மீதமுள்ளவற்றைக் குதிர்கள் மூலம் சேமித்து வறட்சி போன்ற காலங்களில் பயன்படுத்தியுள்ளனர் என்பது தெரியவருகிறது.

சங்ககால மக்கள் தங்கள் இருப்பிடங்களைப் பாதுகாப்பானதாகவும், உயரமான இடங்களிலும் அமைத்துள்ளனர். மேலும், வானநூல் கற்றவர்களின் துணைகொண்டு அழிவுகள் ஏற்படாதவாறு கட்டடங்களைக் கட்டியுள்ளனர்.

சங்ககாலத்தில் நாட்டை ஆட்சி செய்த மன்னர்கள் சிறந்த மேலாண்மைவாதிகளாகச் செயல்பட்டுள்ளனர். மன்னர்களின் செயல்பாடுகள் அனைத்தும் முறைசார்ந்த மேலாண்மையின் கீழ் நிகழ்த்தப்பட்டது. நிர்வாகத்தின் பொருட்டு சிறு சிறு நாடுகளாகப் பிரித்தனர். தன் ஆளுகையின் கீழ் அமைச்சர்கள், நாற்பெருங்குழுக்கள், நால்வகைப்படைகள் போன்றவற்றை அமைத்துள்ளனர். காவல் அரண்கள், மதில்கள், காவற்காடுகள், காட்டரண்கள், ஆழிகள் போன்றவற்றையும் அமைத்து, பகைவர்களால், தன் நாட்டிற்கும் தன்நாட்டில் உள்ள உயிரினங்களுக்கும் பேரழிவுகள் ஏற்படாது மேலாண்மை செய்துள்ளனர். நாட்டின் பொருளாதாரத்தைக் கணக்கில் கொண்டு மக்களின் நிலையறிந்து பல்வேறு வரிகள் விதித்தனர். சங்ககாலத்தில் விளிம்பு நிலையில் வாழ்ந்த புலவர்கள், பாணர்கள், விறலியர்கள் போன்றவர்களின் ஏழ்மையினையும், வறட்சி போன்ற காலங்களில் ஏற்படும் வறுமை, பசி போன்றவற்றையும் மன்னர்கள் இரவலாகிய கொடைகள் வழங்கி மேலாண்மை செய்துள்ளனர் என்பது தெரியவருகின்றது.

நிலத்தின் தன்மையில் அமைந்த வளங்கள் ஒரு பகுதிகளில் மட்டும் அனுபவிக்காது வளங்களைப் பகிர்ந்து மேலாண்மை செய்துள்ளனர். இயற்கையில் வானில் அமையப்பெற்ற கோள்களின் நிலையை அறிந்து அதன் இயல்புத் தன்மைக்கேற்ப வறட்சி, வெள்ளம் போன்றவற்றினால் ஏற்படும் பேரழிவுகளிலிருந்து மேலாண்மை செய்துள்ளனர்.

உலக உருவாக்கம் என்பது பல்வேறு ஊழிகளால் ஏற்படுத்தப்பட்டு இறுதியில் ஒழுங்கு நிலையடைந்துள்ளது. இயற்கையான பஞ்சபூதங்கள், வளங்கள் ஆகியவற்றின் செயல்பாடுகள் அனைத்தும் ஒன்றின் தொடர்ச்சியாகவும், ஒன்று மற்றொன்றை இயக்குவதாகவும் அமைந்துள்ளது. மழையானது சூரியன், கடல் நீர், காற்று என்று இணைந்த சுழற்சியின் காரணமாக உருவாகின்றது. இவ்வாறு இயற்கை தன்னுள் மேலாண்மையை நிகழ்த்துகின்றன.

சங்கச் சான்றோர்கள் இயற்கையினாலும் மனிதர்களாலும் பேரழிவுகள் ஏற்படும் காலங்களில் புலம்பெயர்வின் மூலம் தங்களையும் தங்களின் உடைமைகளையும் பாதுகாத்து மேலாண்மை செய்துள்ளனர். இயற்கையினைத் தங்களின் உயிராகக் கருதினர். மரத்தை மட்டுமல்லாது மரங்களின் கிளைகளை வெட்டுவதையே பாவமாகக் கருதியுள்ளனர் என்பது விளங்குகின்றது. இதன் காரணமாகத் தாவரங்களைத் தங்களின் அடிப்படைத் தேவைகளுக்கு மட்டுமே பயன்படுத்தியுள்ளனர். ஆறு, கடல் போன்ற கழிமுகப்பகுதிகளில் தாவரங்களை வளர்த்து வெள்ளம், பேரலைகளால் பாதிப்புகள் ஏற்படாதவாறு மேலாண்மை செய்துள்ளனர். விலங்குகளைத் தங்களின் இல்லங்களில் வளர்த்தனர். அவ்விலங்குகளின் இறப்பிற்கு வருந்தும் நிலையும் சங்க இலக்கியத்தில் பதிவுசெய்யப்பட்டுள்ளது. இவ்வாறு சங்கச் சான்றோர்கள் இயற்கையின் வாயிலாகவும் மனித ஆளுகையாலும் ஏற்பட்ட பேரழிவுகளை, அறிவியல் வளர்ச்சியற்ற காலத்தில் முறைசார் மேலாண்மை, முறைசாரா மேலாண்மை என்ற நிலைகளில் மேலாண்மை செய்ததை சங்க இலக்கியப் பதிவுகளின் வாயிலாக அறியமுடிகிறது.

சமூக இயக்கத்தினை வாய்மொழிப் பாடல்களாகக் கருத்துருப்பெறச் செய்தவர்களில் முதன்மையானவர்கள் பாணர்களே. புலமைத்துவத்தின் பின்னணியில் மாசில்லாது நூல்களைக் கற்றுத் தேர்ந்தவர்களே 'புலவர்கள்' என்று புலவர்களுக்கான இலக்கணத்தைக் கட்டமைத்தனர். இவ்வாறு கல்விப் புலமை பெற்ற புலவர்களால் ஏட்டில் எழுதப்பட்டு 'இலக்கியமாகப்' படைப்பாக்கம் பெற்றது. கற்றறிந்த புலவர்களால் பாணர்கள் புறந்தள்ளப்பட்டனர். இதனால் குறிப்பிட்ட சில புலவர்கள் மன்னர்களின் அன்பிற்குரியவர்களாக விளங்கியதையும் சங்ககாலம் பிரதிபலிக்கின்றது.

சங்கப் புலவர்கள் தம் சொல்லாற்றலாலும் அறிவுத் திறத்தாலும் இலக்கியங்களைப் படைத்தனர். செம்மாந்த அறிவு நுட்பம் பெற்றவர்களாக இருப்பினும் இரவல் வாழ்வினை மேற்கொண்டனர் என்பதற்குச் சான்றுகள் கிடைத்துள்ளன. அன்றாட வாழ்வியலுக்குத் தேவையான உணவு, உடை போன்றவற்றிற்கும் இரவல் மக்களைத் தேடித்திரிந்த நிலையினைச் சங்க இலக்கியங்கள் பதிவுசெய்துள்ளன. புலவர்களின் வறுமை சூழ்ந்த பரிசில் வாழ்விலும் 'அன்பு' என்பது நீங்கா இடம்பிடித்துள்ளது. மன்னர்கள், புலவர்களின் வறுமையினை அவர்களின் தோற்றத்தைக் கண்டு தேவையைப் போக்கினர். பரிசிலாகக் கிடைத்த அணிகலன்களை இரவலர்களுக்கு அணியும் இடம் தெரியாமல் இருந்துள்ளனர். இரவலர்களிடமிருந்து பெற்ற பரிசில்களைத் தான் மட்டுல்லாது தம்மைப் போன்ற பிறருக்கும் வழங்க புலவர்களால் அவர்களின் மனைவியர்கள் பணிக்கப்பட்டதை நோக்கும் பொழுது, சங்க காலத்தில் புலவர்களின் விளிம்பு நிலையினையும், அவர்களிடமிருந்தே பெற்று வாழும் மற்றொரு சமூகம் இருந்ததையும் இலக்கியப்பதிவுகள் காட்டுகின்றன.

பரிசில் வாழ்விலும் தங்களின் தன்மானத்தை இழந்துவிடவில்லை. புலவர்கள் தங்களின் புலமை அறிந்து அதற்கேற்ப கொடை வழங்க மன்னர்களிடம் அறிவித்தனர். சங்ககாலத்தில் மன்னர்கள் அவர்களின் புலமையை அறிந்து நட்பு பாராட்டினர் என்பதும் இவர்களின் நட்பின் காரணமாக மன்னர்களின் அகவாழ்வில் நிகழும் கூடா ஒழுக்கத்தையும் கடிந்தனர் என்பதும் விளங்கிக் கொள்ளப்படுகிறது.

இயற்கையின் காரணமாக ஏற்படும் வறுமை போன்ற பேரிடர்கள் ஏற்படாது மன்னர்களிடம் செவியறிவுறுத்தி வறுமையைப் போக்கினர். மனித ஆளுகை வேட்கையினால் ஏற்பட்ட பேரழிவுகளை எடுத்துக்கூறி மீண்டும் போரினால் பேரழிவுகள் ஏற்படாமல் மேலாண்மை செய்துள்ளனர். மக்களின் வாழ்வியலைக் கருத்தில் கொண்டு வரிகளை விதிக்க புலவர்கள் மன்னர்களுக்கு அறிவுறித்தினர். மக்களும் அறத்தினை முன்வைத்து வாழ புலவர்களால் அறிவுறுத்தப்பட்டனர்.

இயற்கையால் பேரழிவுகள் ஏற்படாமல் இருக்க ஆறு, குளங்களை வெட்ட மன்னர்களுக்குச் செவியறிவுறுத்தினர். பாணர், விறலியர்கள் போன்ற பரிசில் மக்களுக்கு அவர்களின் ஏழ்மை கருதி கொடை வழங்கும் மன்னர்களிடம் ஆற்றுப்படுத்தினர். இதன் வாயிலாக வறுமைத் துயரால் ஓரினமே அழிவதைத் தடுத்து மேலாண்மைச் செய்துள்ளனர். ஒற்றுமையின் உன்னதத்தை அறிந்து முடிவேந்தர்கள் மூவரும் ஒன்றிணைந்து செயல்பட வற்புறுத்தியுள்ளனர். அவ்வாறு புலவர்களின் சொல்கேளாமல் நிகழ்ந்தப் போரினை உணர்ந்து, போர் ஏற்படும் முன்பே சந்து செய்தும், தூது சென்றும், போரினால் இருபெரும் வேந்தர்களின் நாடுகளிலும் ஏற்படும் பேரழிவுகளை எடுத்துக் கூறியும் போரானது ஏற்படும் முன்பே மேலாண்மை செய்துள்ளனர். புலவர்களின் புலமைக்கும் அறிவுநுட்பத்திற்கும் சங்க மன்னர்கள் மதிப்பளித்தனர் என்பதற்குச் சான்று சங்க இலக்கியப் பாடல்களேயாகும். புலவர்களுடன் நட்பு பாரட்டியதால் அவர்களின் அறிவுறுத்தலுக்குச் செவிசாய்த்தனர். இவ்வாறு சங்கப் புலவர்கள் தம் அறிவுநுட்பத்தினால் இயற்கையாலும் மனிதர்களாலும் ஏற்பட்டப் பேரழிவுகளைச் சூழலை முன்வைத்து சிறந்த மேலாண்மைவாதிகளாகச் செயல்பட்டுள்ளதை அறிந்து கொள்ளப்படுகிறது.

## மேலாய்வுக்கான களங்கள்

சங்க இலக்கியம் மட்டுமல்லாது பிற்கால இலக்கியங்களிலும் பேரிடர் மேலாண்மை பற்றி ஆய்வு செய்தல்.

மேலாண்மை என்பதனை அறிவியலுடன் இணைத்து மேலும் ஒரு நுட்பமான ஆய்வினை சங்க இலக்கியங்களில் மேற்கொள்ளலாம்.

மேலாண்மை என்பதனை கோட்பாடாகக் கட்டமைக்கும் விதத்தில் பல்வேறு இலக்கியங்களைக் கொண்டு ஆய்வினை மேற்கொள்ளலாம்.